# المنهج التعليمي

**أعده وترجمه للغة التاميلية**

جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي

**الطبعةالرابعة: ١٤٤٢/٨هـ**

ح **شعبة توعية الجاليات بالزلفي، ١٤٢١هـ**

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

شعبة توعية الجاليات بالزلفي

المنهج التعليمي – الزلفي

٢١٨ ص؛ ١٧ × ٢٤ سم

ردمك : ٠–٧٧–٨١٣–٩٩٦٠

(النص باللغة التاميلية )

١ – الإسلام – مبادىء عامة أ– العنوان

ديوي ٢١١ ٢١٠٠٧٠٨

رقم الإيداع: ٢١٠٠٧٠٨

ردمك : ٠–٧٧–٨١٣–٩٩٦٠

# முன்னுரை

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரித்தாகுக! சாந்தியும் அருளும் நபி (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தினர் மற்றும் தோழர்கள் மீதும் உண்டாவதாக!

சுல்பியிலுள்ள ஜாலியாத்- வெளிநாட்டவர் அழைப்பு மையம் இந்தப் பாடத்திட்டத்தை சமர்ப்பிப்பதில் பெறுமையடைகிறது. எல்லாம் வல்ல அல்லாஹ் இதன் மூலம் மக்களுக்குப் பலன் தருமாறும் இப்பணியை அவனது திருமுகத்துக்காகவே ஆக்கி அதனை ஏற்றுக் கொள்ளுமாறும் அவனிடம் வேண்டுகிறோம்.

இந்தப் பாடத்திட்டத்தை மிக எளிய நடையில், சுருக்கமாகவும் அதே நேரத்தில் இஸ்லாமிய சட்டதிட்டங்களை அதனூடே இலகுவான முறையில் விளக்கும் வண்ணம் அமைத்துத் தருவதற்கு பெரிதும் அக்கறை காட்டியிருக்கிறோம்.

மேலும் ஜாலியாத்- வெளிநாட்டவர் அழைப்பு மையங்கள் மற்றும் இஸ்லாமிய அழைப்பு மையங்களில் உள்ளவர்களும் குடும்பத்தினருக்கும் சமுதாயத்திற்கும் கற்றுக் கொடுக்க வேண்டுமென்ற அக்கறையுள்ளவர்களும் தங்களுத் தேவையான விஷயங்களை இதில் பெற்றுக் கொள்வார்கள் என்றே எதிர்பார்க்கிறோம்.

***வெளிநாட்டவர் அழைப்பு மையம்***

சுல்பி, சவூதி அரேபியா

# أصول العقيدة

## இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கை

### தவ்ஹீதும் அதன் வகைகளும்

தவ்ஹீத் என்பது அல்லாஹ்வுக்கு மட்டும் சொந்தமான விஷயங்களிலும் அல்லாஹ்வுக்கு அவசியமான வணக்க வழிபாடுகளிலும் அவனை ஒருமைப் படுத்துவதாகும்.

﴿وَمَا خَلَقْتُ الجِنَّ وَالإِنْسَ إِلَّا لِيَعْبُدُونِ﴾ [ الذاريات:٥٦]

அல்லாஹ் கூறுகிறான்: "ஜின்னையும் மனிதனையும் நான் படைத்தது- என்னை வணங்குவதற்காகவே தவிர வேறில்லை." (51:56)

﴿وَاعْبُدُوا اللهَ وَلَا تُشْرِكُوا بِهِ شَيْئًا﴾ [النساء:٣٦]

அல்லாஹ்வை வணங்குங்கள், அவனுக்கு எதையும் இணையாக்காதீர்கள். (4:36)

தவ்ஹீத் மூன்று வகைப்படும். தவ்ஹீதுர் ருபூபிய்யா, தவ்ஹீதுல் உலூஹிய்யா, தவ்ஹீதுல் அஸ்மா, வஸ்ஸி∴பாத்.

### தவ்ஹீதுர் ருபூபிய்யா

தவ்ஹீதுர் ருபூபிய்யா என்பது இவ்வுகத்தைப் படைத்து, நிர்வகிப்பதில் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவதாகும். அவனே உணவளிப்பவன், உயிர்ப் பிப்பவன், மரணமடையச் செய்பவன்; வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அவனுக்கே உரியது.

﴿هَلْ مِنْ خَالِقٍ غَيْرُ اللهِ يَرْزُقُكُمْ مِنَ السَّمَاءِ وَالأَرْضِ لَا إِلَهَ إِلَّا هُوَ فَأَنَّى تُؤْفَكُونَ﴾ [فاطر:٣]

"வானத்திலிருந்தும் பூமியில் இருந்தும் உங்களுக்கு உணவளிக்கின்ற படைப் பாளன் அல்லாஹ்வை தவிர வேறு யாரும் உண்டா? வணக்கத்திற்குரியவன் அவனைத் தவிர வேறு யாருமில்லை." (35:3) என அல்லாஹ் கூறுகிறான்.

﴿تَبَارَكَ الَّذِي بِيَدِهِ المُلْكُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ﴾ [ الملك:١]

"எவனது கைவசம் (இப்பேரண்டத்தின்) ஆட்சி இருக்கிறதோ அவன் பாக்கிய மிக்கவன். அவன் எல்லாப் பொருட்கள் மீதும் பேராற்றல் உடையவன்." (67:1)

அல்லாஹ்வின் ஆட்சி இப்பேரண்டத்திலுள்ள அனைத்தையும் உள்ளடக்கிய ஆட்சியாகும். அதில் அவன் விருப்பம் போல் ஆட்சி செய்வான்.

நிர்வகிப்பதில் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துதல் என்பது அவன் மட்டுமே அனைத்துப் படைப்பினங்களையும் நிர்வகிப்பவன் என்று நம்புவதாகும்.

﴿أَلَا لَهُ الخَلْقُ وَالأَمْرُ تَبَارَكَ اللهُ رَبُّ العَالَمِينَ﴾ [الأعراف:٥٤]

அல்லாஹ் கூறுகிறான்: "அறிந்துகொள்ளுங்கள்! படைத்தலும், ஆணையிடும் அதிகாரமும் அவனுக்கே உரியன! அகில உலகத்துக்கும் அதிபதியாகிய அல்லாஹ் பாக்கியம் பொருந்தியவன்." (7:54)

இதுதான் எல்லாப் படைப்பினங்களையும் உள்ளடக்கிய நிர்வகித்தல்!

மனிதர்களில் சொற்பமானவர்களைத் தவிர வேறு யாரும் இந்த வகைத் தவ்ஹீதை நிராகரிக்கவில்லை. அவர்களும்கூட வெளிப்படையில் நிராகரித் தார்களே தவிர அவர்களின் உள்மனங்களில் அதனை ஏற்றுக் கொள்ளவே செய்தனர்.

﴿وَجَحَدُوا بِهَا وَاسْتَيْقَنَتْهَا أَنْفُسُهُمْ ظُلْمًا وَعُلُوًّا﴾ [النمل:١٤]

"அவர்களது உள்ளங்கள் அவற்றை உறுதியாக நம்பியிருந்தும் அநியாய மாகவும் ஆணவமாகவும் அவற்றை மறுத்தனர்" (27:14) என்று அல்லாஹ் கூறுவதுபோல.

இவ்வாறு அதனை அவர்கள் ஏற்றுக்கொள்வது அவர்களுக்கு எந்தப் பலனையும் அளித்திடாது. ஏனெனில் இணைவைப்பவர்கள் அதனை ஏற்றுக் கொண்டது அவர்களுக்கு எந்தப் பலனையும் அளிக்கவில்லை. அவர்களைப் பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்:

﴿وَلَئِنْ سَأَلْتَهُمْ مَنْ خَلَقَ السَّمَاوَاتِ وَالأَرْضَ وَسَخَّرَ الشَّمْسَ وَالقَمَرَ لَيَقُولُنَّ اللهُ فَأَنَّى يُؤْفَكُونَ﴾ [ العنكبوت:٦١]

"வானங்களையும் பூமியையும் படைத்தவனும், சூரியனையும் சந்திரனையும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவனும் யார்?" என்று அவர்களிடம் நீர் கேட்டால், "அல்லாஹ்" என்று கூறுவார்கள். அப்படியாயின் எவ்வாறு அவர்கள் திசை திருப்பப்படுகிறார்கள்? (29:61)

### தவ்ஹீதுல் உலூஹிய்யா

எல்லா வகையான வணக்க வழிபாடுகளையும் அல்லாஹ்வுக்கு மட்டுமே செலுத்துவதாகும். எவ்வாறெனில் மனிதன் அல்லாஹ்வுடன் வேறு எவரையும் கடவுளாக ஏற்படுத்தி அவரை வணங்கக்கூடாது; அவரின் பக்கம் நெருக்கத்தைத் தேடக்கூடாது. தவ்ஹீதின் வகைகளில் இதுதான் மிக முக்கியமானதாகும். இதற்காகத் தான் அல்லாஹ் மனிதர்களைப் படைத்தான்.

﴿وَمَا خَلَقْتُ الجِنَّ وَالإِنْسَ إِلَّا لِيَعْبُدُونِ﴾ [ الذاريات:٥٦]

“ஜின்னையும் மனிதனையும் நான் படைத்தது- என்னை வணங்குவதற்காகவே தவிர வேறில்லை” (51:56)

அவன் தூதர்களை அனுப்பியதும், வேதங்களை அருளியதும் இந்த தவ்ஹீதுக் காகத்தான்.

﴿وَمَا أَرْسَلْنَا مِنْ قَبْلِكَ مِنْ رَسُولٍ إِلَّا نُوحِي إِلَيْهِ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا أَنَا فَاعْبُدُونِ﴾ [الأنبياء:٢٥]

“(நபியே!) உமக்கு முன் நாம் அனுப்பிய ஒவ்வொரு தூதரிடமும் “வணக்கத் திற்குரியவன் என்னைத் தவிர வேறு யாருமில்லை; எனவே என்னையே வணங்குங்கள்” என நாம் வஹி அறிவிக்காமல் இல்லை.” (21:25)

தூதர்கள் அழைப்பு விடுத்தபோது இணைவைப்போர் ஏற்க மறுத்ததும் இந்தத் தவ்ஹீதைத்தான்.

﴿قَالُوا أَجِئْتَنَا لِنَعْبُدَ اللهَ وَحْدَهُ وَنَذَرَ مَا كَانَ يَعْبُدُ آبَاؤُنَا فَأْتِنَا بِمَا تَعِدُنَا إِنْ كُنْتَ مِنَ الصَّادِقِينَ﴾ [الأعراف:٧٠]

“எங்கள் முன்னோர்கள் வணங்கி வந்ததை விட்டுவிட்டு அல்லாஹ்வை மட்டும் நாங்கள் வணங்க வேண்டும் என்பதற்காக எங்களிடம் நீர் வந்திருக்கிறீரா? நீர் உண்மையாளராக இருந்தால் எங்களுக்கு நீர் எச்சரிப்பதை எங்களிடம் கொண்டுவாரும்” என்று அவர்கள் கூறினார்கள். (7:70)

எனவே வணக்கங்களில் எதையும் அல்லாஹ் அல்லாதவருக்குச் செய்யக் கூடாது. அல்லாஹ்வுக்கு நெருக்கமான மலக்கிற்கோ அல்லாஹ்வால் அனுப்பப் பட்ட தூதருக்கோ நல்லடியார்களுக்கோ இன்னும் படைப்பினங்களில் வேறு எவருக்கும் செய்வது கூடாது. ஏனெனில் வணக்கம் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியதாகும்.

**தவ்ஹீத் அஸ்மா, ஸி:ஃபாத்**

இது அல்லாஹ் தனக்கு என்னென்ன பெயர்கள், பண்புகள் இருப்பதாகக் கூறியுள்ளானோ அல்லது அவனுடைய தூதர் அவனுக்கு என்னென்ன பெயர்கள், பண்புகள் இருப்பதாகக் கூறியுள்ளார்களோ அவற்றை நம்புவதாகும் மேலும் அவற்றை மாற்றாமல், மறுக்காமல், எந்த விதத்தில் என விவரிக்காமல், உவமைப்படுத்தாமல் அவற்றிற்குரிய எதார்த்த நிலையில்- அவனது மகத்து வத்திற்கு ஏற்ற விதத்தில் அப்படியே அல்லாஹ்வுக்குக் கொடுப்தாகும்.

அதுபோல அல்லாஹ் தனக்கு என்னென்ன பெயர்கள், பண்புகள் இல்லை யெனக் கூறியுள்ளானோ அல்லது அல்லாஹ்வுடைய தூதர் அல்லாஹ்வுக்கு என்னென்ன பெயர்கள், பண்புகள் இல்லையெனக் கூறியுள்ளார்களோ அவற்றை அவனுக்குக் கொடுக்காமல் இருப்பதாகும். எது விஷயத்தில் அல்லாஹ்வும்

அவனது தூதரும் எதுவும் சொல்லவில்லையோ அது விஷயத்தில் நாமும் எதுவும் சொல்லாமல் அப்படியே விட்டுவிட வேண்டும்.

(**மாற்றுதல்** என்பது அல்லாஹ்வுக்குரிய தன்மையை அதன் வெளிப்படையான அர்த்தத்தை விட்டும் எந்த ஆதாரமுமின்றித் திருப்புவதாகும். **மறுத்தல்** என்பது அல்லாஹ்வுக்கு அவசியமான பெயர்களையோ தன்மைகளையோ அல்லது அவற்றில் சிலவற்றையோ நிராகரிப்பதாகும். **விவரித்தல்** என்பது அல்லாஹ்வின் பண்புகளை உள்ளத்தால் விவரித்துக் கூறுவது- நம்புவது அல்லது நாவால் விவரித்துக் கூறுவதாகும். உதாரணமாக அல்லாஹ்வுடைய கை இன்ன விதத்தில் இருக்கிறது என்று கூறுவதாகும். **உவமைப்படுத்துதல்** என்பது அல்லாஹ்வின் தன்மைகளை படைப்பினங்களின் தன்மைகளுடன் ஒப்பிடுவதாகும். அல்லது அல்லாஹ்வின் தன்மைகள் படைப்பினங்களின் தன்மைகளுக்கு ஒப்பானது என நம்புவதாகும்.)

அல்லாஹ்வின் அழகிய பெயர்களிலிருந்து இதற்கு உதாரணமாவது: அல்லாஹ் தனக்கு ஹய்யுல் கய்யூம்- நித்திய ஜீவன், பேரண்டம் முழுவதையும் நன்கு நிர்வகிப்பவன் எனப் பெயர் சூட்டியுள்ளான். எனவே நாம் ஹய்யு என்பது அல்லாஹ்வின் பெயர்களில் ஒன்று என்று நம்புவது கடமையாகும். அத்துடன் இப்பெயரில் அடங்கியுள்ள தன்மையை நம்புவதும் அவசியமாகும். அதுதான் பரிபூரணமான ஜீவிதம். அதற்கு, “முன்பு இல்லை” என்ற நிலையும் கிடையாது. “பின்பு அழிவு” என்ற நிலையும் இருக்காது.

இன்னும் அல்லாஹ் தனக்கு ஸமீ..- கேட்பவன் எனப் பெயர் சூட்டியள்ளான். நாம் ஸமீ.. என்பது அல்லாஹ்வின் திருப்பெயர்களில் ஒன்றென நம்புவதும், கேட்பது அவனுடைய பண்புகளில் ஒரு பண்பு எனவும், அவன் கேட்கிறான் எனவும் நம்புவது அவசியமாகும்.

அல்லாஹ்வின் பண்புகளிலிருந்து இதற்கு மற்றொரு உதாரணம், அல்லாஹ் கூறுகிறான்:

﴿ وَقَالَتِ الْيَهُودُ يَدُ اللهِ مَغْلُولَةٌ غُلَّتْ أَيْدِيهِمْ وَلُعِنُوا بِمَا قَالُوا بَلْ يَدَاهُ مَبْسُوطَتَانِ يُنْفِقُ كَيْفَ يَشَاءُ ﴾ [المائدة:٦٤]

“அல்லாஹ்வின் கை கட்டப்பட்டுள்ளது என்று யூதர்கள் கூறுகின்றனர். அவர்களின் கைகளே கட்டப்பட்டுள்ளன. இவ்வாறு கூறியதன் காரணமாக அவர்கள் சபிக்கப்பட்டனர். மாறாக அவனது இரு கைகளும் விரிக்கப்பட்டே உள்ளன. அவன் நாடியவாறு வழங்குவான்.” (5:64)

தாராளமாக வாரி வழங்கக்கூடிய இரு கைகள் தனக்கு இருப்பதாக அல்லாஹ் கூறியுள்ளான். நாமும் அவ்வாறே அருளை அள்ளி வழங்கக்கூடிய இரு கைகள்

அல்லாஹ்வுக்கு உள்ளன என்று நம்புவது கடமையாகும். எனினும் நமது உள்ளத்தில் அதற்கொரு வடிவத்தை கற்பனை செய்வதோ, அவ்விரு கைகளும் இன்ன விதத்தில் உள்ளன என்று நாவால் மொழிவதோ, படைப்பினங்களின் கைகளுடன் அவ்விரண்டையும் ஒப்பிடுவதோ கூடாது. ஏனெனில்

﴿لَيۡسَ كَمِثۡلِهِۦ شَيۡءٌۖ وَهُوَ ٱلسَّمِيعُ ٱلۡبَصِيرُ﴾ [الشُّورى:١١]

"அவனைப்போல் எதுவுமில்லை. அவன் செவியுறுபவன், பார்ப்பவன்"(42:11) என்று அல்லாஹ் கூறுகிறான்.

இந்தத் தவ்ஹீத் பற்றிய சுருக்கமான கருத்து என்னவெனில் அல்லாஹ்வும் அவனது தூதரும் அல்லாஹ்வுக்கு என்னென்ன பெயர்கள் குணங்கள் இருப்பதாகக் கூறியுள்ளார்களோ அவற்றை மாற்றாமல், மறுக்காமல், உவமைப் படுத்தாமல் எந்த விதத்தில் என விவரிக்காமல் அப்படியே அல்லாஹ்வுக்குக் கொடுப்பதும், என்னென்ன பெயர்கள் குணங்கள் இல்லையெனக் கூறியுள் ளார்களோ அவற்றை அவனுக்குக் கொடுக்காமல் இருப்பதும் நம்மீது கடமை யாகும். எது விஷயத்தில் அல்லாஹ்வும் அவனது தூதரும் ஒன்றும் சொல்ல வில்லையோ அது விஷயத்தில் நாமும் ஒன்றும் சொல்லாமல் அதற்கு பொருள் கூடக் கூறாமல் அப்படியே விட்டுவிட வேண்டும்.

**லாஇலாஹ இல்லல்லாஹ்வின் பொருள்**

லாஇலாஹ இல்லல்லாஹ் என்பது இம்மார்க்கத்தின் அடிப்படையாகும். இஸ்லாமிய மார்க்கத்தில் இதற்கு மிகப் பெரும் அந்தஸ்து இருக்கிறது. லாஇலாஹ இல்லல்லாஹ் என்பது இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில் முதற்கடமையும் ஈமானின் கிளைகளில் மிக உயர்ந்ததுமாகும். செயல்கள் ஏற்கப்படுவது என்பது இக்கலிமாவை மொழிந்து அதன் எதிர்பார்ப்புக்கேற்ப செயல்படுவதில் தான் இருக்கிறது.

இதன் உண்மையான பொருள்- இதை விடுத்து வேறு பொருள் கொள்ளக் கூடாத பொருள், "உண்மையில் வணங்கப்படுவதற்கு உரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை" என்பதாகும். "படைப்பவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை" அல்லது "உருவாக்குவதற்கு சக்தியுள்ளவன் அல்லாஹ் வைத் தவிர வேறு யாருமில்லை" அல்லது "உலகத்தில் இருப்பது அல்லாஹ் வைத் தவிர வேறு யாருமில்லை" என்று இதன் பொருளைச் சுருக்கிவிடுவது தவறாகும். ஏனெனில் இதன் கருத்து தவ்ஹீதுர் ருபூபிய்யாவுடன் மட்டும் சுருங்கி விடுகிறது. இந்தக் கலிமாவின் அடிப்படைக் கருத்தாக உள்ள தவ்ஹீதுல் உலூஹிய்யாவை எடுத்துக் கொள்வதில்லை.

## இக்கலிமாவுக்குரிய இரு அம்சங்கள்

இக்கலிமாவுக்கு இரு அம்சங்கள் உள்ளன. ஒன்று எதிர்மறை. மற்றொன்று உடன்பாடு.

1. எதிர்மறை: இது, லாஇலாஹ- வணக்கத்திற் குரியவன் யாருமில்லை- என்று நாம் சொல்லும்போது வணக்கத்திற்குரியவன் எனும் தகுதி எவருக்கும் இல்லை என்று மறுப்பதாகும்.

2. உடன்பாடு: இது, இல்லல்லாஹ்- அல்லாஹ்வைத் தவிர- என்று நாம் கூறும் போது வணக்கத்திற்குரியவன் எனும் தகுதி அல்லாஹ்வுக்கு மட்டுமே உள்ளது. இதில் அவனுக்கு இணை யாரும் கிடையாது என்று ஒப்புக்கொள்வதாகும்.

எனவே அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் வணங்கப்படக்கூடாது. வணக்க வகைகளில் எதுவும் அல்லாஹ் அல்லாதவருக்கு செலுத்தப்படக் கூடாது.

இக்கலிமாவின் பொருள் அறிந்து, இணைவைப்பதை நிராகரித்தல், ஏகத்து வத்தை ஏற்றுக் கொள்ளுதல் என்ற இதன் எதிர்பார்ப்பை உறுதியாக நம்பி அதன் பிரகாரம் செயல்பட்ட வண்ணம் யார் இக்கலிமாவைச் சொல்கிறாரோ அவரே உண்மையான முஸ்லிம். இக்கலிமாவை நம்பாமல் இதன்படி செயல் படுபவன் நயவஞ்சகன். இக்கலிமாவுக்கு எதிராக இணை கற்பித்து செயல் படுபவன் காபிர்- இறைமறுப்பாளனும், முஷ்ரிக்- இணைவைப்பவனும் ஆவான். இக்கலிமாவை அவன் நாவால் மொழிந்தாலும் சரியே.

## லாஇலாஹ இல்லல்லாஹ்வின் சிறப்பு

இக்கலிமாவுக்கு அநேக சிறப்புகளும் பலன்களும் உள்ளன. அவற்றில் சில:

1. ஏகத்துவவாதிகளில் யார் யார் (பெரும்பாவங்கள் செய்து) நரகத்தின் தண்டனைக்கு ஆளானார்களோ அவர்கள் நரகத்தில் நிரந்தரமாகக் கிடப்பதி லிருந்து தடுப்பதற்குரிய காரணமாக இக்கலிமா திகழ்கிறது.

عَنْ أَنَسٍ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ يَخْرُجُ مِنْ النَّارِ مَنْ قَالَ لَا إِلَهَ إِلَّا اللهُ وَفِي قَلْبِهِ وَزْنُ شَعِيرَةٍ مِنْ خَيْرٍ وَيَخْرُجُ مِنْ النَّارِ مَنْ قَالَ لَا إِلَهَ إِلَّا اللهُ وَفِي قَلْبِهِ وَزْنُ بُرَّةٍ مِنْ خَيْرٍ وَيَخْرُجُ مِنْ النَّارِ مَنْ قَالَ لَا إِلَهَ إِلَّا اللهُ وَفِي قَلْبِهِ وَزْنُ ذَرَّةٍ مِنْ خَيْرٍ

(خ/ ٤٤، م/ ١٩٣)

“உள்ளத்தில் ஒரு வாற்கோதுமை அளவு நன்மை இருக்கும் நிலையில் லாஇலாஹ இல்லல்லாஹ் எனக் கூறியவன் நரகிலிருந்து வெளியேற்றப்படுவான். உள்ளத்தில் ஒரு கோதுமை அளவு நன்மையிருக்கும் நிலையில் லாஇலாஹ இல்லல்லாஹ் எனக் கூறியவனும் நரகத்திலிருந்து வெளியேற்றப்படுவான். உள்ளத்தில் ஒரு அணு அளவு நன்மையிருக்கும் நிலையில் லாஇலாஹ

இல்லல்லாஹ் எனக் கூறியவனும் நரகத்திலிருந்து வெளியேற்றப்படுவான்.” நபிமொழி (புகாரி-44, முஸ்லிம்-193)

2. மனிதர்களும் ஜின்களும் இதற்காகவே படைக்கப்பட்டுள்ளனர். அல்லாஹ் கூறுகிறான்: ﴿وَمَا خَلَقْتُ الْجِنَّ وَالإِنْسَ إِلَّا لِيَعْبُدُونِ﴾ [ الذاريات:٥٦]

“ஜின்னையும் மனிதனையும் நான் படைத்தது- என்னை வணங்குவதற்காகவே தவிர வேறில்லை.” (51:56)

3. தூதர்கள் அனுப்பப்பட்டதும் வேதங்கள் இறக்கப்பட்டதும் இதற்காகத்தான். அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَمَا أَرْسَلْنَا مِنْ قَبْلِكَ مِنْ رَسُولٍ إِلَّا نُوحِي إِلَيْهِ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا أَنَا فَاعْبُدُونِ﴾ [ الأنبياء:٢٥]

“(நபியே!) உமக்கு முன் நாம் அனுப்பிய ஒவ்வொரு தூதரிடமும் “வணக்கத் திற்குரியவன் என்னைத் தவிர வேறு யாருமில்லை; எனவே என்னையே வணங்குங்கள்” என நாம் வஹி அறிவிக்காமல் இல்லை.” (21:25)

4. இதுவே இறைத்தூதர்கள் மேறகொண்ட அழைப்புப் பணியின் திறவுகோல் ஆகும். முதன் முதலில் அவர்கள் இதன் பக்கம்தான் மக்களை அழைத்தார்கள். ஒவ்வொரு இறைத்தூதரும் தமது சமுதாயத்துக்குச் சொன்னது இதுதான்:

﴿... يَا قَوْمِ اعْبُدُوا اللهَ مَا لَكُمْ مِنْ إِلَهٍ غَيْرُهُ﴾ [الأعراف:٧٣]

“என் சமுதாயமே! அல்லாஹ்வை வணங்குங்கள் அவனையன்றி வேறு இறைவன் உங்களுக்குக் கிடையாது” (7:73)

**லாஇலாஹ இல்லல்லாஹ்வின் நிபந்தனைகள்**

லாஇலாஹ இல்லல்லாஹ்விற்கு ஏழு நிபந்தனைகள் உள்ளன. ஓர் அடியான் அவற்றில் எந்த ஒன்றுக்கும் முரண்படாமல் அவை அனைத்தையும் பற்றிப் பிடித்துக் கொள்ளாத வரையில் அது செல்லாது. அவை:

1. **அறிவு:** அதாவது எதிர்மறை, உடன்பாடு எனும் இரு அம்சத்துடன் இக்கலிமாவின் பொருளையும் அப்பொருள் வலியுறுத்துகின்ற செயலையும் அறிய வேண்டும்.

எனவே ஒரு அடியான் அல்லாஹ் மட்டுமே வணக்கத்திற்குரியவன்; அவன் அல்லாதவற்றை வணங்குவது தவறானது என்பதைத் தெறிந்து கொண்டால் அவனே இதன் பொருளைத் அறிந்தவனாவான்.

﴿فَاعْلَمْ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا اللهُ﴾ [محمد:١٩]

“வணக்கத்திற்குரியன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்பதை நீர் அறிந்துகொள்வீராக.” (47:19)

عَنْ عُثْمَانَ ﷺ قَالَ قَالَ رَسُولُ الله ﷺ مَنْ مَاتَ وَهُوَ يَعْلَمُ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا الله دَخَلَ الْجَنَّةَ (م/ ٢٦)

“வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்பதை அறிந்த நிலையில் ஒருவன் மரணித்தால் அவன் சொர்க்கம் செல்வான்.”- நபிமொழி. அறிவிப்பவர்: உஸ்மான் (ரலி), நூல்: (முஸ்லிம்-26)

2. **உறுதி:** அதாவது இக்கலிமாவை -ஜின், மனித ஷைத்தான்கள் ஏற்படுத்துகின்ற சந்தேகங்கள் வராமல் தெளிந்த உள்ளத்துடன் உறுதியாக மொழிவதாகும். மட்டுமின்றி இதன் பொருளை மிக உறுதியாக நம்பி இதைக் கூறிட வேண்டும். அல்லாஹ் கூறுகிறான்:

﴿إِنَّمَا الْمُؤْمِنُونَ الَّذِينَ آمَنُوا بِاللهِ وَرَسُولِهِ ثُمَّ لَمْ يَرْتَابُوا﴾ [الحجرات:١٥]

“நிச்சயமாக (உண்மையான) மு∴மின்கள் யாரென்றால் அவர்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்பிய பின்னர் (அதுபற்றி எத்தகைய) சந்தேகமும் கொள்ள மாட்டார்கள்.” (49:15)

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ عن النَّبِيِّ ﷺ قَالَ: أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا الله وَأَنِّي رَسُولُ الله
لَا يَلْقَى الله بِهِمَا عَبْدٌ غَيْرَ شَاكٍّ فِيهِمَا إِلَّا دَخَلَ الْجَنَّةَ (م/ ٢٧)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: “வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் நான் அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சி சொல்கிறேன். இவ்விரண்டு விஷயங்களையும் எவ்வித சந்தேகமுமின்றி நம்பி ஒரு அடியான் அல்லாஹ்வை சந்தித்தால் அவன் சொர்க்கத்தில் நுழைவான்.”
அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம்(27)

3. **ஏற்றுக் கொள்ளல்:** அதாவது இக்கலிமாவின் எதிர்பார்ப்பு அனைத்தையும் உள்ளத்தால் உறுதி கொண்டு நாவால் மொழிந்து ஏற்றுக்கொள்ள வேண்டும். நபி(ஸல்) அவர்கள் மூலம் வந்துள்ள எல்லாச் செய்தி களையும் மெய் என்று நம்பி அவையனைத்தையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். அவற்றில் எதனையும் மறுக்கலாகாது.

﴿آمَنَ الرَّسُولُ بِمَا أُنْزِلَ إِلَيْهِ مِنْ رَبِّهِ وَالْمُؤْمِنُونَ كُلٌّ آمَنَ بِاللهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِنْ رُسُلِهِ وَقَالُوا سَمِعْنَا وَأَطَعْنَا غُفْرَانَكَ رَبَّنَا وَإِلَيْكَ الْمَصِيرُ﴾ [البقرة:٢٨٥]

அல்லாஹ் கூறுகிறான்: “இத்தூதர் தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பட்டதை நம்பினார். நம்பிக்கை கொண்டோரும் (இதை நம்பினார்கள்). இவர்கள் அனைவரும் அல்லாஹ்வையும் அவனது வானவர்களையும் அவனது வேதங்களையும் அவனது தூதர்களையும் நம்பினார்கள். “அவனது தூதர்களில் எவருக்

கிடையேயும் பாரபட்சம் காட்ட மாட்டோம்; செவியுற்றோம் கட்டுப்பட்டோம் எங்கள் இறைவனே! உன்னிடமே மன்னிப்புக் கோருகிறோம். உன்னிடமே (எங்கள்) திரும்புதல் உண்டு.” எனக் கூறுகின்றனர். (2:285)

மார்க்கச் சட்டங்களில் அல்லது குற்றவியல் சட்டங்களில்- உதாரணமாக திருட்டு அல்லது விபச்சாரத்திற்குரிய தண்டனை பலதாரமணம் அல்லது வாரிசுரிமை சட்டம் போன்றவைகளில் சிலவற்றை ஆட்சேபிக்கிறவர்கள் அல்லது மறுப்பவர்கள் இக்கலிமாவை நிராகரிப்பவர்களில், ஏற்றுக் கொள்ளாதவர்களில் சேர்ந்து விடுகிறார்கள்.

﴿وَمَا كَانَ لِمُؤْمِنٍ وَلَا مُؤْمِنَةٍ إِذَا قَضَى اللهُ وَرَسُولُهُ أَمْرًا أَنْ يَكُونَ لَهُمُ الْخِيَرَةُ مِنْ أَمْرِهِمْ وَمَنْ يَعْصِ اللهَ وَرَسُولَهُ فَقَدْ ضَلَّ ضَلَالًا مُبِينًا﴾ [الأحزاب:٣٦]

அல்லாஹ் கூறுகிறான்: “அல்லாஹ்வும் அவனது தூதரும் ஒரு காரியத்தை முடிவு செய்து விட்டால் நம்பிக்கை கொண்ட ஆணுக்கும் பெண்ணுக்கும் தமது அக்காரியத்தில் சுயவிருப்பம் கொள்வதற்கு உரிமை இல்லை.” (33:36)

4. **கட்டுப்படுதல்:** ஏகத்துவக் கலிமா எதை அறிவிக்கின்றதோ அதற்குக் கட்டுப்பட வேண்டும். ஏற்றுக் கொள்வதற்கும் கட்டுப்படுவதற்குமுள்ள வித்தியாசம் என்னவெனில் ஏற்றுக் கொள்வதென்பது அதற்குரிய சரியான பொருளை வார்த்தையால் வெளிப்படுத்துவது. கட்டுப்படுதலென்பது செயல் களால் பின்பற்றுவதாகும்.

ஒருவன் லாஇலாஹ இல்லல்லாஹ் என்பதன் பொருளை அறிந்து, அதை உறுதி கொண்டு அதை ஏற்றுக்கொள்ளவும் செய்கிறான் எனினும் அவன் அதற்கு கட்டுப்படவில்லை எனில் அவன் அறிந்ததற்கேற்ப செயல்படவில்லை யெனில் அது அவனுக்கு பலன் அளிக்காது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَأَنِيبُوا إِلَى رَبِّكُمْ وَأَسْلِمُوا لَهُ﴾ [ الزُّمر:٥٤]

“உங்கள் இறைவன் பால் திரும்பி அவனுக்கே கட்டுப்படுங்கள்.” (39:54)

﴿فَلَا وَرَبِّكَ لَا يُؤْمِنُونَ حَتَّى يُحَكِّمُوكَ فِيمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لَا يَجِدُوا فِي أَنْفُسِهِمْ حَرَجًا مِمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوا تَسْلِيمًا﴾ [النساء:٦٥]

“உம் இறைவன் மீது சத்தியமாக! அவர்கள் தங்கள் இடையே எழுந்த சச்சரவுகளில் உம்மை நீதிபதியாக ஏற்று பின்னர் நீர் தீர்ப்புச் செய்தது பற்றி தமக்குள் எந்த அதிருப்தியும் கொள்ளாமல் அதற்கு முழுமையாகக் கட்டுப்படாத வரை அவர்கள் நம்பிக்கை கொண்டவர்களாக மாட்டார்கள்.” (4:65)

5. **உண்மை:** அல்லாஹ்விடம் உண்மையாக நடந்து கொள்ளுதல். இது அவனுடைய நம்பிக்கையில், அடிப்படைக் கொள்கையில் உண்மையாளனாக இருப்பதைக் குறிக்கும். ﴿يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللهَ وَكُونُوا مَعَ الصَّادِقِينَ﴾ (التوبة٩ : ١١٩)

அல்லாஹ் கூறுகிறான்: “நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சுங்கள். நீங்கள் உண்மையாளர்களுடன் இருங்கள்.” (9:119)

“உண்மையான உள்ளத்துடன் லாஇலாஹ இல்லல்லாஹ் எனக் கூறியவர் சொர்க்கம் புகுவார்” என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (அஹ்மத்-18772)

عَنْ أَبِي مُوسَى عن النَّبِيِّ ﷺ ...مَنْ شَهِدَ أَنْ لَا إِلَهَ إِلَّا اللهُ صَادِقًا بِهَا دَخَلَ الْجَنَّةَ (حم/ ١٨٧٧٢، وصححه الألباني)

ஒருவன் இக்கலிமாவை நாவால் சொல்லிக் கொண்டு அதன் அர்த்தத்தை உள்ளத்தால் மறுத்தால் நிச்சயமாக அது அவனுக்கு ஈடேற்றமளிக்காது. மாறாக அவன் நயவஞ்சகர்களின் கூட்டத்தில் சேர்ந்து விடுவான்.

நபி(ஸல்)அவர்கள் கொண்டு வந்த செய்திகள், அறிவுரைகள் அனைத்தையும் பொய்ப்படுத்துவதோ அல்லது அதில் சிலவற்றைப் பொய்ப்படுத்துவதோ உண்மையாக நடந்து கொள்வதற்கு முரணானதாகும். ஏனெனில் அல்லாஹ் நபி(ஸல்) அவர்களுக்கு கட்டுப்படவும் அவர்களை உண்மைப்படுத்தவும் ஏவியுள்ளான். நபிக்குக் கட்டுப்படுவதை தனக்குக் கட்டுப்படுதலோடு சேர்த்துக் கூறியிருக்கின்றான். ﴿قُلْ أَطِيعُوا اللهَ وَأَطِيعُوا الرَّسُولَ﴾ [النور:٥٤]

“அல்லாஹ்வுக்கு கட்டுப்படுங்கள்(அவன்) தூதருக்கும் கட்டுப்படுங்கள் என (நபியே!) நீர் கூறுவீராக.” (24:54)

6. **வாய்மை:** மனிதன் தனது செயல்களை தூய எண்ணத்தைக் கொண்டு ஷிர்க்கின் சாயல் படிந்த அனைத்தை விட்டும் தூய்மைப்படுத்துவதாகும். இது எவ்வாறெனில் சொல், செயல்கள் அனைத்தும் அவனிடமிருந்து அல்லாஹ்வின் திருமுகத்துக்காக என தூய எண்ணத்துடனும் அவனது திருப்பொருத்தத்தை நாடியும் ஏற்படவேண்டும். அதில் முகஸ்துதி, பிறர் பாராட்ட வேண்டுமென்ற நோக்கம், பலனை எதிர்பார்ப்பது, சுயநலன், வெளிப்படையான அல்லது மறைமுகமான மனஇச்சை, அல்லது அல்லாஹ்வின் வழிகாட்டுதல் இன்றி ஒரு மனிதனின் பிரியத்திற்காகவோ, ஒரு மத்ஹபுக்காகவோ, ஒரு கட்சிக்குக் கட்டுப்படுவதற்காகவோ ஒரு செயலைச் செய்வது போன்ற எந்தக் கலப்படமும் இருக்கக் கூடாது. எனினும் அவன் தனது செயல் மூலம் அல்லாஹ்வின் திருமுகத்தையும் மறுமையையும் நாடுபவனாக இருப்பது அவசியமாகும். மனிதர்களில் எவரது பிரதிபலனுக்கோ நன்றி பாராட்டுதலுக்கோ தனது உள்ளத்தில் இடமளித்துவிடக் கூடாது. ﴿أَلَا لِلهِ الدِّينُ الخَالِصُ﴾ [الزُّمر:٣]

அல்லாஹ் கூறுகிறான்: “அறிந்து கொள்வீராக! தூய்மையான இம்மார்க்கம் அல்லாஹ்வுக்கே உரியது.” (39:3)

﴿ وَمَا أُمِرُوا إِلَّا لِيَعْبُدُوا اللهَ مُخْلِصِينَ لَهُ الدِّينَ حُنَفَاءَ وَيُقِيمُوا الصَّلَاةَ وَيُؤْتُوا الزَّكَاةَ وَذَلِكَ دِينُ الْقَيِّمَةِ ﴾ [البيِّنة:٥]

“வணக்கத்தை அல்லாஹ்வுக்கே தூய்மையாக்கியவர்களாக அல்லாஹ்வை அவர்கள் வணங்க வேண்டும் என்றே அவர்கள் ஏவப்பட்டுள்ளார்கள்.” (98:5)

عن عِتْبَانَ بْنَ مَالِكٍ ﷺ: ...قَالَ رَسُولُ اللهِ ﷺ: فَإِنَّ اللهَ قَدْ حَرَّمَ عَلَى النَّارِ مَنْ قَالَ لَا إِلَهَ إِلَّا اللهُ يَبْتَغِي بِذَلِكَ وَجْهَ اللهِ (خ/ ٤٢٥، م/ ٣٣)

“அல்லாஹ்வின் திருமுகத்தை நாடி லாஇலாஹ இல்லல்லாஹ் என்று கூறியவருக்கு அல்லாஹ் நரகத்தை தடைசெய்து விட்டான்.” என நபி(ஸல்) கூறியதாக இத்பான் (ரலி) அறிவிக்கிறார்கள். (புகாரி-425, முஸ்லிம்-33)

7. **அன்பு:** இம்மகத்தான கலிமாவையும் இதன் எதிர் பார்ப்பையும் இது எதை அறிவிக்கிறதோ அதையும் நேசிக்க வேண்டும். அந்த வகையில் அல்லாஹ் வையும் அவனது தூதரையும் நேசிக்க வேண்டும். மற்ற எல்லாவற்றினுடைய நேசத்தை விட அவர்கள் இருவரின் நேசத்துக்கே முன்னுரிமை வழங்க வேண்டும். நேசத்திற்கு உரிய நிபந்தனைகளையும் அதற்கு அவசியமான வற்றையும் கடைபிடிக்க வேண்டும்.

ஆகவே கண்ணியப்படுத்துதல், மகத்துவப்படுத்துதல், பயப்படுதல், ஆதரவு வைத்தல் ஆகியவற்றுடன் அல்லாஹ்வை நேசிக்கவேண்டும். மக்கா, மதீனா, பொதுவாக எல்லா இறையில்லங்கள் போன்ற அல்லாஹ்வுக்குப் பிரியமான இடங்களையும், ரமழான், துல்ஹஜின் முதல் பத்து நாட்கள் போன்ற அல்லாஹ் வுக்குப் பிரியமான காலங்களையும், நபிமார்கள், ரசூல்மார்கள், மலக்குகள், சத்தியவான்கள், உயிர்த்தியாகிகள், நல்லடியார்கள் போன்ற அல்லாஹ்வுக்குப் பிரியமான மனிதர்களையும் தொழுகை, ஜகாத், நோன்பு, ஹஜ் போன்ற அல்லாஹ்வுக்குப் பிரியமான செயல்களையும், திக்ர், குர்ஆன் ஓதுதல் போன்ற சொற்களையும் நேசிக்க வேண்டும்.

சொந்த விருப்பங்கள், ஆசைகளை விட அல்லாஹ் வின் விருப்பங்களுக்கு முன்னுரிமை தர வேண்டும். அல்லாஹ் வெறுப்பவற்றை வெறுப்பதும் இறை நேசமே. ஆதலால் இறைமறுப்பாளர்களையும், இறைநிராகரிப்பு, பாவம், இறைவனுக்கு மாறு செய்தல் ஆகியவற்றையும் வெறுக்க வேண்டும்.

﴿ يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا مَنْ يَرْتَدَّ مِنْكُمْ عَنْ دِينِهِ فَسَوْفَ يَأْتِي اللهُ بِقَوْمٍ يُحِبُّهُمْ وَيُحِبُّونَهُ أَذِلَّةٍ عَلَى الْمُؤْمِنِينَ أَعِزَّةٍ عَلَى الْكَافِرِينَ يُجَاهِدُونَ فِي سَبِيلِ اللهِ وَلَا يَخَافُونَ لَوْمَةَ لَائِمٍ ﴾ [ المائدة:٥٤]

அல்லாஹ் கூறுகிறான்: “நம்பிக்கை கொண்டோரே! உங்களில் யாரேனும் தனது மார்க்கத்தை விட்டு மாறி விட்டால் அல்லாஹ் வேறொரு சமுதாயத்தைக் கொண்டு வருவான். அவன் அவர்களை நேசிப்பான். அவர்களும் அவனை நேசிப்பார்கள். அவர்கள் நம்பிக்கை கொண்டோரிடம் பணிவாகவும் நிராகரிப் போரிடம் கடுமையாகவும் இருப்பார்கள். அல்லாஹ்வின் பாதையில் போர் புரிவார்கள். பழிப்போரின் பழிச்சொல்லுக்கு அஞ்ச மாட்டார்கள்.” (5:54)

### முஹம்மதுர் ரசூலுல்லாஹ்வின் பொருள்

இதன் பொருள், முஹம்மது நபி அல்லாஹ்வின் அடியார் என்றும், மனித சமுதாயம் முழுமைக்கும் அனுப்பப்பட்ட இறைத்தூதர் என்றும் உளப்பூர்வமாக ஒப்புக் கொண்டு அதற்கு ஏற்ப செயல்படுவதாகும். அதாவது அவர்களின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதும், அவர்கள் அறிவித்த செய்திகளை உண்மைப் படுத்துவதும், அவர்கள் விலக்கிய, கண்டித்த தீமைகளிலிருந்து விலகுவதும் மற்றும் அவர்கள் வகுத்துத் தந்த முறைப்படியே அல்லாஹ்வை வணங்குவது மாகும்.

முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என்று சாட்சி சொல்வதில் இரண்டு அம்சங்கள் உள்ளன. அவை “அப்துஹு, வரசூலுஹு”-அல்லாஹ்வின் அடியார், அவனது தூதர் என்பதாகும். இவ்விரண்டும் நபி (ஸல்) அவர்கள் விஷயத்தில் மிகைப் பாட்டையும் குறைபாட்டையும் அகற்றிவிடுகிறது. ஏனெனில் அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் அவனது தூதரும் ஆவார்கள். சிறப்பான இவ்விரண்டு தன்மைகளில் அவர்கள் மக்களிலேயே மிகப் பரிபூரணமானவர்கள். இந்த இடத்தில் அப்து என்பதன் பொருள் இறைவனை வணங்கும் அடிமை என்பதாகும். அதாவாது நபி(ஸல்)அவர்கள் ஒரு மனிதர்தான். மனிதகுலம் எதிலிருந்து படைக்கப்பட்டுள்ளாதோ அதிலிருந்தே அவர்களும் படைக்கப்பட்டுள்ளார்கள். ஏனைய மனிதர்களுக்கு இருக்கின்ற தன்மைகள், சுபாவங்கள் அவர்களுக்கும் உண்டு. அல்லாஹ் கூறுகிறான்: ﴿ قُلْ إِنَّمَا أَنَا بَشَرٌ مِثْلُكُمْ ﴾ (الكهف:١١٠)

“நான் உங்களைப் போன்ற ஒரு மனிதன்தான் என்று (நபியே!) கூறுவீராக!” (18:110) ﴿ الحَمْدُ لله الَّذِي أَنْزَلَ عَلَى عَبْدِهِ الكِتَابَ وَلَمْ يَجْعَلْ لَهُ عِوَجًا ﴾ [الكهف:١]

“புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே! அவனே தன் அடியார் மீது இவ்வேதத்தை இறக்கியருளினான். இதில் எவ்விதக் கோணலையும் வைத்திடவில்லை.” (18:1)

ரசூல் என்பதன் பொருள் சொர்க்கத்தைக் கொண்டு நற்செய்தி சொல்லி, நரகத்தைக் கொண்டு எச்சரிக்கை செய்து, அல்லாஹ்வின் பக்கம் அழைப்பதற்கு மனித சமுதாயம் முழுவதற்கும் தூதராக அனுப்பப்பட்டவர் என்பதாகும். இவ்விரு

தன்மைகளைக் கொண்டு சாட்சி சொல்வது நபி(ஸல்)அவர்கள் விஷயத்தில் வரம்பு மீறும் போக்கையும் குறைபாடான போக்கையும் நீக்கிவிடுகிறது.

தம்மை நபி(ஸல்) அவர்களின் சமுதாயத்தைச் சேர்ந்தவர் என்று சொல்லிக் கொள்கின்ற பெரும்பாலோர் அவர்கள் விஷயத்தில் வரம்பு மீறி அவர்களை அடிமை நிலையிலிருந்து உயர்த்தி கடவுள் அந்தஸ்திற்கு கொண்டு சென்று விடுகின்றனர். அல்லாஹ்வை விடுத்து நபியிடமும் இரட்சிப்புத் தேடுகின்றனர். தேவைகளை நிறைவு செய்தல், கஷ்டங்களை நீக்குதல் போன்ற அல்லாஹ் வைத் தவிர வேறு யாராலும் முடியாதவற்றை அவர்களிடமே கேட்டுக் கொண்டி ருக்கிறார்கள். வேறு சிலர் அவர்களின் தூதுத்துவத்தை மறுத்துவிடுகின்றார்கள் அல்லது அவர்களைப் பின்பற்றுவதில் அலட்சியம் காட்டி அவர்களுக்குரிய உரிமைகளையும் கடமைகளையும் முழுமையாக நிறைவேற்றாமல் குறைத்து விடுகின்றார்கள். அவர்கள் கொண்டு வந்தவற்றிற்கு மாற்றமான கூற்றுக்களையே ஆதாரமாகக் கொள்கிறார்கள்.

### ஈமானும் அதன் அடிப்படைகளும்

ஈமான்- நம்பிக்கை என்பது சொல்லும் செயலும் அடங்கியதாகும். வழிபாடுகள் செய்வதன் மூலம் அது அதிகரிக்கவும் செய்யும். பாவங்கள் மற்றும் தீமைகள் புரிவதன் மூலம் அது குறையவும் செய்யும். மேலும் ஈமான் என்பது உள்ளம் மற்றும் நாவின் சொல்லும், உள்ளம், நாவு, உறுப்புகள் ஆகியவற்றின் செயலும் ஆகும். உள்ளத்தின் சொல் என்பது அது நம்பிக்கை கொள்வதும் உண்மைப் படுத்துவதுமாகும். நாவின் சொல் என்பது அது ஏற்று மொழிவதாகும். உள்ளத்தின் செயல் என்பது தூய எண்ணம், கட்டுப்படுதல், பணிதல், நேசித்தல், நற்செயல்களை நாடுதல் ஆகியனவாகும். உறுப்புகளின் செயல் என்பது ஏவல்களைச் செய்வதும் விலக்கல்களை விட்டு விடுவதுமாகும்.

ஈமானுக்கு சில அடிப்படைகள் இருப்பதாக குர்ஆனும் ஹதீஸும் கூறுகின்றன. அவை, அல்லாஹ்வையும் அவனது வானவர்களையும், அவனுடைய வேதங்களையும், அவனுடைய தூதர்களையும், இறுதி நாளையும், விதியையும் அதாவது அதன் நல்லதையும் கெட்டதையும் நம்புவதாகும்.

﴿آمَنَ الرَّسُولُ بِمَا أُنْزِلَ إِلَيْهِ مِنْ رَبِّهِ وَالْمُؤْمِنُونَ كُلٌّ آمَنَ بِاللهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِنْ رُسُلِهِ وَقَالُوا سَمِعْنَا وَأَطَعْنَا غُفْرَانَكَ رَبَّنَا وَإِلَيْكَ الْمَصِيرُ﴾ [البقرة:٢٨٥]

அல்லாஹ் கூறுகிறான்: இந்தத் தூதர் தம் இறைவனிட மிருந்து தமக்கு அருளப்பட்டதை நம்பினார். நம்பிக்கை கொண்டோரும் (இதை நம்பினார்கள்). இவர்கள் அனைவரும் அல்லாஹ்வையும் அவனது வானவர்களையும் அவனது

வேதங்களையும் அவனது தூதர்களையும் நம்பினார்கள். மேலும் “அவனது தூதர்களில் எவருக் கிடையேயும் பாரபட்சம் காட்ட மாட்டோம்; செவியுற்றோம் கட்டுப்பட்டோம் எங்கள் இறைவனே! உன்னிடமே மன்னிப்புக் கோருகிறோம். உன்னிடமே (எங்கள்)திரும்புதல் உண்டு.” என்றும் கூறுகின்றனர். (2:285)

عن عُمَرُ بْنُ الْخَطَّابِ ﷺ قَالَ : ... قَالَ فَأَخْبِرْنِي عَنْ الْإِيمَانِ قَالَ أَنْ تُؤْمِنَ بِاللهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ وَالْيَوْمِ الْآخِرِ وَتُؤْمِنَ بِالْقَدَرِ خَيْرِهِ وَشَرِّهِ ... (م/ ٨)

ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் ஈமானைப் பற்றி வினவி னார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், “ஈமான் என்பது அல்லாஹ்வையும் அவனது வானவர்களையும், அவனுடைய வேதங்களையும், அவனது தூதர் களையும், இறுதி நாளையும், விதியின் நல்லதையும் கெட்டதையும் நீ நம்பு வதாகும்” என்று கூறினார்கள். அறிவிப்பவர்: உமர் இப்னுல் கத்தாப் (ரலி) நூல்: முஸ்லிம் (8)

இந்த ஆறு விஷயங்கள்தான் இஸ்லாத்தின் சரியான அடிப்படைக் கொள்கை யாகும். இவற்றைக் கொண்டு தான் அல்லாஹ்வின் வேதமான திருக்குர்ஆன் அருளப்பட்டது. இவற்றைக் கொண்டுதான் அவனுடைய தூதர் முஹம்மத் நபி அவர்கள் அனுப்பப்பட்டார்கள். இவற்றுக்கு ஈமானின் அடிப்படைகள் என்றும் சொல்லப்படும்.

## 1. அல்லாஹ்வை நம்புவது

அல்லாஹ்வை நம்புவது என்பது அவனது இறைத் தன்மையிலும், படைத்துப் பரிபாலிப்பதிலும் அவனுடைய பெயர்கள் மற்றும் தன்மைகளிலும் அவன் தனித்தவன் அவனுக்கு இணை துணை யாரும் இல்லை என நம்புவதாகும். அல்லாஹ்வை நம்புவதில் பல விஷயங்கள் உள்ளன.

1. அவன்தான் வணக்கத்திற்குத் தகுதியான உண்மையான இறைவன் என நம்புதல். ஏனெனில் அவன்தான் மனிதர்களைப் படைத்தவன், அவர்களுக்கு உபகாரம் செய்பவன், அவர்களுக்கு வாழ்வாதாரம் வழங்குபவன்,அவர்களின் இரகசியங்களையும் பரகசியங் களையும் அறிபவன், அவர்களில் கட்டுப்பட்டு நடப்பவர் களுக்கு நற்கூலி வழங்கவும், மாறுசெய்பவர்களுக்கு தண்டனை வழங்கவும் சக்தியுள்ளவன்.

இந்த நம்பிக்கையின் எதார்த்த நிலை என்னவெனில் வணக்கவழிபாட்டின் அனைத்து வகைகளையும் அச்சத் துடனும் ஆவலுடனும் பணிவான முறையில் அதே சமயம் அல்லாஹ்வை பரிபூரணமாக நேசிப்பதுடனும் அவனது மகத்து

வத்திற்கு முன் முழுமையாகப் பணிவதுடனும் அவனுக்கு மட்டுமே நிறைவேற்று வதாகும். திருமறைக் குர்ஆனில் பெரும்பாலான வசனங்கள் இம்மகத்தான அடிப்படை அம்சத்தைப் பற்றியே இறங்கியிருக்கின்றன. அல்லாஹ் கூறுகிறான்:

﴿ فَاعْبُدِ اللهَ مُخْلِصًا لَهُ الدِّينَ ، أَلَا للهِ الدِّينُ الخَالِصُ ﴾ [الزُّمر: ٢،٣]

"(நபியே!) வணக்கத்தை உளத்தூய்மையுடன் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரித்தாக்கி அவனை வணங்குவீராக! தெரிந்து கொள்ளுங்கள்! தூய்மையான இம்மார்க்கம் அல்லாஹ்வுக்கே உரியதாகும்." (39:2-3)

﴿ وَقَضَى رَبُّكَ أَلَّا تَعْبُدُوا إِلَّا إِيَّاهُ ﴾ [الإسراء:٢٣]

"அவனைத் தவிர வேறெவரையும் நீங்கள் வணங்கக் கூடாதென உம் இறைவன் விதித்துள்ளான்." (17:23)

﴿ فَادْعُوا اللهَ مُخْلِصِينَ لَهُ الدِّينَ وَلَوْ كَرِهَ الكَافِرُونَ ﴾ [غافر:١٤]

"வணக்கத்தை அல்லாஹ்வுக்கே உரித்தாக்கி தூய எண்ணத்துடன் அவனிடமே பிரார்த்தியுங்கள். நிராகரிப்பாளர்கள் இதனை வெறுத்தாலும் சரியே!." (40:14)

வணக்கவழிபாட்டில் ஏராளமான வகைகள் உள்ளன. அவற்றில் பிரார்த்தனை செய்தல், அஞ்சுதல், எதிர்பார்த்தல், நம்பிக்கை வைத்தல், ஆர்வம் கொள்ளுதல், பயப்படுதல், பணிவு, பயபக்தி, முற்றாகத் திரும்பிவிடுதல், உதவி தேடுதல், பாதுகாப்புத் தேடுதல், இரட்சிப்புத் தேடுதல், அறுத்துப் பலியிடுதல் நேர்ச்சை செய்தல் போன்ற பல வகைகள் உள்ளன. இவற்றில் எதையும் அல்லாஹ் அல்லாதவருக்கு செய்வது கூடாது. அவ்வாறு செய்வது இணைவைப்பும் இறை நிராகரிப்புமாகும்.

﴿ وَقَالَ رَبُّكُمُ ادْعُونِي أَسْتَجِبْ لَكُمْ إِنَّ الَّذِينَ يَسْتَكْبِرُونَ عَنْ عِبَادَتِي سَيَدْخُلُونَ جَهَنَّمَ دَاخِرِينَ ﴾ [غافر:٦٠]

பிரார்த்தனைக்கு ஆதாரம்: "என்னை அழையுங்கள்! உங்களுக்குப் பதில் அளிக்கிறேன்; எனது வணக்கத்தை விட்டும் பெருமையடிப்போர் நரகத்தில் இழிந்தோராக நுழைவார்கள்" என்று உங்கள் இறைவன் கூறுகிறான். (40:60)

عَنْ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ الدُّعَاءُ هُوَ الْعِبَادَةُ (ت/ ٢٩٦٩)

பிரார்த்தனைதான் வணக்கம் என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக நு.்.மான் பின் பஷீர்(ரலி) அறிவிக்கிறார்கள். நூல்: திர்மதி(2969)

﴿ إِنَّمَا ذَلِكُمُ الشَّيْطَانُ يُخَوِّفُ أَوْلِيَاءَهُ فَلَا تَخَافُوهُمْ وَخَافُونِ إِنْ كُنْتُمْ مُؤْمِنِينَ ﴾ [آل عمران:١٧٥]

அஞ்சுதலுக்கு ஆதாரம்: "ஷைத்தானே தனது நேசர்களை (இவ்வாறு) அச்சுறுத்துகிறான். அவர்களுக்கு அஞ்சாதீர்கள்! நீங்கள் நம்பிக்கை கொண் டிருந்தால் எனக்கே அஞ்சுங்கள்." (3:175)

﴿ فَمَنْ كَانَ يَرْجُوا لِقَاءَ رَبِّهِ فَلْيَعْمَلْ عَمَلًا صَالِحًا وَلَا يُشْرِكْ بِعِبَادَةِ رَبِّهِ أَحَدًا ﴾ [الكهف:١١٠]

எதிர்பார்த்தலுக்கு ஆதாரம்: "தமது இறைவனின் சந்திப்பை எதிர்பார்ப்பவர் நல்லறத்தைச் செய்யட்டும். தமது இறைவணக்கத்தில் எவரையும் இணை கற்பிக்கா திருக்கட்டும்." (18:110)

﴿ وَعَلَى اللهِ فَتَوَكَّلُوا إِنْ كُنْتُمْ مُؤْمِنِينَ ﴾ [المائدة:٢٣] ﴿ وَمَنْ يَتَوَكَّلْ عَلَى اللهِ فَهُوَ حَسْبُهُ ﴾ [الطَّلاق:٣]

முழுவதும் சார்ந்திருத்தலுக்கு (தவக்குல்) ஆதாரம்: "நீங்கள் நம்பிக்கை கொண்டிருந்தால் அல்லாஹ் வையே முழுவதும் சார்ந்திருங்கள்." (5:23)

"அல்லாஹ்வையே முழுவதும் சார்ந்திருப்போருக்கு அவன் போதுமானவன்." (65:3)

﴿ إِنَّهُمْ كَانُوا يُسَارِعُونَ فِي الْخَيْرَاتِ وَيَدْعُونَنَا رَغَبًا وَرَهَبًا وَكَانُوا لَنَا خَاشِعِينَ ﴾ [الأنبياء:٩٠]

ஆர்வம் கொள்ளுதல், பயப்படுதல், பணிவு ஆகியவற்றுக்கு ஆதாரம்: "அவர்கள் நன்மைகளை நோக்கி விரைந்து செல்வோராகவும், ஆர்வத்துடனும் அச்சத்துடனும் நம்மிடம் பிரார்த்திப்போராகவும் இருந்தனர். நமக்குப் பணிவோ ராகவும் இருந்தனர்." (21:90)

﴿ فَلَا تَخْشَوْهُمْ وَاخْشَوْنِي ﴾ [البقرة:١٥٠]

பயபக்திக்கு ஆதாரம்: "எனவே அவர்களுக்கு அஞ்சாதீர்கள். எனக்கே அஞ்சுங்கள்." (2:150)

﴿ وَأَنِيبُوا إِلَى رَبِّكُمْ وَأَسْلِمُوا لَهُ ﴾ [الزُّمر:٥٤]

முற்றாகத் திரும்பிவிடுதலுக்கு ஆதாரம்: "உங்கள் இறைவன் பக்கமே திரும்புங்கள்; அவனுக்கே கட்டுப் படுங்கள்!" (39:45)

﴿ إِيَّاكَ نَعْبُدُ وَإِيَّاكَ نَسْتَعِينُ ﴾ [الفاتحة:٤] قال النبي ﷺ : (( وَإِذَا اسْتَعَنْتَ فَاسْتَعِنْ بِاللهِ )) (ت/ ٢٥١٦)

உதவி தேடுதலுக்கு ஆதாரம்: "உன்னையே வணங்குகிறோம்; உன்னிடமே உதவியும் தேடுகிறோம்."(1:4)

"நீ உதவி தேடினால் அல்லாஹ்விடமே உதவி தேடு" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். திர்மிதி (2516)

﴿ قُلْ أَعُوذُ بِرَبِّ النَّاسِ ﴾ [الناس:١]

பாதுகாப்புத் தேடுதலுக்கு ஆதாரம்: "மனிதர்களின் இறைவனிடம் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று கூறுவீராக!" (114:1)

﴿ إِذْ تَسْتَغِيثُونَ رَبَّكُمْ فَاسْتَجَابَ لَكُمْ ﴾ [الأنفال:٩]

இரட்சிப்புத் தேடுதலுக்கு ஆதாரம்: "நீங்கள் உங்கள் இறைவனிடம் உதவி (இரட்சிப்பு) தேடியபோது அவன் உங்களுக்குப் பதிலளித்தான்."(8:9)

﴿قُلْ إِنَّ صَلَاتِي وَنُسُكِي وَمَحْيَايَ وَمَمَاتِي لله رَبِّ العَالَمِينَ لَا شَرِيكَ لَهُ وَبِذَلِكَ أُمِرْتُ وَأَنَا أَوَّلُ الْمُسْلِمِينَ﴾
[الأنعام: ١٦٣،١٦٢]

அறுத்துப் பலியிடுதலுக்கு ஆதாரம்: "(நபியே!) நீர் கூறும்: எனது தொழுகை, எனது குர்பானி (அறுத்துப் பலியிடுதல்), எனது வாழ்வு, எனது மரணம் யாவும் அகிலத்தின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே உரியன, அவனுக்கு யாதொரு இணையுமில்லை; இவ்வாறே நான் ஏவப்பட்டுள்ளேன்; முஸ்லிம்களில் நான் முதலாமவன்." (6:162,163)

قال النبي ﷺ: ((وَلَعَنَ اللهُ مَنْ ذَبَحَ لِغَيْرِ الله)) (م/ ١٩٧٨)

"அல்லாஹ் அல்லாதவருக்காக அறுத்துப் பலியிட்ட வரை அல்லாஹ் சபிப்பானாக!" என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (முஸ்லிம்-1978)

﴿يُوفُونَ بِالنَّذْرِ وَيَخَافُونَ يَوْمًا كَانَ شَرُّهُ مُسْتَطِيرًا﴾ [الإنسان:٧]

நேர்ச்சை செய்தலுக்கு ஆதாரம்: "அவர்கள் நேர்ச்சையை நிறைவேற்று வார்கள். தீமை பரவிய நாளைப் பற்றி அஞ்சுவார்கள்." (76:7)

இன்னும் உண்பது, பருகுவது, உறங்குவது, வாழ்வாதாரத்தைத் தேடுவது, திருமணம் செய்வது போன்ற பழக்க வழக்கங்கள்கூட வணக்கங்களாக மாறும்; அவற்றைச் செய்வதனால் ஒரு முஸ்லிமுக்கு நற்கூலியும் கிடைக்கும். எப்போ தெனில் அவற்றைச் செய்வதன் மூலம் இறைவழிபாடுகளைச் செய்வதற்கு சக்தியைப் பெறும் நோக்கம் இருக்குமானால். அதே நேரத்தில் அல்லாஹ் வுக்காக எனும் தூய எண்ணத்துடன் அவற்றை நிறைவேற்றும்போது.

2. அல்லாஹ் தன் அடியார்கள் மீது கடமையாக்கிய அனைத்தையும் நம்புவதும் இறைநம்பிக்கையில் அடங்கும். உதாரணமாக இஸ்லாத்தின் ஐந்து அடிப்படைக் கடமைகளான வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மது நபி அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சி சொல்வது, தொழுகையை நிலைநிறுத்துவது, ஜகாத் கொடுப்பது, ரமழானில் நோன்பு நோற்பது, புனிதமிக்க அல்லாஹ்வின் ஆலயத்திற்குச் சென்று வர சக்தி பெற்றவர்கள் ஹஜ் செய்வது ஆகியவற்றை நம்புவதும் இன்னும் தூய்மைமிக்க இம்மார்க்கம் கொண்டு வந்துள்ள ஏனைய கடமைகளை நம்புவதும் இறைநம்பிக்கையில் அடங்கும்.

3. அல்லாஹ் தான் அகிலத்தைப் படைத்தவன், மனிதர்களின் காரியங்களை நிர்வகிப்பவன், தனது அறிவு ஞானம் மற்றும் ஆற்றலுக்கேற்ப- தனது விருப்பப்படி அவர்கள் மீது அதிகாரம் செலுத்தி வருபவன் என நம்புவதும் இறை நம்பிக்கையில் அடங்கும். அவனே இவ்வுலகத்திற்கும் மறு உலகிற்கும் அதிபதி,

அகில உலகமனைத்தையும் படைத்துப் பாரிபாலிப்பவன், அவனைத் தவிர வேறு படைப்பாளன், அவனைத் தவிர வேறு பாரிபாலிப்பவன் எவருமில்லை. அடியார் களைச் சீர்திருத்தவும் இம்மை, மறுமை வாழ்விற்கு எதில் ஈடேற்றம் இருக்கிறதோ அதன் பால் அவர்களை அழைக்கவும் அவன் தூதர்களை அனுப்பி வைத்தான்; வேதங்களையும் இறக்கி வைத்தான். இன்னும் இவையனைத்திலும் அவனுக்கு இணை துணை எவருமில்லை என்று நம்புவதும் இறைநம்பிக்கையில் அடங்கும்.

﴿اللهُ خَالِقُ كُلِّ شَيْءٍ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ وَكِيلٌ﴾ [الزُّمر:٦٢]

அல்லாஹ் கூறுகிறான்: “அல்லாஹ் அனைத்துப் பொருட்களையும் படைத்தவன். அவன் ஒவ்வொரு பொருளுக்கும் பொறுப்பாளன்.” (39:62)

4. திருக்குர்ஆனிலும் நபிமொழிகளிலும் வந்துள்ள இறைவனின் அழகிய பெயர்களையும் உயர்வுமிக்க அவனது பண்புகளையும் மாற்றாமல், மறுக்காமல், உருவகப்படுத்தாமல், ஒப்பாக்காமல் நம்பிக்கை கொள்வதோடு இவை அறிவிக்கின்ற மகத்தான அர்த்தங்களையும் நம்புவதும் இறைநம்பிக்கையில் அடங்கும். அந்த அர்த்தங்கள்தான் அல்லாஹ்வின் தன்மைகளாகும். இத்தன்மை களில் எதையும் அவனது படைப்புகளுக்கு ஒப்பாக்காமல் அவனுக்கே உரித்தான விதத்தில் அவற்றைக் அவனுக்குக் கொடுப்பது கடமையாகும்.

﴿لَيْسَ كَمِثْلِهِ شَيْءٌ وَهُوَ السَّمِيعُ البَصِيرُ﴾ [الشُّورى:١١]

அல்லாஹ் கூறுகிறான்: “அவனைப் போன்று எதுவும் இல்லை. அவன் (யாவற்றையும்) செவியேற்பவனும் பார்ப்பவனும் ஆவான்.” (42:11)

## 2. மலக்குகளை நம்புவது

இந்த நம்பிக்கையில் பொதுவாக நம்புவது, குறிப்பாக நம்புவது என இரு வகை உள்ளன. பொதுவாக நம்புவது என்றால் அல்லாஹ்வுக்கு மலக்குகள் இருக்கிறார்கள்; தன்னை வணங்குவதற்காகவே அவன் அவர்களைப் படைத்துள்ளான். அவர்களில் அர்ஷை சுமக்கும் பொறுப்பு கொடுக்கப் பட்டவர்கள், சொர்க்கத்தையும் நரகத்தையும் பாதுகாப்பவர்கள், அடியார்களின் செயல்களைப் பாதுகாக்கும் பொறுப்பு வழங்கப்பட்டவர்கள் என அநேக வகையினர் உள்ளனர் என்று நம்ப வேண்டும்.

குறிப்பாக நம்புவது என்றால் அல்லாஹ்வும் அவன் தூதரும் பெயர் குறிப்பிட்டு சொல்லியிருக்கின்ற வானவர்களை நம்புவதாகும். உதாரணமாக ஜிப்ரீல், மீகாயீல், நரகத்தின் பாதுகாவலர் மாலிக், சூர் ஊதும் பொறுப்பு ஒப்படைக் கப்பட்ட வானவர் இஸ்ரா.்.பீல் போன்றோர்.

عَنْ عَائِشَةَ قَالَتْ قَالَ رَسُولُ اللهِ ﷺ : خُلِقَتْ الْمَلَائِكَةُ مِنْ نُورٍ وَخُلِقَ الْجَانُّ مِنْ مَارِجٍ مِنْ نَارٍ وَخُلِقَ آدَمُ مِمَّا وُصِفَ لَكُمْ (م/ ٢٩٩٦)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "வானவர்கள் ஒளியாலும் ஜின்கள் நெருப்பின் ஜுவாலையிலிருந்தும் படைக்கப்பட்டுள்ளனர். ஆதம் (ஏற்கனவே) உங்களுக்குக் கூறப்பட்டுவிட்ட ஒன்றிலிருந்து (மண்ணிலிருந்து) படைக்கப் பட்டுள்ளார்." அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி), நூல்: முஸ்லிம்(2996)

### 3. வேதங்களை நம்புவது

அல்லாஹ் தனது கடமையை விளக்குவதற்காகவும் அதன் பால் மக்களை அழைப்பதற்காகவும் தன்னுடைய நபிமார்கள், ரசூல்மார்களுக்கு வேதங்களை இறக்கி யருளினான் எனப் பொதுவாக நம்புவது அவசிய மாகும். குறிப்பாக தவ்ராத், இன்ஜீல், ஜபூர், குர்ஆன் போன்ற அல்லாஹ் பெயர் குறிப்பிட்டுச் சொன்ன வேதங்களை நம்ப வேண்டும். திருக்குர்ஆன் தான் இவற்றில் இறுதியானதாகும். இது முந்தைய வேதங்களை விட உயர்வானதும் அவற்றை உண்மைப்படுத்தக் கூடியதாகவும் இருக்கின்றது.

மேலும் இந்தக் குர்ஆனையும் ஆதாரப்பூர்வமான நபிமொழிகளையுமே பின்பற்றுவதோடு எல்லாப் பிரச்சனைகளுக்கும் இவற்றையே தீர்வாக எடுத்துக் கொள்வது சமுதாயத்தினர் அனைவர் மீதும் கடமையாகும். ஏனெனில் அல்லாஹ் முஹம்மத் நபி(ஸல்) அவர்களை ஜின், மனித சமுதாயம் அனைத்திற்கும் தூதராக அனுப்பி அவர்களுக்கிடையே தீர்ப்பு வழங்குவதற்காக இந்தக் குர்ஆனையும் அவர்களுக்கு இறக்கி அருளியிருக்கிறான். இத்திருக்குர்ஆனை, அல்லாஹ் இதயங்களிலுள்ளதற்கு நோய் நிவாரணமாகவும், யாவற்றையும் தெள்ளத் தெளிவாக விளக்கக்கூடியதாகவும், அகிலத்தார்களுக்கு நேர்வழி காட்டக்கூடியதாகவும், ஓர் அருளாகவும் ஆக்கியுள்ளான்.

﴿وَهَذَا كِتَابٌ أَنْزَلْنَاهُ مُبَارَكٌ فَاتَّبِعُوهُ وَاتَّقُوا لَعَلَّكُمْ تُرْحَمُونَ﴾ [الأنعام:١٥٥]

அல்லாஹ் கூறுகிறான்: "இது நாம் அருளிய பாக்கியம் பொருந்திய வேதமாகும். எனவே நீங்கள் இதனைப் பின்பற்றுங்கள்; (நம்மை) அஞ்சுங்கள்; அருள் செய்யப்படுவீர்கள்." (6:155)

﴿وَنَزَّلْنَا عَلَيْكَ الكِتَابَ تِبْيَانًا لِكُلِّ شَيْءٍ وَهُدًى وَرَحْمَةً وَبُشْرَى لِلْمُسْلِمِينَ﴾ [النحل:٨٩]

"இவ்வேதத்தை ஒவ்வொரு பொருளையும் தெளிவாக்கக்கூடியதாகவும், நேர்வழி காட்டக்கூடியதாகவும், அருளாகவும் முஸ்லிம்களுக்கு நற்செய்தி யாகவும் உமக்கு அருளினோம்." (16:89)

## 4. தூதர்களை நம்புவது

தூதர்களைப் பொதுவாகவும் குறிப்பாகவும் நம்புவது அவசியமாகும். நிச்சயமாக அல்லாஹ் தன்னுடைய அடியார்களுக்குச் சொர்க்கத்தைக் கொண்டு நற்செய்தி கூறவும் நரகத்தைக் கொண்டு எச்சரிக்கை செய்யவும் சத்தியத்தின் பால் அவர்களை அழைப்பதற்காகவும் தூதர்களை அனுப்பிவைத்தான் என்று நம்ப வேண்டும்.

﴿ وَلَقَدْ بَعَثْنَا فِي كُلِّ أُمَّةٍ رَسُولًا أَنِ اُعْبُدُوا اللهَ وَاجْتَنِبُوا الطَّاغُوتَ ﴾ [النحل:٣٦]

அல்லாஹ் கூறுகிறான்: “அல்லாஹ்வையே வணங்குங்கள், “தாகூத்” (தீய சக்தி) களை விட்டு விலகி விடுங்கள் என்று திண்ணமாக நாம் ஒவ்வொரு சமுதாயத்திலும் ஒரு தூதரை அனுப்பி வைத்தோம்.” (16:36)

யார் அவர்களின் அழைப்பை ஏற்றுக்கொள்கிறாரோ அவர் நற்பாக்கியம் பெற்று வெற்றி பெற்றுவிட்டார். யார் அவர்களுக்கு மாறுசெய்கின்றாரோ அவர் ஏமாற்றமும் கைசேதமும் அடைந்து தோல்வி அடைந்து விட்டார்.

இறைத்தூதர்கள் அனைவரின் பிரச்சாரமும் ஒன்று தான். அது “அல்லாஹ் ஒருவனை மட்டுமே நம்ப வேண்டும்; வணக்க வழிபாடுகளை அவனுக்கு மட்டும் செய்ய வேண்டும்” என்பது தான். ஷரீஅத்திலும் சட்டதிட்டங்களிலும் தான் அவர்களிடையே வேறுபாடு இருந்தது என்றும் நம்ப வேண்டும்.

மேலும் இறைத்தூதர்களில் நம்முடைய நபி முஹம்மது (ஸல்) அவர்கள்தாம் இறுதியானவரும் மிகச் சிறந்தவருமாவார்கள் என்றும் நம்ப வேண்டும்.

﴿ وَلَقَدْ فَضَّلْنَا بَعْضَ النَّبِيِّينَ عَلَى بَعْضٍ وَآتَيْنَا دَاوُودَ زَبُورًا ﴾ [ الإسراء:٥٥]

அல்லாஹ் கூறுகிறான்: “நபிமார்களில் சிலரை சிலரை விடச் சிறப்பித்திருக் கிறோம்.” (17:55) ﴿ مَا كَانَ مُحَمَّدٌ أَبَا أَحَدٍ مِنْ رِجَالِكُمْ وَلَكِنْ رَسُولَ اللهِ وَخَاتَمَ النَّبِيِّينَ ﴾ (الأحزاب:٤٠)

“முஹம்மத் உங்களுடைய ஆண்களில் எவருக்கும் தந்தையாக இருக்க வில்லை. மாறாக அல்லாஹ்வின் தூதராகவும் நபிமார்களில் இறுதியான வராகவும் இருக்கிறார்.” (33:40)

அல்லாஹ்வும் அவன் தூதரும் பெயர் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கும் தூதர் களை நாம் குறிப்பாக நம்ப வேண்டும். உதாரணமாக நூஹ், ஹூத், ஸாலிஹ், இப்றாஹீம் (அலை) மற்றும் பலர்.

## 5. இறுதி நாளை நம்புவது

மரணத்திற்குப் பின்னர் நிகழுமென அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் அறிவித்துள்ள அனைத்து விஷயங்களையும் நம்புவது என்பது இறுதி நாளை நம்புவதில் அடங்கும். உதாரணமாக கப்ருடைய (மண்ணறையின்) சோதனை,

அதன் வேதனை, அங்கு கிடைக்கும் இன்பம், மறுமை நாளில் ஏற்படுகின்ற அமளிகள், துன்பங்கள், பாலம், தராசு, கேள்வி கணக்கு, நற்கூலி, தண்டனை, மக்களுக்கு வினைப்பட்டியல்களைக் கொடுப்பது, அப்போது தமது வினைப் பட்டியலை வலது கையில் வாங்குவோர் இருப்பார்கள். தம் வினைப்பட்டியலை இடது கையில் அல்லது தமது முதுகுக்குப் பின்னால் வாங்குவோரும் இருப்பார்கள்.

இன்னும் நம்முடைய நபி முஹம்மத்(ஸல்) அவர்களுக்கு வழங்கப்படும் தண்ணீர் தடாகத்தை நம்புவதும் இதில் அடங்கும். நபிமொழியில் வந்துள்ளது போல ஒவ்வொரு நபிக்கும் தண்ணீர் தடாகம் உண்டு. மேலும் சொர்க்கம், நரகம், மு.்.மின்கள் அல்லாஹ்வைப் பார்ப்பது, அவர்களிடம் அல்லாஹ் பேசுவது ஆகியவற்றையும் மற்றும் குர்ஆனிலும் ஆதாரப்பூர்வமான நபிமொழிகளிலும் வந்துள்ள இது தொடர்பான அனைத்து விவரங்களையும் நம்புவதும் இதில் அடங்கும். எனவே இவையனைத்தையும் அல்லாஹ்வும் அவன் தூதரும் விளக்கிய முறைப்படி நம்புவது கடமையாகும்.

### 6. விதியை நம்புவது

இதில் நான்கு விஷயங்கள் உள்ளன:

1. நிச்சயமாக அல்லாஹ் இதுவரை நடந்ததையும் இனி நடக்கவிருக்கின்ற வற்றையும் அறிந்துள்ளான். இன்னும் தன்னுடைய அடியார்களின் நிலைமைகள், அவர்களின் வாழ்வாதாதாரங்கள், ஆயுட்காலம், அவர்களின் செயல்கள் மற்றும் அவர்களுடைய இதர விஷயங்கள் அனைத்தையும் அவன் அறிந்துள்ளான். இதில் எதுவும் அல்லாஹ்வுக்கு மறைந்ததல்ல என நம்புவது.

﴿ إِنَّ اللهَ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ ﴾ [التوبة:١١٥]

அல்லாஹ் கூறுகிறான்: “நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் நன்கு அறிந்தவனாக இருக்கின்றான்.” (9:115)

2. அவன் நிர்ணயித்துள்ள எல்லாவற்றையும் அவன் எழுதி வைத்துள்ளான் என நம்புவது. ﴿ وَكُلَّ شَيْءٍ أَحْصَيْنَاهُ فِي إِمَامٍ مُبِينٍ ﴾ [يس:١٢]

அல்லாஹ் கூறுகிறான்: “நாம் ஒவ்வொன்றையும் ஒரு தெளிவான பதிவேட்டில் வரையறுத்துள்ளோம்.” (36:12)

3. செயல்படுத்தப்படுகிற அவனது நாட்டத்தை நம்புவது. அல்லாஹ் நாடியது நடக்கின்றது. அவன் நாடாதது நடக்காது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿ كَذَلِكَ اللهُ يَفْعَلُ مَا يَشَاءُ ﴾ [آل عمران:٤٠]

“அல்லாஹ், தான் நாடுகின்றவற்றைச் செய்வான்.” (3:40)

4. நிகழ்வதற்கு முன் நிர்ணயிக்கப்பட்ட (இவ்வுலகில் உலுள்ள அனைத்தையும்) அவனே படைத்துள்ளான் என நம்புவது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَاللهُ خَلَقَكُمْ وَمَا تَعْمَلُونَ﴾ [الصَّفات:٩٦]

“அல்லாஹ்வே உங்களையும் நீங்கள் செய்தவற்றையும் படைத்தான்.” (37:96)

**ஷிர்க்-இணைவைத்தலும் அதன் வகைகளும்**

ஷிர்க்- இணைவைத்தல் என்பது, அல்லாஹ்வினுடைய படைத்துப் பரிபாலிக்கும் ஆற்றலிலோ அல்லது அவனுடைய இறைத்தன்மையிலோ அல்லது அவனுடைய பெயர்கள், குணங்களிலோ அவனுக்கு இணையை ஏற்படுத்துவதாகும். பெரிய ஷிர்க், சிறிய ஷிர்க் என ஷிர்க் இரு வகைப்படும்.

**1. பெரிய ஷிர்க்:** இது வணக்கவழிபாடுகளில் ஒன்றை அல்லாஹ் அல்லாதவருக்குச் செய்வதாகும். இவ்வாறு செய்பவன் பாவமன்னிப்புத் தேடாமல் இறந்துவிட்டால் நரகத்தில் நிரந்தரமாக இருப்பான். மேலும் இந்த ஷிர்க் அவனது நற்செயல்களை அழித்துவிடும்.

﴿وَلَوْ أَشْرَكُوا لَحَبِطَ عَنْهُمْ مَا كَانُوا يَعْمَلُونَ﴾ [الأنعام:٨٨]

அல்லாஹ் கூறுகிறான்: “அவர்கள் இணை கற்பித்திருந்தால் அவர்கள் செய்த (நல்ல) வை அவர்களை விட்டும் அழிந்திருக்கும்.” (6:88)

தூய முறையில் பாவமன்னிப்புத் தேடினால்தான் பெரிய ஷிர்க்கை அல்லாஹ் மன்னிப்பான்.

﴿إِنَّ اللهَ لَا يَغْفِرُ أَنْ يُشْرَكَ بِهِ وَيَغْفِرُ مَا دُونَ ذَلِكَ لِمَنْ يَشَاءُ وَمَنْ يُشْرِكْ بِاللهِ فَقَدِ افْتَرَى إِثْمًا عَظِيمًا﴾ [النساء:٤٨]

அல்லாஹ் கூறுகிறான்: “தனக்கு இணை கற்பிக்கப்படுவதை அல்லாஹ் மன்னிக்க மாட்டான். அதற்குக் கீழ் நிலையில் உள்ள (பாவத்) தை, தான் நாடியோருக்கு மன்னிப்பான். அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பவர் மிகப் பெரிய பாவத்தையே கற்பனை செய்தார்.” (4:48)

**பெரிய ஷிர்க்கின் வகைகளில் சில:** அல்லாஹ் அல்லாதவரிடம் பிரார்த்திப்பது, அல்லாஹ் அல்லாதவருக்கு நேர்ச்சை செய்வது அல்லது அறுத்துப் பலியிடுவது போன்றவை. அல்லது அல்லாஹ்வையன்றி பல இணைக் கடவுள்களை ஏற்படுத்தி அல்லாஹ்வை நேசிப்பதுபோல அவர்களை நேசிப்பது.

﴿وَمِنَ النَّاسِ مَنْ يَتَّخِذُ مِنْ دُونِ اللهِ أَنْدَادًا يُحِبُّونَهُمْ كَحُبِّ اللهِ﴾ [البقرة:١٦٥]

“அல்லாஹ்வையன்றி அவனுக்கு இணைக் கடவுள்களை ஏற்படுத்தி அல்லாஹ்வை நேசிப்பது போல அவர்களை நேசிப்போரும் மனிதர்களில் உள்ளனர்.” (2:165)

**2. சிறிய ஷிர்க்:** குர்ஆன், ஹதீஸ் ஆதாரங்களில் இதற்கு ஷிர்க் என்றே சொல்லப்படும். ஆனாலும் இது பெரிய ஷிர்க் அளவுக்கு இருக்காது. இந்த வகை ஷிர்க் இறைமார்க்கத்திலிருந்து அவனை வெளியேற்றி விடாது. ஆனால் ஏக இறைக்கொள்கையில் இது குறைபாடுகளை ஏற்படுத்தும். உதாரணமாக சிறிதளவு முகஸ்துதி அல்லது பெரிய ஷிர்க்கின் அளவில் கொண்டு சேர்க்கக் கூடிய ஆனால் பெரிய ஷிர்க்காக இல்லாத காரியங்கள். உதாரணமாக அடக்கத் தலங்களில் தொழுவது, அல்லாஹ் அல்லாதவற்றின் மீது சத்தியம் செய்வது, அல்லாஹ்வையன்றி அவையும் நன்மையோ தீங்கோ செய்ய முடியும் என்ற நம்பிக்கை இல்லாமல். “அல்லாஹ் நாடியதும் இன்னார் நாடியதும் நடந்தது” என்று கூறுவது, இன்னும் இது போன்றவைகள்.

عَنْ مَحْمُودِ بْنِ لَبِيدٍ ﷺ أَنَّ رَسُولَ الله ﷺ قَالَ : إِنَّ أَخْوَفَ مَا أَخَافُ عَلَيْكُمْ الشِّرْكُ الْأَصْغَرُ قَالُوا وَمَا الشِّرْكُ الْأَصْغَرُ يَا رَسُولَ الله قَالَ : الرِّيَاءُ (حم/ ٢٣١١٩)

“நான் உங்கள் விஷயத்தில் அதிகம் அஞ்சுவது சிறிய ஷிர்க்கைத் தான்” என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். “சிறிய ஷிர்க் என்றால் என்ன?” என்று அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு “முகஸ்துதி” என்று விடையளித்தார்கள். (அஹ்மத்-23119)

عَنْ عُمَرَ ﷺ أَنَّهُ قَالَ لَا وَأَبِي فَقَالَ رَسُولُ الله ﷺ مَهْ إِنَّهُ مَنْ حَلَفَ بِشَيْءٍ دُونَ الله فَقَدْ أَشْرَكَ (حم/ ٣٣١،٤٨٨٦)

“அல்லாஹ்வை விடுத்து வேறொன்றின் மீது சத்தியம் செய்தவன் இணை வைத்துவிட்டான்” எனவும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (அஹ்மத்)

இந்த வகையில் சேரக்கூடிய எல்லா செயல்களும் சிறிய ஷிர்க் தான். உதாரணமாக நோய் மற்றும் துன்பங்களை நீக்கவும் அவை வராமல் தடுக்கவும் தாயத்து, தகடு கட்டித் தொங்கவிடுதல், கயிறு, வளையம் அணிதல் போன்றவை. நன்மை, தீமை ஏற்படுவதற்கு இவையும் ஒரு காரணம் என்றல்லாமல் இவை யாவும் நேரடியாகவே நன்மை தீமை அளிக்கக்கூடியவை என்று கருதினால் இவையும் பெரிய ஷிர்க்கில் சேர்ந்துவிடும்.

## வெற்றி பெறும் கூட்டத்தின் கொள்கைச் சுருக்கம்

வெற்றி பெறும் கூட்டத்தின் அதாவது சுன்னத்வல் ஜமாஅத்தினரின் கொள்கை இதுதான்: அல்லாஹ் தான் அகில உலகையும் படைத்துப் பரிபாலிப்பவன்,

வணங்கப் படுவதற்குரிய இறைவன், அனைத்துப் பரிபூரணத் தன்மைகள் அனைத்தையும் ஒருங்கே பெற்ற தனித்துவ மானவன் என்று உண்மையான மு.'.மின் உறுதியாக நம்பி வணக்கத்தை அவனுக்கே உரித்தாக்கி தூய எண்ணத்துடன் அவனை மட்டுமே வணங்க வேண்டும்.

மேலும் பின்வரும் விஷயங்களையும் அவன் அறிந்து கொள்ள வேண்டும். அதாவது அல்லாஹ் தான் படைப்பவன், உருவாக்குபவன், வடிவமைப்பவன், உணவளிப்பவன், கொடுப்பவன், தடுப்பவன், அனைத்துக் காரியங்களையும் நிர்வகிப்பவன். மேலும் அவனே வணக்கத்திற்குரிய உண்மையான இறைவன், அவன் முதலானவன்; அவனுக்கு முன் எதுவும் கிடையாது,அவன் முடிவானவன்; அவனுக்குப் பின் எதுவும் கிடையாது. அவன் வெளிப்படையானவன்; அவனுக்கு மேல் எதுவும் கிடையாது, அவன் அந்தரங்கமானவன்; அவனக்கு அப்பால் எதுவும் கிடையாது. அவன் அனைத்துத் தன்மைகளிலும் மகத்துவங்களிலும் உள்ளமை, அந்தஸ்து, ஆதிக்கத்தால் உயர்ந்தவன்.

(**உள்ளமையால் உயர்ந்தவன்:** இதன் கருத்து, அல்லாஹ் தனது அடியார் களுக்கு மேல் உயர்ந்து தனது அர்ஷின் மீது அமைந்திருக்கிறான் என்பதாகும். **அந்தஸ்தால் உயர்ந்தவன்:** இதன் கருத்து அல்லாஹ் மகத்தான அந்தஸ்தை உடையவன். அதில் அவனுடைய படைப்பினங்களில் எதுவும் அவனுக்கு நிகராக முடியாது என்பது மட்டுமல்ல அதில் எந்தக் குறையும் ஏற்பட முடியாது என்பதாகும். **ஆதிக்கத்தால் உயர்ந்தவன்:** இதன் கருத்தாவது, அல்லாஹ்வை யாரும் மிகைக்க முடியாது. அவன் எல்லா படைப்பினங்கள் மீதும் ஆதிக்கம் செலுத்துபவன். அவனுடைய ஆதிக்கம் மற்றும் ஆட்சியை விட்டும் யாரும் வெளியேறிவிட முடியாது என்பதாகும்.)

அவன் அர்ஷின் மீது அவனது கண்ணியத்திற்கும் மகத்துவத்திற்கும் ஏற்ற விதத்தில் அமர்ந்திருக்கிறான். அதே நேரத்தில் அவனது எதார்த்த நிலையில் உயர்ந்திருக்கிறான். அவனது ஞானம் வெளிப்படைகளையும் அந்தரங்கங் களையும் வானுலகையும் பூவுலகையும் சூழ்ந்திருக்கிறது. அவனுடைய அடியார்களை அவன் அறிந்திருப்பதன் மூலம் அவன் அவர்களுடன் இருக்கிறான். அவர்களின் அனைத்து நிலைமைகளையும் அவன் அறிகிறான். அவன் அருகில் இருக்கிறான்; பதிலளிப்பவனாகவும் இருக்கிறான்.

அவன் அனைத்துப் படைப்பினங்களை விட்டும் தேவையற்றவன். அவன் அவர்களையும் உருவாக்கி, அவர்களுக்குத் தேவையானவற்றையும் உருவாக்கி யிருப்பதில் அனைவரும் அவன் பால் எல்லா நேரங்களிலும் தேவையுடை யோராக உள்ளனர். கணப்பொழுதும் அவன் யாரிடமும் தேவையுள்ளவனாக

இல்லை. அவன் அடியார்கள் மீது அன்பும் இரக்கமும் உள்ளவன். அடியார் களுக்குக் கிடைத்துக் கொண்டிருக்கும் எந்த அருட்கொடையும் அது அவர் களுடைய மார்க்கம் தொடர்பான அருட்கொடையானாலும் சரி உலக ரீதியான அருட்கொடையானாலும் சரி அவனிடமிருந்தே கிடைத்திருக்கிறது. அவன் தான் அருளைக் கொண்டுவருபவன்; வேதனையைத் தடுப்பவன்!

அவனுடைய அருட்கொடைகளில் இதுவும் ஒன்றாகும். அதாவது அவன் ஒவ்வொரு இரவும் இரவின் மூன்றில் ஒரு பகுதி மீதமிருக்கும் பின்நேரத்தில் முதல் வானத்துக்கு இறங்குகிறான். “என்னிடம் பிரார்த்திப்பவர் உண்டா? அவரது பிரார்த்தனையை நான் ஏற்கிறேன். என்னிடம் கேட்பவர் உண்டா? அவருக்குக் கொடுக்கிறேன். என்னிடம் பாவமன்னிப்புத் தேடுபவர் உண்டா? அவருக்கு நான் மன்னிப்பு வழங்குகிறேன்” என்று அதிகாலை உதயமாகும் வரை கூறிக்கொண் டிருப்பான். இவ்வாறு அவன் இறங்குவது அவனுக்கு ஏற்ற விதத்தில் ஆகும்.

அவன் ஞானமிக்கவன். காரியங்களை நிர்ணயிப்பதிலும் சட்டங்களை வழங்குவதிலும் அவனுக்கே பரிபூரணமான ஞானம் இருக்கிறது. அவன் எதையும் வீணுக்காகப் படைக்கவில்லை. எந்த ஷரீஅத்தையும் மக்களுடைய நலனுக் காகவும் அவர்களை விட்டும் தீமையைத் தடுப்பதற்காகவுமே அவன் வழங்கி யிருக்கிறான்.

அவன் மன்னிப்பவன், பிழைபொறுப்பவன், தவ்பாவை- பாவமன்னிப்புக் கோரிக்கையை ஏற்றுக்கொள்பவன். அடியார்களின் தவ்பாவை ஏற்றுக் கொண்டு அவர்களுடைய பிழைகளைப் பொறுத்தருள்கிறான். அவனிடம் திரும்பி பாவமன்னிப்புத் தேடுவோருக்காக பெரும் பெரும் பாவங்களையும் மன்னித்து விடுகிறான்.

அவன் நன்றி பாராட்டுபவன். மிகச் சிறிய நல்லறத்தையும் ஏற்றுக் கொண்டு அதற்கு அதிகமான கூலியை வழங்குவான். நன்றி செலுத்துவோருக்கு தனது அருளை இன்னும் அதிகமாகவும் அளிப்பான்.

அல்லாஹ் தனக்கு என்னென்ன தன்மைகள், குணங்கள் இருப்பதாகக் கூறியுள்ளானோ மற்றும் அவனுடைய தூதர் அவனுக்கு என்னென்ன தன்மைகள், குணங்கள் இருப்பதாகக் கூறியுள்ளார்களோ அவற்றை உண்மையான முஃமின் அப்படியே அல்லாஹ்வுக்குக் கொடுக்க வேண்டும். உதாரணமாக பரிபூரணமான ஜீவிதம், செவியேற்றல், பார்த்தல், பரிபூரணமான ஆற்றல், பொறுமை, மகத்துவம், மேன்மை, கண்ணியம், அழகு, பூரணத்துவம், பொதுவாக அனைத்துப் புகழும்.

திருக்குர்ஆனிலும் ஏராளமான நபிமொழிகளிலும் வந்துள்ளது போல சொர்க்கத்தில் முஃமின்கள் தம் இறைவனை தம் கண்களால் பார்ப்பார்கள்.

அவனைப் பார்ப்பதும் அவனது திருப்தியைப் பெறுவதும் சொர்க்கத்தின் இன்பங்களிலும் பாக்கியங்களிலும் மிகப் பெரியதாகும்.

ஈமான் இல்லாமலும் ஏகத்துவக் கொள்கையின்றியும் எவன் இறந்துவிடுகின்றானோ அவன் நரகத்தில் என்றென்றும் நிரந்தரமாக இருப்பான். மு.ஃ.மின்களில் பெரும்பாவங்களைச் செய்தவர்கள் தவ்பா செய்யாமல் இறந்துவிட்டால் அவர்களுக்குப் பரிந்துரையோ அவர்களின் பாவங்களுக்குப் பரிகாரமோ கிடைக்காமல் அவர்கள் நரம் சென்றால் அதில் அவர்கள் நிரந்தரமாக இருக்க மாட்டார்கள். இன்னும் எவரது உள்ளத்தில் கடுகளவு ஈமான் இருக்கிறதோ அவரும் நரகத்திலிருந்து வெளியேறாமல் அங்கேயே தங்கிவிட மாட்டார்கள்.

ஈமான் என்பது உள்ளத்திலுள்ள நம்பிக்கைகள், அதன் சொல், செயல் களையும் நாவின் வார்த்தைகள் மற்றும் அவயங்களின் செயல்பாடுகளையும் உள்ளடக்கியதாகும். இவற்றைப் பரிபூரணமான முறையில் நிறைவேற்றுபவனே உண்மையான மு.ஃ.மின். அவனே நற்கூலிக்கு உரித்தானவனும் தண்டனை யிலிருந்து தப்பித்தவனும் ஆவான். இவற்றில் ஏதேனும் ஒன்றில் அவன் குறை வைத்து விட்டால் அதன் அளவுக்கு அவனுடைய ஈமானும் குறைந்துவிடும். ஏனெனில் வழிபாடுகள் மற்றும் நன்மைகளைச் செய்வதன் மூலம் ஈமான் அதிகரிக்கும் தீமைகள் மற்றும் பாவங்கள் செய்வதன் மூலம் ஈமான் குறையும்.

மேலும் இதையும் ஒரு மு.ஃ.மின் நம்ப வேண்டும். அதாவது முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும், அவனுடைய தூதரும் ஆவார்கள். அல்லாஹ் அவர்களை நேர்வழியுடனும் உண்மை மார்க்கத்துடனும் அனைத்து மார்க்கங்களை விட மேலோங்கச் செய்வதற்காக அனுப்பி வைத்தான். நம்பிக்கை கொண்டோருக்கு தங்களை விட அவர்கள்தான் முன்னுரிமை பெற்றவர்கள். நபிமார்களில் அவர்கள் இறுதியானவர். அவர்கள் மனிதர்களுக்கும் ஜின்களுக்கும் நற்செய்தி கூறுபவர்களாகவும், எச்சரிக்கை செய்பவர்களாகவும், அல்லாஹ்வின் விருப்பப்படி அவன் பக்கம் அழைப்பவர்களாகவும், ஒளிவீசும் விளக்காகவும் அனுப்பப்பட்டுள்ளார்கள். மார்க்கம் மற்றும் உலகியல் நலன் களுடன் அவர்களை அல்லாஹ் அனுப்பினான். ஏனெனில் ஈடு இணை இல்லாத ஏகனான அல்லாஹ்வை மட்டுமே மக்கள் வணங்க வேண்டும் என்பதற்காக. இதற்கு உதவியாக அவன் தந்திருக்கும் வாழ்வாதாரத்தையும் அவர்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

மேலும் நபியவர்கள் மக்களில் அதிகம் அறிந்தவரும், உண்மையானவரும், மக்கள் நலன் நாடுபவரும், தெளிவாக எடுத்துச் சொல்வதில் அவர்களில் மிக்க மேலானவரும் ஆவார்கள் என்பதையும் ஒரு மு.ஃ.மின் அறிந்துகொள்ள வேண்டும்.

அவன் அவர்களை மதிக்க வேண்டும்; அவர்களை நேசிக்க வேண்டும்; மற்ற எல்லா மனிதர்களின் நேசத்தை விட அவர்களது நேசத்திற்கே முன்னுரிமை தர வேண்டும். மார்க்கத்தின் அடிப்படை விஷயங்களிலும் பிரிவு மஸாயில்களிலும் அவர்களைப் பின்பற்ற வேண்டும். ஏனைய மனிதர்களின் சொல்லை விடவும், வழிகாட்டுதலை விடவும் அவர்களுடைய சொல்லுக்கும் வழிகாட்டுதலுக்குமே முன்னுரிமை வழங்க வேண்டும்.

எல்லாச் சிறப்புகளிலும் அவர்களே பரிபூரணமானவர்கள். தம் சமுதாயத்துக்கு எந்த நன்மையையும் அவர்கள் சொல்லாமல் விட்டதில்லை; எந்தத் தீமையையும் எச்சரிக்காமல் இருந்ததில்லை.

அதுபோல அல்லாஹ் இறக்கியருளிய அனைத்து வேதங்களையும் அவன் அனுப்பிய எல்லா தூதர்களையும் நம்ப வேண்டும். அந்தத் தூதர்களை நம்பு வதில் அவர்களில் எவருக்கிடையேயும் வேற்றுமை பாராட்டக் கூடாது. அவர்கள் அனைவரின் தூதுச் செய்தியும் ஒன்று தான். அது “அல்லாஹ்வை மட்டுமே வணங்குவது. அவனுக்கு இணை துணை ஏதும் கிடையாது” என்பது தான்.

விதியில் அனைத்தையும் நம்ப வேண்டும். மனிதர்களின் செயல்களில் நல்லது, கெட்டது அனைத்தையும் அல்லாஹ்வின் ஞானம் சூழ்ந்துள்ளது; அவனது எழுது கோல் அவற்றைப் பதிவு செய்துள்ளது; அவனது நாட்டம் அவற்றில் நடந்துள்ளது; அவனுடைய விவேகம் அவற்றில் சம்பந்தப்பட்டுள்ளது. அவன் மனிதர்களுக்கு சக்தியையும், சுயவிருப்பத்தையும் கொடுத்துள்ளான். அதன்படியே அவர்களின் சொற்களும் செயல்களும் அவர்களின் விருப்பத்திற் கேற்ப நிகழ்கின்றன. அவற்றில் எதிலும் அவர்களை அவன் நிர்ப்பந்திக்கவில்லை. மாறாக அவற்றில் நல்லது கெட்டதை தேர்வு செய்யக் கூடியவர்களாகவே அவர்களை ஆக்கியிருக்கிறான். குறிப்பாக நம்பிக்கை கொண்டோருக்கு ஈமான்- நம்பிக்கையை அவர்களுக்கு விருப்பமானதாக ஆக்கி அதை அவர்களின் உள்ளங்களில் அழகாக்கினான். கு.ஃ.ப்ர்- இறைநிராகரிப்பையும், குற்றம் புரிவதையும், மாறுசெய்வதையும் அவர்களுக்கு வெறுப்பாக்கினான். இது அவனது நீதி மற்றும் விவேகத்திற்கேற்ப அமைந்ததாகும்.

இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைகளில் இதுவும் ஒன்றாகும். அதாவது ஒரு மு.ஃ.மின் அல்லாஹ், அவனது வேதம், அவனது தூதர், முஸ்லிம்களின் அதிகாரிகள், பொதுமக்கள் ஆகிய அனைவருக்கும் நலம் நாடிட வேண்டும். மார்க்கம் அவனுக்குக் கடமையாக்கியதன் படி நன்மையை ஏவ வேண்டும்; தீமையைத் தடுக்க வேண்டும். பெற்றோருக்கு நன்மை செய்தல், இரத்த பந்த உறவுகளை அனுசரித்தல், சொந்தக்காரர்களுக்கும், அண்டை வீட்டாருக்கும்

நன்மை செய்தல், இன்னும் நன்மை செய்வதற்கு உரிமையுடைய ஒவ்வொருவருக்கும் எல்லாப் படைப்பினங்களுக்கும் நன்மை செய்தல் ஆகியவற்றுக்கும் அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டும். நல்ல அழகான குணங்களின் பக்கம் மக்களை அழைக்க வேண்டும். தீய, மோசமான குணங்களை விட்டும் மக்களைத் தடுக்க வேண்டும்.

மேலும் இறைநம்பிக்கை கொண்டவர்களில் பரிபூணமான ஈமானை உடையவர் யார் எனில் நற்செயல்கள் மற்றும் நற்பண்புகளை உடையவரும், உண்மை பேசுபவாரும் நன்மையின் பக்கம் வழிகாட்டுபவரும், தீமையை விட்டும் விலக்குபவரும்தான் என்றும் ஒரு மு.்.மின் நம்ப வேண்டும்.

மேலும் அல்லாஹ்வின் பாதையில் போர் புரிவது என்பது மறுமை நாள் வரை நீடித்திருக்கும் காரியமாகும். அது இறைமார்க்கத்தின் மிக உன்னதமான செயலாகும். கல்விக்காகவும் ஆதாரத்தை நிலைநாட்டுவதற்காகவும் போராடுவதும் இதில் அடங்கும். ஆயுதம் தாங்கி போர் புரிவதும் உள்ளது. சாத்தியமான எல்லா வழிகளிலும் இறைமார்க்கத்தைக் காப்பது ஒவ்வொரு முஸ்லிமின் மீது கட்டாயக் கடமையாகும். போர் புரிவதற்கான நிபந்தனைகளும் காரணங்களும் இருக்கும்போது நல்லவர், தீயவர் என எந்த ஆட்சியாளருடனும் சேர்ந்து போர் புரிய வேண்டும்.

இவ்வாறே இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைகளில் பின்வரும் விஷயங்களும் அடங்கும். அதாவது முஸ்லிம்களின் ஒற்றுமைக்காக ஆர்வமும் அக்கரையும் எடுத்துக் கொள்ளவதோடு அதற்காக மக்களைத் தூண்டவும் வேண்டும். அவர்களின் உள்ளங்களுக்கிடையே நெருக்கத்தையும் இணைப்பையும் ஏற்படுத்துவதற்குப் பாடுபட வேண்டும். பிரிவினை, ஒருவரையொருவர் வெறுத்தல், குரோதம் கொள்ளுதல், இன்னும் இத்தகைய தீமைகளின் பக்கம் கொண்டு செல்லக்கூடிய அனைத்துக் காரியங் களையும் விட்டும் எச்சரிக்கை செய்ய வேண்டும். மனிதர்களின் உயிர்கள், செல்வங்களிலும், அவர்களின் கண்ணியம், மான மரியாதையிலும், அவர்களின் அனைத்து உரிமைகளிலும் அவர்களுக்குப் பங்கம் விளைவிப்பதை விட்டும் தடுக்க வேண்டும். முஸ்லிம் களுடனும் முஸ்லிம் அல்லாதவர்களுடனும் நடந்து கொள்ளும் பழக்க வழக்கங்கள் யாவற்றிலும் நீதி, நேர்மையை ஏவ வேண்டும்.

இவ்வாறே சமுதாயங்களில் சிறந்தது முஹம்மத் (ஸல்) அவர்களின் சமுதாயம்; அவர்களில் சிறந்தவர்கள் நபித்தோழர்கள் ஆவர். குறிப்பாக நேர்வழி பெற்ற கலி.்.பாக்கள், சொர்க்கம் குறித்து நற்செய்தி சொல்லப்பட்ட பத்துப்பேர், பத்ருப் போரில் கலந்துகொண்டோர், பைஅத் ரிழ்வானில் கலந்து கொண்டோர்,

முஹாஜிர்கள் மற்றும் அன்ஸார்களில் ஈமான் கொள்வதில் முந்திச் சென்ற முதலாமவர்கள் ஆகியோராவர் என்றும் ஒரு மு∴மின் நம்ப வேண்டும்.

நபித்தோழர்களை நேசிக்க வேண்டும்; அவர்களை நேசிப்பதை இறைமார்க் கத்தின் ஒரு அம்சமாக் கருத வேண்டும். அவர்களிடம் உள்ள நல்ல விஷயங் களைப் பரப்ப வேண்டும்; அவர்களிடையே ஏற்பட்ட தீமைகள் எனக் கூறப்பட்ட வைகளை விட்டுவிட வேண்டும். மக்களை நல்வழிப்படுத்தக்கூடிய அறிஞர்கள், நீதி செலுத்தக்கூடிய ஆட்சியாளர்கள், மார்க்கத்தில் உயர் அந்தஸ்தும், ஏனைய முஸ்லிம்களை விட பல வகையிலும் சிறப்பும் பெற்றவர்களை மதிப்பதையும் மார்க்கக் கடமையாக எடுத்துக் கொள்ள வேண்டும். மேலும் சந்தேகம், இணை வைத்தல், பிளவு, நயவஞ்சகம், தீய குணங்கள் ஆகியவற்றிலிருந்து அல்லாஹ் அவர்களைப் பாதுகாத்து, அவர்கள் மரணிக்கும் வரை நபி(ஸல்)அவர்கள் காட்டிய வழியில் அவர்களை அல்லாஹ் உறுதிப்படுத்த வேண்டும் என அவனிடம் இறைஞ்ச வேண்டும். இவை தான் இஸ்லாமிய அடிப்படைக் கொள்கையின் சாராம்சம். இதைத்தான் வெற்றி பெறும் கூட்டத்தினரைப் பின்பற்று வோர் நம்பி இதன் பக்கமே மக்களை அழைக்கவும் வேண்டும்.

## أحكام الطهارة
## தூய்மையின் சட்டங்கள்

### சுத்தமும் அசுத்தமும்

**அசுத்தம்:** ஒரு முஸ்லிம் எதை விட்டும் தவிர்ந்து கொள்வதும் அது பட்ட இடத்தைக் கழுவதும் கடமை யாகுமோ அதுவே அசுத்தம் எனப்படும்.

உடையிலோ, உடலிலோ அசுத்தம் பட்டுவிட்டால் அது பார்வைக்குத் தென்படக்கூடிய மாதவிடாய் இரத்தம் போன்ற அசுத்தமாக இருந்தால் அதைக் கழுவுவது கடமையாகும் கழுவிய பிறகு நீங்குவதற்கு சிரமமான சுவடு எஞ்சி யிருந்தால் அது பற்றிக் குற்றமில்லை. பார்வைக்குத் தென்படாத அசுத்தமாக இருந்தால் ஒரு தடவையேனும் அதைக் கழுவினால் போதும்.

தரையில் அசுத்தம் பட்டுவிட்டால் அதில் தண்ணீரை ஊற்றிவிடுவதன் மூலம் அது சுத்தமாகின்றது. அதுபோல அசுத்தம் திரவப்பொருளாக இருந்தால் அது காய்ந்துவிடுவதன் மூலமும் தரை சுத்தமாகின்றது. அசுத்தம் திடப்பொருளாக இருந்தாலோ அதை நீக்கினாலே தவிர தரை சுத்தமாகாது.

மழை நீர், கடல் நீர் போன்றவை சுத்தம் செய்வதற்குப் பயன்படுத்தப்படும். அவ்வாறே பயன்படுத்தப்பட்ட தண்ணீரையும் சுத்தம் செய்வதற்காக மீண்டும் பயன்படுத்திக் கொள்ளலாம். அதுபோன்றே சுத்தமான பொருள் தண்ணீருடன் கலந்து தண்ணீர் எனும் நிலையை மாற்றி விடாமல் அதன் அசல் தன்மை யிலேயே இருந்தால் அந்தத் தண்ணீரையும் சுத்தம் செய்யப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் சுத்தமான பொருள் தண்ணீருடன் கலந்து தண்ணீர் எனும் நிலையை மாற்றிவிட்டால் அந்தத் தண்ணீரை சுத்தம் செய்யப் பயன்படுத்தக் கூடாது. அசுத்தம் கலந்துவிட்ட நீரைப் பயன்படுத்தக் கூடாது. இது நீரின் சுவையையோ வாடையையோ அல்லது நிறத்தையோ அந்த அசுத்தம் மாற்றி விட்டால்தான். அவற்றில் எதுவும் மாறவில்லையெனில் சுத்தம் செய்வதற்காக அதைப் பயன்படுத்துவது கூடும்.

பாத்திரத்திலிருந்து குடித்து மீதமுள்ள தண்ணீரைப் பயன்படுத்திக் கொள்வதும் ஆகுமானதே. ஆனால் நாய், பன்றி குடித்து மீதமான தண்ணீரைத் தவிர. ஏனெனில் இந்தத் தண்ணீர் அசுத்தமாகும்.

**அசுத்தத்தின் வகைகள்**

அசுத்தங்கள் பல வகைப்படும்.

அ) மலம், ஜலம்.

ஆ) வதீ: இது சிறுநீருக்குப் பிறகு வெளியேறக் கூடிய வெண்மையான, கட்டியான (வெட்டை) நீராகும்.

இ) மதீ: இது பாலுணர்வு மேலிடும்போது வெளியேறக்கூடிய வெண்மையான, வளவளப்பான (வெட்டை) நீராகும். எனினும் இந்திரியம் சுத்தமானதே! ஆனால் அது ஈரமாக இருந்தால் கழுவுவதும் காய்ந்திருந்தால் சுரண்டி அகற்றுவதும் விரும்பத்தக்கதாகும்.

ஈ) எதன் இறைச்சியை உண்ண அனுமதி இல்லையோ அப்பிராணியின் சிறுநீர், விட்டை ஆகிய இரண்டும் அசுத்தமாகும். எதன் இறைச்சியை உண்ண அனுமதி உள்ளதோ அப்பிராணியின் சிறுநீரும் விட்டையும் அசுத்தமாகாது.

மேற்கூறப்பட்ட இந்த அசுத்தங்கள் ஆடையிலோ உடலிலோ பட்டுவிட்டால் அவற்றை நீக்குவதும் கழுவுவதும் அவசியமாகும்.

**அசுத்தத்தினுடைய சில சட்டங்கள்**

1. ஒருவன் மீது ஒரு பொருள் பட்டுவிட்டால் அது அசுத்தமா? இல்லையா? என்று தெரியாவிட்டால் அது பற்றி யாரிடமும் கேட்க வேண்டிய அவசியமில்லை.

அதுபோல அதைக் கழுவுவதும் அவசியமில்லை. ஏனெனில் எந்தப் பொருளாக இருந்தாலும் சட்டத்தின் அசல் நிலை தூய்மையானது என்பதே.

2. ஒருவன் தொழுது முடித்த பிறகு தன் உடலிலோ உடையிலோ அசுத்தத்தைப் பார்க்கிறான், அது அசுத்தம் என்று அவனுக்கு முன்னரே தெரியாமலிருந்தால் அல்லது தெரிந்தும் அதை மறந்துவிட்டால் அவனது தொழுகை நிறைவேறிவிடும்.

3. ஆடையில் அசுத்தம் பட்ட இடம் எதுவென்று ஒருவனுக்குத் தெரியாத போது அதைத் தெரிந்து கொள்வதற்கு முயற்சிக்க வேண்டும். அசுத்தம் பட்ட இடம் இதுவாகத் தான் இருக்கும் என்று அவனது சந்தேகம் பெரும்பாலும் எந்த இடத்தில் தோன்றுகிறதோ அந்த இடத்தைக் கழுவுவது அவசியமாகும். ஏனெனில் அசுத்தம் என்பது புலனுர்வுக்குட்பட்ட பொருளாகும். அதற்கு நிறம், ருசி அல்லது வாடை இருக்கும்.

**மலஜலம் கழித்தல்**

மல ஜலம் கழிப்பதன் ஒழுங்கு முறைகள்:

1. கழிப்பறையில் நுழையும்போது بِسْمِ اللهِ اَللَّهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْخُبْثِ وَالْخَبَائِثِ

“பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக மினல் குப்ஸி வல்கபாயிஸ்” என்று கூறி இடது காலை முன்வைத்து நுழைய வேண்டும்.

(பொருள்: இறைவா! ஆண், பெண் ஷைத்தான்களை விட்டும் உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடுகின்றேன்.)

வெளியே வரும்போது வலது காலை முன்வைத்து غُفْرَانَـــكَ “ஃகுஃப்ரானக” என்று கூறி வெளியே வர வேண்டும். (பொருள்: இறைவா! உன்னிடம் நான் பாவமன்னிப்புக் கோருகிறேன்.)

2. அல்லாஹ்வின் திருநாமம் உள்ளவற்றை உடன் எடுத்துச் செல்லக்கூடாது. அது காணாமல் போய்விடும் என்ற அச்சம் இருந்தாலே தவிர!

3. திறந்த வெளியில் மலஜலம் கழிக்கும்போது கிப்லாவை முன்னோக்கவோ பின்னோக்கவோ கூடாது. கட்டிடத்திற்குள் என்றால் கிப்லாவை முன்னோக்குவதும் பின்னோக்குவதும் கூடும்.

4. மக்களைவிட்டும் மானத்தை மறைத்துக் கொள்ள வேண்டும். இதில் அலட்சியம் காட்டக்கூடாது. பொதுவாக ஆண் மறைக்க வேண்டிய பகுதி தொப்புளிலிருந்து முட்டுக்கால் வரையாகும். பெண் உடல் முழுவதும் மறைத்துக் கொள்ள வேண்டியவையே. ஆனால் தொழுகையில் முகத்தைத் தவிர. அந்நிய

ஆண்கள் இருக்கும்போது தொழுகையிலும் அவள் முகத்தை மறைக்க வேண்டும்.

5. மலஜலத்திலிருந்து எதுவும் உடலிலோ உடை யிலோ பட்டுவிடாமல் பாதுகாப்பாக இருக்க வேண்டும்.

6. மலஜலம் கழித்த பின்னர் தண்ணீரால் சுத்தம் செய்ய வேண்டும். அல்லது அசுத்தத்தை நீக்க கற்கள், காகிதம் போன்றவற்றைப் பயன்படுத்த வேண்டும். மேலும் சுத்தம் செய்யும்போது இடது கையைப் பயன்படுத்த வேண்டும்.

## உளூ

உளூ இல்லாமல் தொழுகை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: “உங்களில் ஒருவருக்கு உளூ நீங்கிவிட்டால் மீண்டும் உளூச் செய்து தொழாதவரை அவரது தொழுகையை அல்லாஹ் ஏற்றுக்கொள் வதில்லை.” அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: புகாரி(6954), முஸ்லிம்(225)

عَنْ أَبِي هُرَيْرَةَ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ لَا يَقْبَلُ الله صَلَاةَ أَحَدِكُمْ إِذَا أَحْدَثَ حَتَّى يَتَوَضَّأَ (خ/ ٦٩٥٤، م/ ٢٢٥)

உளூச் செய்யும்போது ஒன்றன் பின் ஒன்றாகவும் தொடராகவும் செய்ய வேண்டும்.

(ஒன்றன் பின் ஒன்றாக என்றால் உறுப்புக்களை வரிசைக்கிரமமாகக் கழுவுவது. ஒரு உறுப்பைக் கழுவும் முன் வேறொன்றைக் கழுவக் கூடாது. உதாரணமாக முகத்தைக் கழுவிய பிறகு கைகளைக் கழுவது, பிறகு தலைக்கும் காதுகளுக்கும் மஸஹ் செய்து பிறகு கால்களைக் கழுவது. தொடராக என்றால் ஒரு உறுப்பைக் கழுவியதும் அது காய்வதற்குள் அடுத்த உறுப்பைக் கழுவி விடுவது.)

உளூவுக்கு மகத்தான சிறப்புகள் உள்ளன. மனிதன் அதை உணர்ந்து செயல்படுவது அவசியமாகும். அச்சிறப்புகளில் சில:

عَنْ عُثْمَانَ بْنِ عَفَّانَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ الله ﷺ مَنْ تَوَضَّأَ فَأَحْسَنَ الْوُضُوءَ خَرَجَتْ خَطَايَاهُ مِنْ جَسَدِهِ حَتَّى تَخْرُجَ مِنْ تَحْتِ أَظْفَارِهِ (م/ ٢٤٥)

“யார் உளூச் செய்கிறாரோ அதையும் அழகாகச் செய்கிறாரோ அவரது பாவங்கள் அவரது உடம்பிலிருந்து ஏன் அவருடைய நகக்கண்கள் வழியாகக் கூட வெளியேறிவிடுகின்றன” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: உஸ்மான் (ரலி), நூல்: முஸ்லிம்-245

عن عُثْمَانَ بْنَ عَفَّانَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ أَتَمَّ الْوُضُوءَ كَمَا أَمَرَهُ اللهُ تَعَالَى فَالصَّلَوَاتُ الْمَكْتُوبَاتُ كَفَّارَاتٌ لِمَا بَيْنَهُنَّ (م/ ٢٣١)

"அல்லாஹ் ஏவியபடி முழுமையாக உளூச் செய்து கடமையான தொழுகை களை யார் நிறைவேற்றுகிறாரோ அவற்றுக்கு இடையேயுள்ள பாவங்களுக்கு அவை பரிகாரமாக அமைகின்றன" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: உஸ்மான் (ரலி), நூல்: முஸ்லிம்-231

## உளூச் செய்யும் முறை

1. உளூச் செய்கின்றேன் என்று நாவால் மொழியாமல் மனதால் எண்ணிக் கொள்ள வேண்டும். ஏனெனில் நிய்யத் என்பது ஒன்றைச் செய்வதாக உள்ளத்தால் எண்ணுவதாகும். பிறகு பிஸ்மில்லாஹ் கூறவேண்டும்.

2. இரு கைகளையும் மணிக்கட்டு வரை மூன்று முறை கழுவ வேண்டும்.

3. மூன்று முறை வாய்க் கொப்பளித்து நாசிக்கு தண்ணீர் செலுத்த வேண்டும்

4. முகத்தை- அகலவாக்கில் ஒரு காதிலிருந்து மறு காது வரை, நீளவாக்கில் தலை முடி முளைக்கும் இடத்திலிருந்து நாடிக்குழி வரை- மூன்று முறை கழுவ வேண்டும்.

5. இரு கைகளையும் விரல்களின் நுனியிலிருந்து முழங்கை வரை முதலில் வலது கை பிறகு இடது கை என மூன்று முறை கழுவ வேண்டும்.

6. ஒரு தடவை தலைக்கு மஸஹ் செய்ய வேண்டும். அதாவது இரு கைகளையும் தண்ணீரில் நனைத்து அவ்விரண்டையும் தலையின் முன்பாகத்தில் வைத்து பிடரி வரை தடவி ஆரம்பித்த இடத்திற்கு மீண்டும் கைகளைக் கொண்டு வர வேண்டும்.

7. பிறகு காதுகளில் ஒரு முறை தடவ வேண்டும். அதாவது இரு ஆட்காட்டி விரல்களை இரு காது களுக்குள் நுழைத்து கட்டை விரல்களால் காதுகளின் வெளிப்புறத்தைத் தடவ வேண்டும்.

8. இரண்டு கால்களையும் விரல்களின் நுனியி லிருந்து கரண்டை வரை முதலில் வலது கால் பிறகு இடது கால் என மூன்று முறை கழுவ வேண்டும்.

9. பிறகு அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு வஅன்ன முஹம்மதன் அப்துல்லாஹி வரஸூலுஹு என ஹதீஸில் வந்துள்ள துஆவை ஓத வேண்டும்.

عن عمر بن الخطاب ﷺ عن النبي ﷺ قَالَ مَا مِنْكُمْ مِنْ أَحَدٍ يَتَوَضَّأُ فَيُبْلِغُ أَوْ فَيُسْبِغُ الْوُضُوءَ ثُمَّ يَقُولُ أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُ اللهِ وَرَسُولُهُ إِلَّا فُتِحَتْ لَهُ أَبْوَابُ الْجَنَّةِ الثَّمَانِيَةُ يَدْخُلُ مِنْ أَيِّهَا شَاءَ (م/ ٢٣٤)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "உங்களில் ஒருவர் உளுச் செய்து விட்டு அதையும் பூரணமாகச் செய்துவிட்டு பிறகு 'அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு வஅன்ன முஹம்மதன் அப்துல்லாஹி வரஸூலுஹு' என்று கூறினால் அவருக்காக சொர்க்கத்தின் எட்டு வாசல்கள் திறக்கப்படுகின்றன. அவற்றில் அவர் விரும்பிய எந்த வாசல் வழியாகவும் அவர் அதில் நுழையலாம்.

அறிவிப்பவர்: உமர் (ரலி), நூல்: முஸ்லிம்-234

(பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவார்கள் என்றும் நான் சாட்சி கூறுகிறேன்.)

**காலுறைகள் மீது மஸஹ் செய்தல்**

இஸ்லாமிய மார்க்கம் எளிமையாக இருப்பதனால் காலுறைகள் மீது மஸஹ் செய்வதற்கு நமக்கு அனுமதியளித்துள்ளது. காலுறைகள் மீது மஸஹ் செய்வது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நடைமுறை மூலம் நிரூபணமானதாகும்.

عَنْ عَمْرِو بْنِ أُمَيَّةَ ﷺ قَالَ رَأَيْتُ النَّبِيَّ ﷺ يَمْسَحُ عَلَى عِمَامَتِهِ وَخُفَّيْهِ (خ/ ٢٠٥)

وعَنْ الْمُغِيرَةِ بْنِ شُعْبَةَ قَالَ بَيْنَا أَنَا مَعَ رَسُولِ اللهِ ﷺ ذَاتَ لَيْلَةٍ إِذْ نَزَلَ فَقَضَى حَاجَتَهُ ثُمَّ جَاءَ فَصَبَبْتُ عَلَيْهِ مِنْ إِدَاوَةٍ كَانَتْ مَعِي فَتَوَضَّأَ وَمَسَحَ عَلَى خُفَّيْهِ (خ/ ٢٠٣ ، م/ ٢٧٤) واللفظ له

"நபி(ஸல்) தமது தலைப்பாகைக்கும் காலுறைகளுக்கும் மஸஹ் செய்வதை நான் பார்த்திருக்கிறேன்" என்று அபூஜஃபர் பின் அம்ரு (ரலி) அறிவிக்கும் ஹதீஸ் புகாரியிலும் (205), "ஒரு நாள் இரவு நான் நபி(ஸல்) அவர்களுடன் (பயணத்தில்) இருக்கும்போது அவர்கள் ஒரு இடத்தில் இறங்கி தமது தேவையை நிறைவேற்றி விட்டு வந்தார்கள். என்னிடமிருந்த ஒரு பாத்திரத்திலிருந்து தண்ணீரை நான் அவர்களுக்கு ஊற்றினேன். அவர்கள் உளுச் செய்துவிட்டு தமது காலுறை களுக்கு மஸஹ் செய்தார்கள்" என்று முஃகீரா பின் ஷுஃபா (ரலி) அறிவிக்கும் ஹதீஸ் புகாரி(203), முஸ்லிமிலும்(274) பதிவு செய்யப்பட்டுள்ளது.

எனினும் காலுறைகள் மீது மஸஹ் செய்வதற்கு சில நிபந்தனைகள் உள்ளன. உளுச் செய்துவிட்டு காலுறை அணிந்திருக்க வேண்டும். காலுறைகளின் மேற் பகுதியில் ஈரக் கையால் தடவி மஸஹ் செய்ய வேண்டும். அடிப்பகுதியில் மஸஹ் செய்யக் கூடாது.

மஸஹ் செய்வதற்குரிய கால அளவு ஊரில் தங்கி யிருப்பவருக்கு ஒரு நாளும் தொழுகையைக் கஸர் செய்யும் அளவுக்குத் தூரமாகச் செல்லும் பயணிக்கு மூன்று நாட்களுமாகும். இக்கால அளவு முடிந்து விட்டால் அல்லது

மஸஹ் செய்த பின் காலுறைகளைக் கழற்றி விட்டால் அல்லது குளிப்பு கடமையாகிவிட்டால் மஸஹ் செய்தது நீங்கிவிடும்.

### உளுவை நீக்கும் காரியங்கள்

1. மலஜலம் கழிப்பது, காற்றுப் பிரிவது, மதி, வதி எனும் வெட்டை வெளியாவது, இந்திரியம் வெளிப்படுவது, (இந்திரியம் வெளிப்பட்டால் குளிப்பும் கடமை யாகிவிடும்) 2. தூக்கம், 3. ஒட்டக இறைச்சி உண்பது, 4. உணர் விழந்து போவது.

### குளித்தல்

சுத்தம் செய்கிறேன் எனும் நிய்யத்துடன் வாய்க் கொப்பளித்து, நாசிக்கு தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்து உடம்பு முழுவதும் தண்ணீர் ஊற்றி கழுவு வதற்கே குளிப்பது என்று பொருள். ஐந்து காரணங்களால் குளிப்பு கடமை யாகின்றது.

1. ஆணுக்கும் சரி பெண்ணுக்கும் சரி தூக்கத்திலோ விழிப்பிலோ இச்சையுடன் இந்திரியம் வெளிப்படுவது. இச்சையின்றி இந்திரியம் வெளியானால் குளிப்பு கடமையாகாது. உதாரணமாக நோய் அல்லது கடும் குளிரின் காரணமாக இந்திரியம் வெளிப்படுவதுபோல. இவ்வாறே ஸ்கலிதம் வெளிப் பட்டதாகக் கனவு கண்டு இந்திரியமோ அல்லது அதற்கான அடையாளமோ தென்படவில்லையானாலும் குளிப்பு கடமையாகாது. ஆயினும் இந்திரியத்தையோ அதற்கான அடையாளத்தையோ கண்டால் குளிப்பு கடமையாகிவிடும்; கனவில் இந்திரியம்வெளியான ஞாபகம் இல்லாவிட்டாலும் சரியே.

2. ஆண் குறியின் முன்பகுதி யோனியின் மலர்ப் பகுதியில் நுழைந்து இந்திரியம் வெளியாகாவிட்டாலும் குளிப்பு கடமையாகிவிடும்.

3. மாதவிடாய், பிரசவ இரத்தம் நின்று விடும்போது

4. மரணமடைதல். இதுவும் ஒரு காரணம் எனும் அடிப்படையில்தான் மய்யித்தைக் குளிப்பாட்டுவது கடமையாகிறது.

5. ஒருவன் புதிதாக இஸ்லாத்தைத் தழுவினால் குளிப்பது அவனுக்குக் கடமையாகும்.

### துடக்கு உடையவருக்குத் தடுக்கப்பட்டவை

துடக்கு உடையவருக்கு சில காரியங்கள் தடுக்கப்பட்டவையாகும். அவை பின் வருமாறு:

1. தொழுவது, 2. தவா.ஃப் செய்வது, 3. குர்ஆனைத் தொடுவது, அதைச் சுமப்பது, இதேபோன்று தான் சப்தமிட்டோ, சப்தமில்லாமலோ குர்ஆன் ஓதுவதும்

மனப்பாடமாகவோ ஏட்டிலிருந்தோ குர்ஆனை ஓதுவதும். (இது விஷயத்தில் கருத்து வேறுபாடுள்ளது.)

2. பள்ளியில் தங்குவது; ஆனால் பள்ளிக்குள் சென்று வருவதில் குற்ற மில்லை. உளுச் செய்வதன் மூலம் தொடக்கிலிருந்து சிறிதளவு சுத்தமாகி விட்டால் பள்ளியில் தங்குவது கூடும்.

**தயம்மும் செய்தல்**

ஊரில் இருக்கும்போதும் பயணத்தில் இருக்கும்போதும் தயம்மும் செய்வதற்கு அனுமதியளிக்கப்பட்டுள்ளது. தயம்மும் என்பது உளுவுக்கு அல்லது குளிப்புக்குப் பகரமாகச் செய்ய வேண்டிய ஒன்றாகும். இது பின்வரும் காரணங்களுக்காகச் செய்யப்படும்.

1. தண்ணீர் கிடைக்கவில்லையென்றால் அல்லது தண்ணீர் இருந்தும் சுத்தம் செய்வதற்குப் போதுமாகாது என்றால் தயம்மும் செய்து கொள்ளலாம். ஆனால் முன்னதாக எங்கேனும் தண்ணீர் இருக்கிறதா? என்று தேடிப் பார்த்துக் கொள்ள வேண்டும். தண்ணீர் கிடைக்க வில்லையென்றால் தயம்மும் செய்து கொள்ளலாம். அல்லது தண்ணீர் அருகில் இருந்து அதைத் தேடிச் செல்லும் போது தன் உயிருக்கோ பொருளுக்கோ ஊறு விளையும் என அஞ்சினால் தயம்மும் செய்து கொள்ளலாம்.

2. உளுவினுடைய உறுப்புக்களில் காயம் இருந்தால் அதைத் தண்ணீரால் கழுவுவதால் பாதிப்பு ஏற்படும் என்றால் ஈரக்கையால் தடவ வேண்டும். அதனாலும் பாதிப்பு ஏற்படும் என்றால் மற்ற உறுப்புக்களைக் கழுவி விட்டு அந்த உறுப் புக்காக தயம்மும் செய்து கொள்ள வேண்டும்.

3. தண்ணீர் அல்லது வானிலை கடும் குளிராக இருக்கும்போது தண்ணீரைப் பயன்படுத்துவதால் இடையூறு ஏற்படும் என அஞ்சினால் தயம்மும் செய்து கொள்ளலாம்.

4. தண்ணீர் இருந்தும் அது குடிக்கத் தேவைப்பட்டால் தயம்மும் செய்து கொள்ளலாம்.

**தயம்மும் செய்யும் முறை**

முதலில் தயம்மும் செய்வதை மனதில் நினைத்துக் கொள்ள வேண்டும். பிறகு இரண்டு கைகளையும் பூமியில் ஒரு முறை அடித்து முகத்திலும் இடது கையை வலது புறங்கை மீதும் வலது கையை இடது புறங்கை மீதும் (மணிக்கட்டு வரை) தடவிக் கொள்ள வேண்டும்.

உளுவை நீக்கக்கூடிய காரியங்கள் அனைத்தும் தயம்முமையும் நீக்கிவிடும். மேலும் தயம்மும் செய்த ஒருவருக்கு தொழுகைக்கு முன்போ அல்லது தொழுது கொண்டிருக்கும்போதோ தண்ணீர் கிடைத்துவிடுமானால் தயம்மும் நீங்கிவிடும். தொழுது முடித்த பிறகு தண்ணீர் கிடைத்தால் அவரது தொழுகை நிறைவேறி விடும். திருப்பித் தொழ வேண்டியதில்லை.

**மாதவிடாய், பிரசவத்தீட்டு**

மாதவிடாய் அல்லது பிரசவத் தீட்டு ஏற்பட்ட பெண் அந்தக் காலங்களில் தொழுவதோ நோன்பு நோற்பதோ கூடாது. ஏனெனில்

عَنْ عَائِشَةَ قَالَتْ قَالَ النَّبِيُّ ﷺ إِذَا أَقْبَلَتْ الْحَيْضَةُ فَدَعِي الصَّلَاةَ وَإِذَا أَدْبَرَتْ فَاغْسِلِي عَنْكِ الدَّمَ وَصَلِّي

(خ/ ٣٣١، م/ ٣٣٣)

“உனக்கு மாதவிடாய் வந்து விட்டால் தொழுகையை விட்டுவிடு. மாதவிடாய் நீங்கிவிட்டால் இரத்தத்தைக் கழுவிவிட்டுத் தொழுது கொள்” என நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி), நூல்: புகாரி(331), முஸ்லிம்(333)

விடுபட்ட தொழுகைகளை அவள் கழாச் செய்ய வேண்டியதில்லை. நோன்பைப் பொறுத்தவரை அவள் விட்டிருந்த நோன்புகளைக் கழாச் செய்ய வேண்டும். மாதவிடாய் ஏற்பட்ட பெண் க.:.பாவைத் தவா.:.ப் செய்வது கூடாது. மாதவிடாய் ஏற்பட்ட பெண்ணுடன் அவளது கணவன் உடலுறவு கொள்வது விலக்கப்பட்டதாகும். ஆனாலும் அவளிடம் உடலுறவு அல்லாத ஏனைய இன்பங்களை அவன் அனுபவிப்பது கூடும். மாதவிடாய் ஏற்பட்டவள் திருக் குர்ஆனைத் தொடுவதும் கூடாது.

மாதவிடாய் ஏற்பட்டவள் அந்த இரத்தம் நின்றதும் அவள் தூய்மையாகி விடுவாள். அந்த நேரத்தில் அவள் குளிப்பது கடமையாகும். அதன் பிறகு அவளுக்கு தடுக்கப்பட்டிருந்த அனைத்தும் அவளுக்கு ஹலாலாகிவிடும். தொழுகை நேரம் வந்த பிறகு தொழுகையை நிறைவேற்றுவதற்கு முன் ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் அல்லது பிரசவத்தீட்டு ஏற்பட்டால் சரியான கூற்றின்படி அவள் தூய்மையானதும் அந்தத் தொழுகையை அவள் கழாச் செய்ய வேண்டும். தொழுகையின் நேரம் முடிவடைவதற்கு முன் ஒரு ரக்அத் தொழும் நேரத்தில் அவள் தூய்மையடைந்து விட்டால் அந்தத் தொழுகையை அவள் அவசியம் நிறைவேற்ற வேண்டும். அத்தொழுகையுடன் சேர்ந்துள்ள தொழுகையையும் அவள் கழாச் செய்வது விரும்பத்தக்கதாகும். உதாரணமாக சூரியன் மறை வதற்கு முன் ஒரு ரக்அத் தொழும் நேரத்தில் அவள் சுத்தமாகிவிட்டால் அஸர்

தொழுகையை அவள் நிறைவேற்றுவது அவசியமாகும். அத்துடன் ழுஹர் தொழுகையைக் கழாச் செய்வது அவளுக்கு விரும்பத்தக்கதாகும். நள்ளிரவுக்கு முன் அவள் தூய்மையாகிவிட்டால் இஷாவை அவள் தொழுதுவிட வேண்டும். அத்துடன் ம.்.ரிபைக் கழாச் செய்வது விரும்பத்தக்கது.

## أحكام الصلاة
## தொழுகையின் சட்டங்கள்

தொழுகை இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில் இரண்டாவது கடமை யாகும். இது பருவமடைந்த புத்தி சீர்நிலையிலுள்ள முஸ்லிமான ஆண், பெண் அனைவர் மீதும் கடமையாகும். அறிஞர்களின் ஏகோபித்த முடிவின்படி தொழுகை கடமை என்பதை மறுப்பவன் காபிராவான். அலட்சியமாகவும் சோம்பலின் காரணமாகவும் தொழுகையை முற்றிலும் விட்டுவிடுபவன் காபிர் ஆவான் என பெரும்பாலான நபித்தோழர்கள் கருதுகின்றனர். மறுமை நாளில் அடியானிடம் கேட்கப்படும் முதல் கேள்வி தொழுகை பற்றித்தான். அல்லாஹ் கூறுகிறான்: ﴿ إِنَّ الصَّلَاةَ كَانَتْ عَلَى الْمُؤْمِنِينَ كِتَابًا مَوْقُوتًا ﴾ [النساء:١٠٣]

“நிச்சயமாகத் தொழுகை நம்பிக்கை கொண்டோர் மீது நேரம் குறிக்கப்பட்ட கடமையாக உள்ளது.”(4:103)

عَنْ ابْنِ عُمَرَ ﷺ عَنْهُمَا قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ بُنِيَ الْإِسْلَامُ عَلَى خَمْسٍ شَهَادَةِ أَنْ لَا إِلَهَ إِلَّا اللهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللهِ وَإِقَامِ الصَّلَاةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالْحَجِّ وَصَوْمِ رَمَضَانَ (خ/ ٨ ، م/ ١٦)

وعن جَابِرٍ ﷺ قال سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَقُولُ إِنَّ بَيْنَ الرَّجُلِ وَبَيْنَ الشِّرْكِ وَالْكُفْرِ تَرْكَ الصَّلَاةِ (م/ ٨٢)

நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: “இஸ்லாம் ஐந்து அடிப்படைக் கடமைகள் மீது நிறுவப்பட்டுள்ளது. அவை வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்

வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் உறுதியாக நம்புவது, தொழுகையை நிலை நாட்டுவது, ஜகாத் கொடுப்பது, ஹஜ் செய்வது ரமழானில் நோன்பு நோற்பது ஆகியவையாகும். அறிவிப்பவர் இப்னு உமர்(ரலி) நூல்: புகாரி (8), முஸ்லிம்(16)

“ஒரு மனிதன் இணைவைப்பிலும் இறைநிராகரிப்பிலும் இருக்கிறான் என்பதன் அடையாளம் தொழுகையை விடுவதாகும்” எனவும் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்வர்: ஜாபிர் (ரலி), நூல்: முஸ்லிம்(82)

மட்டுமின்றி தொழுகையை நிறைவேற்றுவதற்கு மகத்தான சிறப்புகளும் உள்ளன. இதோ அவற்றில் சில:

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ تَطَهَّرَ فِي بَيْتِهِ ثُمَّ مَشَى إِلَى بَيْتٍ مِنْ بُيُوتِ اللهِ لِيَقْضِيَ فَرِيضَةً مِنْ فَرَائِضِ اللهِ كَانَتْ خَطْوَتَاهُ إِحْدَاهُمَا تَحُطُّ خَطِيئَةً وَالْأُخْرَى تَرْفَعُ دَرَجَةً (م/ ٦٦٦)

யார் தனது வீட்டில் உளுச் செய்து விட்டு பிறகு அல்லாஹ்வின் கடமைகளில் ஒரு கடமையை நிறைவேற்றுவதற்காக அல்லாஹ்வின் இல்லங்களில் ஏதேனும் ஒன்றை நோக்கி நடக்கிறாரோ அவர் எடுத்து வைக்கும் இரு எட்டுக்களில் ஒன்று ஒரு தீமையை அழிக்கின்றது, மற்றொன்று ஓர் அந்தஸ்தை உயர்த்துகின்றது என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), முஸ்லிம்(666)

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ أَلَا أَدُلُّكُمْ عَلَى مَا يَمْحُو اللهُ بِهِ الْخَطَايَا وَيَرْفَعُ بِهِ الدَّرَجَاتِ قَالُوا بَلَى يَا رَسُولَ اللهِ قَالَ إِسْبَاغُ الْوُضُوءِ عَلَى الْمَكَارِهِ وَكَثْرَةُ الْخُطَا إِلَى الْمَسَاجِدِ وَانْتِظَارُ الصَّلَاةِ بَعْدَ الصَّلَاةِ فَذَلِكُمْ الرِّبَاطُ (م/ ٢٥١)

“எந்தக் காரியங்கள் மூலம் அல்லாஹ் பாவங்களை அழித்து பதவிகளை உயர்த்துவானோ அவற்றை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?” என நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்குத் தோழர்கள் ‘அல்லாஹ்வின் தூதரே! அறிவியுங்கள்’ என்றனர். உடனே நபி(ஸல்)அவர்கள், “சிரமமான நேரங்களிலும் உளுவைப் பூரணமாகச் செய்வது, பள்ளிவாசல்களுக்கு அதிகம் நடந்து செல்வது, ஒரு தொழுகைக்குப் பிறகு மறு தொழுகையை எதிர்பார்ப்பது. இதுதான் எல்லையைப் பாதுகாப்பது, இது தான் எல்லையைப் பாதுகாப்பது” என்று கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம்(251)

عَنْ أَبِي هُرَيْرَةَ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ مَنْ غَدَا إِلَى الْمَسْجِدِ وَرَاحَ أَعَدَّ اللهُ لَهُ نُزُلَهُ مِنْ الْجَنَّةِ كُلَّمَا غَدَا أَوْ رَاحَ

(خ/ ٦٦٢، م/ ٦٦٩)

பள்ளிவாசலுக்கு ஒருவர் காலையிலோ மாலையிலோ சென்றால், அப்படி அவர் காலையிலும் மாலையிலும் செல்லும்போதெல்லாம் சொர்க்கத்தில் ஓர்

உபசரிப்பை அல்லாஹ் அவருக்காக தயார் செய்கிறான் என நபி(ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: புகாரி(662), முஸ்லிம்(669)

**தொழுகை சம்பந்தமான சில முக்கியமான விஷயங்கள்:**

1. பள்ளிவாசலில் ஜமாஅத்துடன் தொழுகையை நிறைவேற்றுவது ஆண்கள் மீது கடமையாகும். ஏனெனில்

عَنْ أَبِي هُرَيْرَةَ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ لَقَدْ هَمَمْتُ أَنْ آمُرَ بِالصَّلَاةِ فَتُقَامَ ثُمَّ أُخَالِفَ إِلَى مَنَازِلِ قَوْمٍ لَا يَشْهَدُونَ الصَّلَاةَ فَأُحَرِّقَ عَلَيْهِمْ (خ/ ٢٤٢٠، م/ ٦٥١)

“தொழுகை நிலைநாட்டப்பட நான் கட்டளையிட்டுப் பின்னர் நம்முடன் ஜமாஅத்தில் கலந்துகொள்ளாத மக்களின் வீடுகளுக்குச் சென்று அவர்களைத் தீயிட்டுக் கொளுத்த நான் நினைத்தேன்” என நபி (ஸல்) அவர்கள் கூறியுள் ளார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), புகாரி(2420), முஸ்லிம்(651)

2. பள்ளிவாசலுக்குச் சீக்கிரமாகவும் அமைதியாகவும் அடக்கமாகவும் செல்வது ஒரு முஸ்லிமுக்கு மார்க்கமாக்கப்பட்டுள்ளது.

3. வலது காலை முன் வைத்து பள்ளிவாசலுக்குள் நுழைவதும் அப்போது اللَّهُمَّ افْتَحْ لِي أَبْوَابَ رَحْمَتِكَ “அல்லாஹும்ம.்.ப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக” (முஸ்லிம்-713) என்று ஹதீஸில் வந்துள்ள துஆவை ஓதுவதும் சுன்னத்தாகும்.

3. பள்ளிவாசலில் அமர்வதற்கு முன் பள்ளியின் காணிக்கைத் தொழுகை இரண்டு ரக்அத் தொழுது கொள்வது நபிவழியாகும். ஏனெனில்

عَنْ أَبِي قَتَادَةَ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِذَا دَخَلَ أَحَدُكُمْ الْمَسْجِدَ فَلْيَرْكَعْ رَكْعَتَيْنِ قَبْلَ أَنْ يَجْلِسَ (خ/ ٤٤٤، م/ ٧١٤)

நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்: “உங்களில் ஒருவர் பள்ளிவாசலுக்குள் நுழைந்தால் அங்கு அமர்வதற்கு முன் இரண்டு ரக்அத் தொழுது கொள்ளட்டும்.” அறிவிப்பவர்: அபூகதாதா(ரலி), (புகாரி-444, முஸ்லிம்-714)

5. தொழுகையில் மறைக்க வேண்டிய பகுதியை மறைப்பது அவசியம். அது ஆண்கள் மறைக்க வேண்டிய பகுதி தொப்புளிலிருந்து முட்டுக்கால் வரை யாகும். பெண்களுக்கு உடல் முழுவதும் மறைக்க வேண்டிய பகுதியாகும். ஆனால் தொழும்போது பெண்கள் முகத்தை மறைக்கக் கூடாது.

6. கிப்லாவை முன்னோக்குவது அவசியமாகும். இது தொழுகை ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு நிபந்தனை ஆகும். ஆனால் கிப்லாவை முன்னோக்க முடியாத அளவுக்கு நோய் அல்லது அதுபோன்ற ஏதேனும் தடை இருந்தாலே தவிர.

7. தொழுகையை அதற்குரிய நேரத்தில் தொழுவது கடமையாகும். நேரம் வருவதற்கு முன்னால் தொழுவது கூடாது. நேரத்தை விட்டும் தொழுகையைப் பிற்படுத்து வதும் தடுக்கப்பட்டதாகும்.

8. தொழுகைக்காக சீக்கிரம் (பள்ளிக்குச்) செல்ல வேண்டும். முதல் வரிசையில் நிற்பதற்கும் (ஃபர்மு) தொழுகையை எதிர்பார்த்து இருப்பதற்கும் அக்கரை காட்ட வேண்டும். ஏனெனில் இவற்றுக்கு மிகப் பெரும் சிறப்புகள் இருக்கின்றன.

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ لَوْ يَعْلَمُ النَّاسُ مَا فِي النِّدَاءِ وَالصَّفِّ الْأَوَّلِ ثُمَّ لَمْ يَجِدُوا إِلَّا أَنْ يَسْتَهِمُوا عَلَيْهِ لَاسْتَهَمُوا وَلَوْ يَعْلَمُونَ مَا فِي التَّهْجِيرِ لَاسْتَبَقُوا إِلَيْهِ ... (خ/ ٦١٥، م/ ٤٣٧)

“பாங்கிலும் முதல் வரிசையிலும் உள்ள நன்மைகளை மக்கள் அறிவார் களானால் பிறகு (அதில் யாருக்கு முன்னுரிமை கொடுப்பது எனும் நிலையில்) சீட்டுக் குலுக்கி எடுத்தே தீர்வு காண முடியும் என்று அவர்கள் கருதினால் சீட்டுக்குலுக்கலில் ஈடுபடுவார்கள். தொழுகையை ஆரம்ப நேரத்தில் நிறை வேற்றுவதில் உள்ள நன்மையை அறிவார்களானால் அதற்காக முந்திச்செல்வர்” என்று நபி (ஸல்) கூறியுள்ளார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: புகாரி-615, முஸ்லிம்-437) அபூஹுரைரா (ரலி) அவர்கள் மேலும் அறிவிப்பதாவது:

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللهِ ﷺ ... لَا يَزَالُ أَحَدُكُمْ فِي صَلَاةٍ مَا دَامَتْ الصَّلَاةُ تَحْبِسُهُ ... (خ/ ٦٥٩، م/ ٦٤٩)

“உங்களில் ஒருவரைத் தொழுகை தடுத்துவைத் திருக்கும் வரை அவர் தொழுகையிலேயே இருக்கிறார்”... என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நூல்: புகாரி(659), முஸ்லிம்(649)

**தொழுகையின் நேரங்கள்**

➢ லுஹர் தொழுகையின் நேரம் சூரியன் உச்சியிலிருந்து சாயத் துவங்கியது முதல் ஒரு பொருளின் நிழல் அதன் உயரத்தின் அளவுக்கு வரும் வரை.

➢ அஸர் தெழுகையின் நேரம் ஒரு பொருளின் நிழல் அப்பொருளின் உயரத்தினளவை அடைந்தவுடன் ஆரம்பமாகி சூரியன் மறையும் வரை நீடிக்கின்றது.

➢ மஃரிப் தெழுகையின் நேரம் சூரியன் மறைந்ததிலிருந்து செம்மேகம் மறையும் வரை. செம்மேகம் என்பது சூரியன் மறைந்த பிறகு தோன்றக்கூடியது.

➢ இஷா தெழுகையின் நேரம் செம்மேகம் மறைந்ததிலிருந்து இரவின் பகுதி வரை.

➢ ∴பஜ்ர் தொழுகையின் நேரம் அதிகாலை உதய மானதிலிருந்து சூரியன் உதயமாகும் வரை.

**தொழக்கூடாத இடங்கள்:**

1. அடக்கஸ்தலங்கள்.

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ الْأَرْضُ كُلُّهَا مَسْجِدٌ إِلَّا الْمَقْبَرَةَ وَالْحَمَّامَ (ت/ ٣١٧، د/ ٤٩٢، جه/ ٧٤٥)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: “குளியலறை மற்றும் அடக்கஸ்தலங்கள் தவிர பூமி முழுவதும் தொழுமிடம் ஆகும்.” (திர்மதி-317, அபூதாவூத்-492, இப்னுமாஜா-745) ஆயினும் அடக்கஸ்தலத்தில் ஜனாஸா தொழுகையைத் தொழுவது கூடும்.

2. கப்ரை நோக்கித் தொழுவது கூடாது.

عَنْ أَبِي مَرْثَدٍ الْغَنَوِيِّ ﷺ قَالَ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ لَا تُصَلُّوا إِلَى الْقُبُورِ وَلَا تَجْلِسُوا عَلَيْهَا (م/ ٩٧٣)

“கப்ருகளை நோக்கித் தொழாதீர்கள்; அவற்றின் மீது உட்காராதீர்கள்!” என நபி(ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அபூமர்ஸத்(ரலி), நூல்: முஸலிம்(973)

3. ஒட்டகம் தங்குமிடங்களிலும் அசுத்தங்கள் உள்ள இடங்களிலும் தொழுவது கூடாது

**தொழும் முறை**

தொழும்போது நிய்யத் அவசியமாகும். நிய்யத் என்பது நாவால் மொழி யாமல் மனதால் எண்ணிக் கொள்வதாகும். வணக்க வழிபாடுகள் அனைத்திலும் நிய்யத் அவசியமாகும்.

1. அங்கும் இங்கும் திரும்பாமல் சரிவில்லாமல் கிப்லாவை முன்னோக்க வேண்டும்.

2. பிறகு அல்லாஹு அக்பர் என்று தக்பீரதுல் இஹ்ராம் என்ற முதல் தக்பீரைக் கூறிக்கொள்ள வேண்டும். தக்பீர் கூறும்போது இரு கைகளையும் தோள் புஜங்களுக்கு நேராகவோ காதுகளுக்கு நேராகவோ உயர்த்திக் கொள்ள வேண்டும்.

3. பிறகு வலது முன்கையை இடது முன்கையின் மீது வைத்து அதை நெஞ்சின் மீது வைக்க வேண்டும்.

4. பிறகு “சுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக வதபா ரகஸ்முக வதஆலா ஜத்துக வலா இலாஹ கைருக” (முஸ்லிம்-600) என்றோ “அல்ஹம்து

லில்லாஹி ஹம்தன் கஸீரன் தய்யிபன் முபாரகன் ஃபீஹ்" (அபூதாவூத்-775,776 திர்மிதி-242) என்றோ ஆரம்ப துஆவை ஓத வேண்டும்.

((سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ وَتَعَالَى جَدُّكَ وَلاَ إِلَهَ غَيْرُكَ)) ((اَلْحَمْدُ للهِ حَمْداً كَثِيْرًا طَيِّبًا مُبَارَكًا فِيْهِ))

(பொருள்: இறைவா! உன்னைப் புகழ்வதுடன் துதிக்கவும் செய்கிறேன். உன் திருப்பெயர் அருட்பேருடையது. உனது ஆற்றல் மிகவும் உயர்ந்தது. உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை. மற்றொரு துஆவின் பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அருட்பேரும் அழகும் மிக்க அதிகமான புகழ் அல்லாஹ்வுக்கே!)

5. பிறகு أَعُوْذُ بِاللهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْم "அவூதுபில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்" என்று கூற வேண்டும். (பொருள்: விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன்.)

6. பிறகு பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்று கூறி அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன், அர்ரஹ்மானிர் ரஹீம், மாலிகி யவ்மித்தீன், இய்யாக்க நஃபுது வஇய்யாக்க நஸ்தயீன், இஹ்தினஸ் ஸிராத்தல் முஜ்தகீம், ஸிராத்தல்லதீன அன்அம்த அலைஹிம் கைரில் மஃக்ழூபி அலைஹிம் வளல்லால்லீன், ஆமீன் என்று ஸூரத்துல் பாத்திஹாவை ஓத வேண்டும்.

بِسْمِ اللهِ الرَّحْمنِ الرَّحِيْمِ ، اَلْحَمْدُ للهِ رَبِّ الْعَالَمِيْنَ ، الرَّحْمنِ الرَّحِيمِ ، مَلِكِ يَوْمِ الدِّينِ ، إِيَّاكَ نَعْبُدُ وإِيَّاكَ نَسْتَعِينُ ، اهدِنَا الصِّرَاطَ المُستَقِيمَ ، صِرَاطَ الَّذِينَ أَنعَمتَ عَلَيهِمْ غَيرِ المَغضُوبِ عَلَيهِمْ وَلاَ الضَّالِّينَ ، آمين

7. பிறகு திருக்குர்ஆனில் தனக்குத் தெரிந்ததை ஓத வேண்டும்.

8. பிறகு அல்லாஹு அக்பர் என்று தக்பீர் கூறி ருகூஃ செய்ய வேண்டும். தக்பீர் கூறும்போது இரு கைகளையும் தோள் புஜங்களுக்கு நேராக உயர்த்திக் கொள்ள வேண்டும். ருகூவில் இரண்டு கைகளையும் முட்டுக் கால்களில் மீது கை விரல்களை விரித்து வைக்க வேண்டும். ருகூவில் سُبْحَانَ رَبِّيَ الْعَظِيْمِ "சுப்ஹான ரப்பியல் அழீம்" என்று கூறு வேண்டும். இதை மூன்று தடவை கூறுவது சுன்னத்தாகும். அதற்கு மேல் அதிகப்படுத்தவும் செய்யலாம். ஒரு தடவை கூறினாலே போதுமானது. (பொருள்: மகத்தான என் இறைவன் பரிசுத்தமானவன்)

9. பிறகு سَمِعَ اللهُ لِمَنْ حَمِدَهُ "ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா" என்று கூறி ருகூவிலிருந்து எழ வேண்டும். (பொருள்: புகழ்பவரின் புகழ்வார்த்தைகளை இறைவன் கேட்டுக்கொண்டான்.) எழும்போது இரண்டு கைகளையும் தோள் புஜங்கள் வரை உயர்த்திக்கொள்ள வேண்டும். தனியாகவோ இமாமாகவோ

நின்று தொழுபவர் இவ்வாறு கூற வேண்டும். இமாமைப் பின்பற்றித் தொழுபவர் "ஸமிஅல்லாஹுﷻ லிமன் ஹமிதா" என்பதற்குப் பதிலாக رَبَّنَا وَلَكَ الْحَمْدُ "ரப்பனா வலகல் ஹம்த்" என்று கூற வேண்டும். (பொருள்: எங்கள் இறைவனே! உனக்கே எல்லா புகழும்.) பிறகு வலது முன்கையை இடது முன்கையின் மீது வைத்து அதை நெஞ்சின் மீது வைக்க வேண்டும்.

10. நிலையில் "அல்லாஹும்ம ரப்பனா லகல ஹம்து மில்அஸ் ஸமாவாத்தி வமில்அல் அர்ழி வமில்அ மாஷி.்.த மின் ஷையின் ப.்.து" என்று கூற வேண்டும். (முஸ்லிம்-476) اللَّهُمَّ رَبَّنَا لَكَ الْحَمْدُ مِلْءَ السَّمَاوَاتِ وَمِلْءَ الأَرْضِ وَمِلْءَ مَا شِئْتَ مِنْ شَيْءٍ بَعْدُ

(பொருள்: இறைவா! எங்கள் இரட்சகனே! வானங்கள் நிறைய, பூமி நிறைய, இவையன்றி நீ எதை நாடுகின்றாயோ அவை நிறைய உனக்கே புகழனைத்தும்.)

11. பிறகு அல்லாஹுﷻ அக்பர் என்று கூறி முதல் ஸஜ்தா செய்ய வேண்டும். ஸஜ்தாவில் இரு பாதங்கள், இரு முட்டுக்கால்கள், நெற்றியுடன் மூக்கு ஆகிய ஏழு உறுப்புகள் தரையில் படுமாறு ஸஜ்தா செய்ய வேண்டும். இரு கைகளையும் விலாப்புறங்களை விட்டும் அகற்றி வைக்க வேண்டும். கால் விரல்களை கிப்லாவை முன்னோக்கி வைக்க வேண்டும். ஸஜ்தாவில் "சுப்ஹான ரப்பியல் அ.்.லா" سُبْحَانَ رَبِّيَ الأَعْلَى என்று கூறவேண்டும். இதை மூன்று முறை கூறுவது சுன்னத்தாகும். அதற்கு மேல் அதிகப்படுத்தவும் செய்யலாம். ஒரு தடவை கூறினாலே போதுமானது. (பொருள்: உயர்வான என் இறைவன் தூயவன்.) ஸஜ்தாவில் அதிகம் துஆச் செய்வது விரும்பத்தக்கதாகும். ஏனெனில் துஆ ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு ஏற்ற இடங்களில் இது ஒன்றாகும்.

12. பிறகு அல்லாஹுﷻ அக்பர் என்று கூறி ஸஜ்தாவி லிருந்து தலையை உயர்த்த வேண்டும். இடது பாதத்தின் மீது அமர்ந்து வலது பாதத்தை நட்டு வைத்துக் கொள்ள வேண்டும். இடது கையை இடது முட்டுக்காலுக்கு அடுத்துள்ள இடது தொடையின் ஓரத்தில் வைக்க வேண்டும். வலது கையை வலது முட்டுக்காலுக்கு அடுத்துள்ள வலது தொடையின் ஓரத்தில் வைக்க வேண்டும். கை விரல்களை விரிக்காமல் நீட்டி வைத்துக் கொள்ள வேண்டும். இந்த இருப்பில் "ரப்பி.்.க்பிர்லீ ரப்பி.்.க்பிர்லீ" என்று கூற வேண்டும். رَبِّ اغْفِرْلِيْ رَبِّ اغْفِرْلِيْ (பொருள்: என் இரட்சகனே! என்னை மன்னிப்பாயாக! என் இரட்சகனே! என்னை மன்னிப்பாயாக!)

13. பிறகு இரண்டாம் ஸஜ்தா செய்ய வேண்டும். முதல் ஸஜ்தாவில் செய்தது போல் இதிலும் செய்ய வேண்டும்.

14. பிறகு இரண்டாம் ஸஜ்தாவிலிருந்து அல்லாஹுﷻ அக்பர் என்று கூறி எழுந்து நிலைக்கு வர வேண்டும்.

15. முதல் ரக்அத்தைப் போலவே இரண்டாம் ரக்அத்தையும் தொழ வேண்டும். ஆனால் இதில் "சுப்ஹானகல்லாஹு"ம்ம வபிஹம்திக வதபாரகஸ்முக வதஆலா ஜத்துக வலாஇலாஹ கைருக" என்ற ஆரம்ப துஆவை ஓதக் கூடாது. இரண்டாம் ஸஜ்தாவை முடித்த பிறகு அல்லாஹு" அக்பர் என்று கூறி இரண்டு ஸஜ்தாக் களுக்கு இடையில் அமர்வது போலவே அமர வேண்டும். இந்த இருப்பில் அத்தஹிய்யாத்தை ஓத வேண்டும். "அஷ்ஹது அல்லா இலாஹ இல்லல்லாஹு" வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு" வரஸு"லுஹு" என்று கூறும் போது ஆட்காட்டி விரலை அசைக்க வேண்டும்.

**அத்தஹிய்யாத் வருமாறு:**

اَلتَّحِيَّاتُ لله وَالصَّلَوَاتُ وَالطَّيِّبَاتُ اَلسَّلاَمُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ الله وَبَرَكَاتُهُ اَلسَّلاَمُ عَلَيْنَا وَعَلَى عِبَادِ الله الصَّالِحِيْنَ أَشْهَدُ أَنْ لاَإِلَهَ إِلاَّ اللهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ وَرَسُوْلُهُ

"அத்தஹிய்யாத்து லில்லாஹி வஸ்ஸலவாத்து வத்தய்யிபாத்து அஸ்ஸலாமு அலைக அய்யுஹன் நபிய்யு வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு" அஸ்ஸலாமு அலைனா வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன். அஷ்ஹது அல்லா இலாஹ இல்லல்லாஹு" வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு" வரஸு"லுஹு" (புகாரி-831) இது அல்லாமல் ஒரு சில மாற்றத்துடன் வேறு அத்தஹிய்யாத்தும் ஹதீஸ்களில் வந்துள்ளன.

பிறகு ம.்.ரிபைப்போன்று மூன்று ரக்அத் தொழுகையாகவோ அல்லது ழுஹர், அஸர், இஷா போன்று நான்கு ரக்அத் தொழுகையாகவோ இருந்தால் "அல்லாஹு" அக்பர்" என்று கூறி எழுந்து நிலைக்கு வர வேண்டும். அப்போது இரு கைகளையும் தோள் புஜங்களுக்கு நேராக உயர்த்திக் கொள்ள வேண்டும். பிறகு எஞ்சியிருக்கும் ரக்அத்தை இரண்டாம் ரக்அத்தைப் போலவே தொழ வேண்டும். ஆனாலும் நிலையில் ஸு"ரத்துல் பாத்திஹாவை மட்டும் ஓதிக் கொள்ள வேண்டும்.

16. கடைசி ரக்அத்தில் இரண்டாம் ஸஜ்தாவுக்குப் பிறகு அத்தஹிய்யாத் துக்காக அமர வேண்டும். ழுஹர், அஸர், ம.்.ரிப், இஷா ஆகிய தொழுகைகளில் கடைசியாக அமரும் இந்த அமர்வில் மண்டியிட்டு இருப்பிடம் தரையில் படுமாறு அமர்ந்து இடது காலை வலது காலுக்குக் கீழ் வெளிப்படுத்தி, வலது காலை நாட்டி வைக்க வேண்டும். இரண்டு கைகளையும் முதல் அத்தஹிய்யாத் அமர்வில் வைத்ததுபோல் வைக்க வேண்டும். இவ்வாறு அமர்ந்து அத்தஹிய் யாத்தையும் ஸலவாத்தையும் ஓத வேண்டும். அது வருமாறு:

"அத்தஹிய்யாத்து லில்லாஹி வஸ்ஸலவாத்து வத்தய்யிபாத்து அஸ்ஸலாமு அலைக அய்யுஹன் நபிய்யு வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு அஸ்ஸலாமு அலைனா வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன். அஷ்ஹது அல்லா இலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸுலுஹு"

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலிமுஹம்மதின் கமா ஸல்லைத அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக ஹமீதும் மஜீத். ஆல்லாஹும் பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலிமுஹம்மதின் கமா பாரக்த அலாஇப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக ஹமீதும் மஜீத்.

اَلتَّحِيَّاتُ للهِ وَالصَّلَوَاتُ وَالطَّيِّبَاتُ اَلسَّلاَمُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ اَلسَّلاَمُ عَلَيْنَا وَعَلَى عِبَادِ اللهِ الصَّالِحِيْنَ أَشْهَدُ أَنْ لاَإِلَهَ إِلاَّ اللهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ وَرَسُوْلُهُ اَللَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلَى إِبْرَاهِيْمَ وَعَلَى آلِ إِبْرَاهِيْمَ إِنَّك حَمِيْدٌ مَجِيْدٌ اَللَّهُمَّ بَارِكْ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلَى إِبْرَاهِيْمَ وَعَلَى آلِ إِبْرَاهِيْمَ إِنَّك حَمِيْدٌ مَجِيْدٌ

இதன் பிறகு ஹதீஸில் வந்துள்ளபடி "அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக மின் அதாபில் கப்ரி, வமின் அதாபின் நாரி, வமின் ஃபித்னதில் மஹ்யா வல்மமாத்தி வமின் ஃபித்னதில் மஸீஹித் தஜ்ஜால்" எனும் துஆவை ஓதி, தான் விரும்பியதைப் பிரார்த்திக்க வேண்டும். இங்கு அதிகம் துஆ செய்வது சுன்னத்தாகும்.

اَللَّهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ وَمِنْ عَذَابِ النَّارِ وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ وَمِنْ فِتْنَةِ الْمَسِيْحِ الدَّجَّالِ

(பொருள்: காணிக்கைகள், வணக்கங்கள் மற்றும் நற்பணிகள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியனவாகும். நபியே! அமைதியும் அல்லாஹ்வின் கருணையும் அருட்பேருகளும் உங்கள் மீது உண்டாகட்டும். எங்கள் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீதும் அமைதி உண்டாகட்டும். வணக்கத்திற் குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மது நபி அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் நான் சாட்சியம் கூறுகிறேன்.

இறைவா! முஹம்மது நபி(ஸல்)அவர்கள் மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் கருணை பொழிவாயாக! இப்ராஹீம் நபி மீதும் அவர்களின் வழிவந்த வர்கள் மீதும் நீ கருணை பொழிந்தது போன்று. நிச்சயமாக நீ புகழுக்கும் மகத்துவத்திற்கும் உரியவன். இறைவா! முஹம்மது நபி(ஸல்)அவர்கள் மீதும் அவர் களின் வழிவந்தவர்கள் மீதும் அருட்பேருகள் பொழிவாயாக! இப்ராஹீம் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் நீ அருட்பேருகள் பொழிந்தது

போன்று. நிச்சயமாக நீ புகழுக்கும் மகத்துவத்திற்கும் உரியவன். இறைவா! மண்ணறையின் வேதனையிலிருந்தும் நரகின் வேதனையிலிருந்தும் வாழ்க்கை மற்றும் மரணத்தின் குழப்பத்திலிருந்தும் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்தும் நான் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன்.)

17. பிறகு (முகத்தை) வலது புறம் (திருப்பி) “அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹ்” என்று கூற வேண்டும். பிறகு (முகத்தை) இடது புறம் (திருப்பி) அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹ் என்று கூற வேண்டும்.

**தொழுகைக்குப் பிறகு ஓதவேண்டிய திக்ருகள்**

➢ அஸ்த.்.க்பிருல்லாஹ், அஸ்த.்.க்பிருல்லாஹ், அஸ்த.்.க் பிருல்லாஹ் அல்லாஹும்ம அன்தஸ்ஸலாம் வமின்கஸ்ஸலாம் தபாரக்த யாதல் ஜலாலி வல்இக்ராம். (முஸ்லிம்-591)

أَسْتَغْفِرُ اللهَ أَسْتَغْفِرُ اللهَ أَسْتَغْفِرُ اللهَ ، اَللَّهُمَّ أَنْتَ السَّلاَمُ وَمِنْكَ السَّلاَمُ تَبَارَكْتَ يَاذَا الْجَلاَلِ وَالْإِكْرَامِ

(பொருள்: அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடுகிறேன். இறைவா! நீ எல்லாக் குறைகளை விட்டும் பாதுகாப்பு பெற்றவன். உன்னிடமிருந்தே பாதுகாப்பு ஏற்படு கின்றது. மதிப்பும் மகத்துவமும் மிக்கவனே! நீ உயர்ந்து விட்டாய்!)

➢ லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். அல்லாஹும்ம லாமானிஅ லிமா அ.்.தைத்த வலா மு.்.திய லிமா மன.்.த வலா யன்.்.பஉ தல்ஜத்தி மின்கல் ஜத். (புகாரி-844, முஸ்லிம்-593)

لاَإِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَشَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

اَللَّهُمَّ لاَ مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلاَ مُعْطِيَ لِمَا مَنَعْتَ وَلاَ يَنْفَعُ ذَاالْجَدِّ مِنْكَ الْجَد

(பொருள்: வணக்கத்திற்குரியவன அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை. ஆட்சி அவனுக்கே உரியது! புகழும் அவனுக்கே! அவன் அனைத்துப் பொருட்களின் மீதும் ஆற்றலு டையவன். இறைவா! நீ கொடுப்பதைத் தடுப்பவர் எவருமில்லை. நீ தடுப்பதைக் கொடுப்பவர் எவருமில்லை. மதிப்புடைய எவரும் எந்தப் பயனும் அளிக்க மாட்டார். மதிப்பு உன்னிடமே உள்ளது.)

➢ லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீ கலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலாகுல்லி ஷையின் கதீர். லாஹவ்ல வலாகுவ்வத இல்லா பில்லாஹ். லாயிலாஹ இல்லல்லாஹு வலா ந.்.புது இல்லா இய்யாஹு

லஹுன் நி.ஃமது வலஹுல் .ஃபழ்லு வலஹுஸ் ஸனாவுல் ஹஸனு லாயிலாஹ இல்லல்லாஹு முக்லிஸீன லஹுத்தீன வலவ் கரிஹல் கா.ஃபிரூன். (முஸ்-594)

لاَإِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَشَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللهِ لاَإِلَهَ إِلاَّ اللهُ وَلاَ نَعْبُدُ إِلاَّ إِيَّاهُ لَهُ النِّعْمَةُ وَلَهُ الْفَضْلُ وَلَهُ الثَّنَاءُ الْحَسَنُ لاَإِلَهَ إِلاَّ اللهُ مُخْلِصِيْنَ لَهُ الدِّيْنَ وَلَوْ كَرِهَ الْكَافِرُوْنَ

(பொருள்: வணக்கத்திற்குரியவன அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்குஇணை யாருமில்லை. ஆட்சி அவனுக்கே உரியது! புகழும் அவனுக்கே! அவன் அனைத்துப் பொருட்களின் மீதும் ஆற்றலுடையவன். அல்லாஹ்வின் துணையின்றி நல்லவற்றைச் செய்யவோ தீயவற்றிலிருந்து விலகவோ இயலாது. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவனைத் தவிர வேறு எவரையும் நாங்கள் வணங்கமாட்டோம். அருட்கொடை அவனுக்குரியது. பேருபகாரமும் அவனுக்குரியது. அழகிய புகழும் அவனுக்குரியது. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எரும் இல்லை. நிராகரிப்போர் விரும்பாவிட்டாலும் வணக்கங்களை அவனுக்கு மட்டுமே கலப்பற்ற முறையில் செய்வோம்.)

- பிறகு சுப்ஹானல்லாஹ் 33 தடவை, அல்ஹம்து லில்லாஹ் 33 தடவை, அல்லாஹு அக்பர் 33 தடவை. பிறகு நூறாகப் பூர்த்தி செய்ய "லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக் கலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலாகுல்லி ஷையின் கதீர்" என ஒரு தடவை கூற வேண்டும்.
- ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் ஆயதுல் குர்ஸி, குல்ஹுவல்லாஹு அஹத், குல் அவூது பிரப்பில் .ஃபலக், குல்அவூது பிரப்பின் நாஸ் ஓத வேண்டும். இந்த மூன்று ஸூராக்களையும் ம.ஃரிபுக்குப் பிறகும் பஜ்ருக்குப் பிறகும் மூன்று தடவை ஓதுவது விரும்பத்தக்கதாகும்.

**ஜமாஅத் தொழுகையில் தாமதமாக வந்து சேர்ந்தவர்**

ஒருவர் இமாமுடன் சேர்ந்து தொழும்போது ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட ரக்அத் தவிறிவிட்டால் தவறிய ரக்அத்தை இமாம் இரண்டாம் ஸலாம் கொடுத்த பிறகு பூர்த்தி செய்ய வேண்டும். எந்த ரக்அத்தில் அவர் இமாமுடன் சேருகிறாரோ அதுவே அவருக்கு முதல் ரக்அத்தாகும். இமாமுடன் அவர் ருகூவை அடைந்துவிட்டால் அந்த ரக்அத்தை அடைந்து கொள்வார். ஒருவருக்கு இமாமுடன் ருகூ.ஃ கிடைக்கவில்லையெனில் அவருக்கு அந்த ரக்அத் முழுமை யாகத் தவறியதாக ஆகிறது.

தாமதாக வருபவர் பள்ளிக்குள் நுழைந்ததும் உடனே ஜமாஅத்தில் சேர்ந்து விட வேண்டும். அவர்கள் நிலையிலோ ருகூவிலோ ஸுஜுதிலோ அல்லது வேறு

எந்த நிலையில் இருந்தாலும் சரியே. அடுத்தரக்அத்துக்கு அவர்கள் எழுந்து வருவதை எதிர்பார்க்கக் கூடாது. தக்பீரதுல் இஹ்ராம் என்ற முதல் தக்பீரை நின்று கொண்டே நிறை வேற்ற வேண்டும். நோயாளியைப் போன்று தக்க காரணமுள்ளவரைத் தவிர.

**தொழுகையை வீணாக்கக் கூடியவை**

1. வேண்டுமென்றே பேசுவது, அது சிறிதளவாயினும் சரியே!
2. கிப்லாவை விட்டும் முழு உடலுடன் திரும்புவது.
3. உளூவை முறிக்கக்கூடிய காரியங்கள் நிகழ்வது.
4. தேவையில்லாமல் அதிகமான அசைவுகள் தொடர்ந்து நடைபெறுவது.
5. சிரிப்பது, அது சிறிதளவாயினும் சரியே!
6. ருகூ., ஸுஜூத், நிலை, அமர்வு ஆகியவற்றை வேண்டுமென்றே அதிகப் படுத்துவது.
7. வேண்டுமென்றே இமாமை முந்துவது.

**தொழுகையின் வாஜிபுகள்** (இரண்டாம் நிலைக் கடமைகள்)

1. தக்பீரதுல் இஹ்ராம் என்ற முதல் தக்பீரைத் தவிர ஏனைய தக்பீர்கள்
2. ருகூவில் “சுப்ஹான ரப்பியல் அழீம்” என்று ஒரு முறை கூறுவது.
3. இமாமாகவோ தனியாகவோ நின்று தொழும்போது ருகூவிலிருந்து எழும் போது “ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா” என்று கூறுவது.
4. ருகூவிலிருந்து எழுந்த பிறகு “ரப்பனா லகல் ஹம்த்” என்று கூறுவது.
5. ஸுஜூதில் “சுப்ஹான ரப்பியல்” அ.லா என்று கூறுவது.
6. இரண்டு ஸஜ்தாக்களுக்கிடையில் “ரப்பி.க் .பிர்லீ” என்று கூறுவது.
7. முதல் அத்தஹிய்யாத்துக்காக அமர்வது.
8. அதில் அத்தஹிய்யாத்து ஓதுவது.

**தொழுகையின் ருகுன்கள்** (முதல் நிலைக் கடமைகள்)

1. .பர்ழு தொழுகையில் சக்தி இருக்கும்போது நின்று தொழுவது. ந.பில் தொழுகையில் நின்று தொழுவது அவசியமில்லை. எனினும் .பர்ழு தொகையின் கூலியில் பாதி கிடைக்கும்.
2. “தக்பீரத்துல் இஹ்ராம்” என்ற முதல் தக்பீர்.
3. ஒவ்வொரு ரக்அத்திலும் பாத்திஹா ஓதுவது.
4. ஒவ்வொரு ரக்அத்திலும் ருகூ. செய்வது.
5. ருகூவிலிருந்து எழுந்து நிலையில் நிற்பது.

6. ஒவ்வொரு ரக்அத்திலும் ஏழு உறுப்புக்கள் தரையில் படுமாறு இரண்டு தடவை ஸஜ்தா செய்வது.
7. இரண்டு ஸஜ்தாக்களுக்கிடையில் அமர்வது.
8. மேற்கூறப்பட்ட அனைத்துக் காரியங்களிலும் நிதானத்தைக் கடைபிடிப்பது.
9. கடைசி அத்தஹிய்யாத்துக்காக அமர்வது.
10. அதில் அத்தஹிய்யாத்து ஓதுவது.
11. நபி(ஸல்) அவர்கள் மீது ஸலவாத்து சொல்வது.
12. ஸலாம் கொடுப்பது.
13. இக்கடமைகளை வரிசையாகச் செய்வது.

**தொழுகையில் ஏற்படும் மறதி**

தொழுகையில் ஒருவனுக்கு மறதி ஏற்பட்டால்-எவ்வா றெனில் தொழுகையில் மறதியாக ஒன்றை அதிகப்படுத்திவிட்டான் அல்லது ஒன்றைக் குறைத்துவிட்டான் எனில் அல்லது ரக்அத்தை அதிகப்படுத்தி விட்டதாகவோ அல்லது குறைத்து விட்டதாகவோ அவனுக்கு சந்தேகம் ஏற்பட்டால் மறதிக்காக அவன் ஸஜ்தா செய்ய வேண்டும்.

தொழுகையில் மறதியாக ஒன்றை அவன் அதிகப்படுத்திவிட்டால் உதார ணமாக ருகூ∴,ஸஜ்தா, அமர்வு போன்ற ஒன்றை மறதியாக அவன் அதிகப்படுத்தி விட்டால் ஸலாம் கொடுத்த பிறகு மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும்.

இவ்வாறே அவன் தனது தொழுகையில் மறதியாக ஒன்றை குறைத்துவிட்டால் உதாரணமாக தொழுகையின் நிலைகளில் ஒன்றை அல்லது தொழுகையில் ஓத வேண்டிய திக்ருகளில் ஒன்றை மறதியாக ஒருவன் விட்டு விட்டால் இப்போது அவன் விட்டது தொழுகையின் அதிமுக்கிய கடமையாக (ருகுன்) இருந்து அடுத்த ரக்அத்தில் ஸூரத்துல் ∴பாத்திஹாவை ஓதுவதற்கு முன் அது நினைவுக்கு வந்தால் விடுபட்ட அந்த ருகுனை திரும்பவும் செய்து அதற்குப் பின்னுள்ள செயல்களைச் செய்து தொழுகையை நிறைவு செய்ய வேண்டும். இறுதியில் மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும்.

ஆனால் விடுபட்ட அந்த ருகுன் அடுத்த ரக்அத்தில் ஸூரத்துல் பாத்திஹாவை ஓத ஆரம்பித்த பிறகு நினைவுக்கு வந்தால் ருகுன் விடுபட்ட அந்த ரக்அத் வீணாகிவிடும். அந்த ரக்அத்துக்குப் பகரமாக அடுத்த ரக்அத்தை நிறுத்தி தொழுகையை நிறைவு செய்ய வேண்டும்.

விடுபட்ட ருகுன் தொழுகை முடிந்து ஸலாம் கொடுத்த பிறகே நினைவுக்கு வருகிறது; அதே சமயம் தொழுகை முடிந்து வெகு நேரமும் ஆகிடவில்லை எனில் உடனே ருகுன் விடுபட்ட அந்த ரக்அத்தை முழுமையாகத் தொழுது

இறுதியில் மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும். தொழுகை முடிந்து வெகுநேரமாகிவிட்டால் அல்லது உளூ முறிந்துவிட்டால் அந்தத் தொழுகையை புதிதாக மீண்டும் தொழ வேண்டும்.

முதல் அத்தஹிய்யாத்துக்காக அமர்தல் போன்று தொழுகையின் முக்கியக் கடமைகளில் (வாஜிப்) ஒன்றை மறந்துவிட்டால் ஸலாம் கொடுப்பதற்கு முன் மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும்.

ஆனால் தொழுகையில் சந்தேகம் ஏற்பட்டால் அதில் இரண்டு நிலை உள்ளது. ரக்அத்துகளின் எண்ணிக்கையில் சந்தேகம் ஏற்பட்டால் உதாரணமாக இரண்டு ரக்அத் தொழுதோமா? மூன்று ரக்அத் தொழுதோமா? என்று சந்தேகம் எழுந்தால் குறைந்ததை அதாவது இரண்டுதான் தொழுதுள்ளோம் என்று கணக்கிட்டு- ஏனெனில் அதுதான் அவனிடம் உறுதியானதாக இருக்கும்- ஸலாம் கொடுப் பதற்கு முன் இரண்டு ஸஜ்தா செய்துகொள்ள வேண்டும். தொழுகையின் அதிமுக்கியக் கடமையை (ருகுன்) விட்டதாக சந்தேகம் எழுந்தால் விடுபட்ட அந்த ருகுனை திரும்பவும் செய்து அதற்குப் பின்னுள்ள செயல்களைச் செய்து தொழுகையை நிறைவு செய்ய வேண்டும். இறுதியில் மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும்.

ஆனால் தொழுகையில் இதுவா? அதுவா? என்று சந்தேகம் ஏற்பட்டு இரண்டில் ஒன்றுக்கு கூடுதல் சாத்தியக்கூறு இருந்தால் அதனடிப்படையில் செயல்பட்டு தொழுகையை நிறைவு செய்து இறுதியில் மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும்.

### ராத்திப்- வழமையான சுன்னத்துகள்

ஊரில் இருக்கும்போது 12 ரக்அத்துகள் சுன்னத்தான தொழுகைகளைப் பேணித் தொழுவது முஸ்லிமான ஆண், பெண் ஒவ்வொருவருக்கும் விரும்பத் தக்கதாகும். அவை: லுஹருக்கு முன் நான்கு ரக்அத், லுஹருக்குப் பின் இரண்டு ரக்அத், ம.்.ரிபுக்குப் பின் இரண்டு ரக்அத், இஷாவுக்குப் பின் இரண்டு ரக்அத், சுபுஹுக்கு முன் இரண்டு ரக்அத். ஏனெனில் நபி (ஸல்) கூறினார்கள்:

عَنْ أُمِّ حَبِيبَةَ زَوْجِ النَّبِيِّ ﷺ أَنَّهَا قَالَتْ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ مَا مِنْ عَبْدٍ مُسْلِمٍ يُصَلِّي للهِ كُلَّ يَوْمٍ ثِنْتَيْ عَشْرَةَ رَكْعَةً تَطَوُّعًا غَيْرَ فَرِيضَةٍ إِلَّا بَنَى اللهُ لَهُ بَيْتًا فِي الْجَنَّةِ أَوْ إِلَّا بُنِيَ لَهُ بَيْتٌ فِي الْجَنَّةِ (م/ ٧٢٨)

“ஒரு முஸ்லிமான அடியான் ஒரு நாளைக்கு உபரியாக பன்னிரண்டு ரக்அத் அல்லாஹ்வுக்காகத் தொழுதால் அல்லாஹ் அவனுக்காக சொர்க்கத்தில் ஒரு வீட்டைக் கட்டுவான்.” அறிவிப்பவர்: உம்மு ஹபீபா(ரலி), நூல்: முஸ்லிம்-728,

பொதுவாக நபில் தொழுகைகளையும் ராத்திப் சுன்னத்களையும் ஒரு முஸ்லிம் தனது வீட்டில் நிறை வேற்றுவதே சிறந்ததாகும். ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்:

عَنْ جَابِرٍقَالَ قَالَ رَسُولُ الله ﷺ إِذَا قَضَى أَحَدُكُمْ الصَّلَاةَ فِي مَسْجِدِهِ فَلْيَجْعَلْ لِبَيْتِهِ نَصِيبًا مِنْ صَلَاتِهِ فَإِنَّ الله جَاعِلٌ فِي بَيْتِهِ مِنْ صَلَاتِهِ خَيْرًا (م/ ٧٧٨)

உங்களில் ஒருவர் பள்ளிவாசலில் தொழுகையை நிறைவேற்றியதும் தங்களது தொழுகைகளில் சிலதை தம் இல்லங்களில் நிறைவேற்றட்டும் ஏனெனில் அவ்வாறு தொழுவதால் வீட்டில் நன்மையை அல்லாஹ் உருவாக்குவான்.

**அறிவிப்பவர் : ஜாபிர்(ரலி) நூல் : முஸ்லிம் 778**

وعَنْ زَيْدِ بْنِ ثَابِتٍ عن النبي ﷺ ... فَإِنَّ خَيْرَ صَلَاةِ الْمَرْءِ فِي بَيْتِهِ إِلَّا الصَّلَاةَ الْمَكْتُوبَةَ (خ/ ٦١١٣، م/ ٧٨١)

"...ஏனெனில் ஒரு மனிதன் தொழும் தொழுகையில் சிறந்தது தனது வீட்டில் தொழுவதாகும். கடமையான தொழுகையைத் தவிர" என்றும் நபி(ஸல்) அவர்கள் கூறிள்ளார்கள். நூல்: புகாரி(6113), முஸ்லிம்(781)

## வித்ரு தொழுகை

வித்ரு தொழுகையை நிறைவேற்றுவது ஒரு முஸ்லிமுக்கு வலியுறுத்தப்பட்ட சுன்னத்தாகும். இதன் நேரம் இஷா தொழுகைக்குப் பிறகிலிருந்து பஜ்ரு உதய மாகும் வரையாகும். இரவின் பின்னேரத்தில் எழுந்து தொழ முடியும் என்ற உறுதியுள்ளவனுக்கு அந்த நேரத்தில் தொழுவதே சிறப்பானது. இந்த வித்ரு தொழுகை நபி (ஸல்) அவர்கள்- பயணத்திலும் சரி, ஊரிலும் சரி- விடாமல் தொழுது வந்த சுன்னத்தான தொழுகைளில் உள்ளவையாகும். வித்ரு தொழுகையில் மிகக் குறைந்தது ஒரு ரக்அத் தொழுவதாகும். நபி(ஸல்) அவர்கள் இரவில் பதினோரு ரக்அத் தொழுதுள்ளார்கள்.

عَنْ عَائِشَةَ أَنَّ رَسُولَ الله ﷺ كَانَ يُصَلِّي بِاللَّيْلِ إِحْدَى عَشْرَةَ رَكْعَةً يُوتِرُ مِنْهَا بِوَاحِدَةٍ ...(م/ ٧٣٦)

ஆயிஷா(ரலி) அவர்கள் அறிவிப்பதாவது: "நபி(ஸல்) அவர்கள் இரவில் 11 ரக்அத் தொழுவார்கள். அவற்றில் ஒரு ரக்அத்தை வித்ராகத் தொழுவார்கள்." (முஸ்லிம்-736) இரவுத் தொழுகையை இரண்டிரண்டாகத் தொழவேண்டும்.

عَنْ ابْنِ عُمَرَ ﷺ أَنَّ رَجُلًا سَأَلَ رَسُولَ الله ﷺ عَنْ صَلَاةِ اللَّيْلِ فَقَالَ رَسُولُ الله ﷺ صَلَاةُ اللَّيْلِ مَثْنَى مَثْنَى فَإِذَا خَشِيَ أَحَدُكُمْ الصُّبْحَ صَلَّى رَكْعَةً وَاحِدَةً تُوتِرُ لَهُ مَا قَدْ صَلَّى (م/ ٧٤٩)

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் இரவுத் தொழுகை பற்றிக் கேட்டார். அதற்கவர்கள், "இரவுத் தொழுகை இரண்டிரண்டாகத் தொழ வேண்டும். சுப்ஹு

வந்துவிடும் என்று அஞ்சினால் ஒரு ரக்அத் தொழு; நீ தொழுதவற்றை அது ஒற்றையாக்கிவிடும்." என பதிலளித்தார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர்(ரலி), நூல்: முஸ்லிம்(749)

சில சமயம் வித்ரு தொழுகையில் ருகூவுக்குப் பிறகு குனூத் ஓதுவது விரும்பத்தக்கதாகும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் ஹஸன் பின் அலீ (ரலி) அவர்களுக்கு வித்ருடைய குனூதில் ஓதுவதற்காக சில வார்த்தைகளைக் கற்றுக் கொடுத்ததாக ஹஸன் பின் அலீ(ரலி) அவர்களே அறிவிக்கக்கூடிய ஒரு நபிமொழி உள்ளது. ஆனாலும் இவ்வாறு செய்வதை வழக்கமாக ஆக்கிக் கொள்ளக் கூடாது. ஏனெனில் நபி(ஸல்)அவர்களின் தொழுகையை நமக்குச் சொன்ன பெரும்பாலான நபித்தோழர்கள் அவர்கள் வித்ரில் குனூத் ஓதியதை நமக்குக் குறிப்பிடவில்லை.

ஒருவருக்கு இரவுத் தொழுகை தவறிவிட்டால் அதனை பகலில் இரண்டு, நான்கு, ஆறு, எட்டு, பத்து. பன்னிரண்டு என இரட்டைப்படையாகக் கழாச் செய்வது விரும்பத்தக்கதாகும். ஏனெனில் நபி(ஸல்)அவ்வாறு செய்துள்ளார்கள்.

**ஃபஜ்ருடைய சுன்னத்**

நபி(ஸல்) அவர்கள் வழமையாகத் தொழுது வந்த ராத்திபு சுன்னத்துகளில் அவர்கள் ஊரில் இருக்கும் போதும் சரி பயணத்தில் இருக்கும்போதும் சரி விடாமல் பேணி வந்த சுன்னத் ஃபஜ்ருடைய முன் சுன்னத் ஆகும்.

عَنْ عَائِشَةَ أَنَّ النَّبِيَّ ﷺ لَمْ يَكُنْ عَلَى شَيْءٍ مِنْ النَّوَافِلِ أَشَدَّ مُعَاهَدَةً مِنْهُ عَلَى رَكْعَتَيْنِ قَبْلَ الصُّبْحِ

(خ/ ١١٦٣، م/ ٧٢٤) واللفظ له

"நபில் தொழுகைகளில் சுப்ஹுக்கு முன்னுள்ள இரண்டு ரக்அத்தை விட வேறு எதையும் நபி (ஸல்) அவர்கள் அதிகம் பேணியதில்லை" என ஆயிஷா (ரலி) கூறுகிறார்கள். (புகரி-1163, முஸ்லிம்-724) ((لَهُمَا أَحَبُّ إِلَيَّ مِنْ الدُّنْيَا جَمِيعًا)) (م/ ٧٤٢)

அது பற்றி நபி(ஸல்) அவர்கள் கூறும்போது "அந்த இரண்டு ரக்அத்தும் இவ்வுலகில் உள்ள அனைத்யையும் விட எனக்கு மிக விருப்பமானதாகும்" என்று கூறினார்கள். (முஸ்லிம்-724)

இத்தொழுகையில் முதல் ரக்அத்தில் "குல் யாஅய்யு ஹல் காஃபிரூன்" என்ற அத்தியாயத்தையும் இரண்டாம் ரக்அத்தில் "குல்ஹுவல்லாஹு அஹத்" என்ற அத்தியாயத்தையும் ஓதுவது சுன்னத்தாகும். சில சமயம் முதல் ரக்அத்தில் "கூலூ ஆமன்னா பில்லாஹி வமா உன்ஸில இலைனா..."(2:136) என்ற வசனத் தையும் இரண்டாம் ரக்அத்தில் "குல் யாஅஹ்லல் கிதாபி தஆலவ்..."(3:64) என்ற வசனத்தையும் ஓதலாம்.

﴿ قُولُوا آمَنَّا بِاللهِ وَمَا أُنْزِلَ إِلَيْنَا وَمَا أُنْزِلَ إِلَى إِبْرَاهِيمَ وَإِسْمَاعِيلَ وَإِسْحَاقَ وَيَعْقُوبَ وَالأَسْبَاطِ وَمَا أُوتِيَ مُوسَى وَعِيسَى وَمَا أُوتِيَ النَّبِيُّونَ مِنْ رَبِّهِمْ لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِنْهُمْ وَنَحْنُ لَهُ مُسْلِمُونَ ﴾ [البقرة:١٣٦]

﴿ قُلْ يَا أَهْلَ الكِتَابِ تَعَالَوْا إِلَى كَلِمَةٍ سَوَاءٍ بَيْنَنَا وَبَيْنَكُمْ أَلَّا نَعْبُدَ إِلَّا اللهَ وَلَا نُشْرِكَ بِهِ شَيْئًا وَلَا يَتَّخِذَ بَعْضُنَا بَعْضًا أَرْبَابًا مِنْ دُونِ اللهِ فَإِنْ تَوَلَّوْا فَقُولُوا اشْهَدُوا بِأَنَّا مُسْلِمُونَ ﴾ [آل عمران:٦٤]

இவ்விரண்டு ரக்அத்தையும் சுருக்கித் தொழுவது சுன்னத்தாகும். ஏனெனில் நபி(ஸல்)இவ்வாறு செய்துள்ளார்கள். ஒருவர் இவ்விரு ரக்அத்தையும் பஜ்ருக்கு முன் தொழத் தவறினால் அவ்விரண்டையும் பஜ்ருக்குப் பிறகு கழாச் செய்து கொள்ளலாம். ஆனாலும் சூரியன் உதயமாகி ஒரு ஈட்டி அளவு உயர்ந்த பிறகிலிருந்து சூரியன் உச்சி சாய்வதற்கு முன்பு வரை கழாச் செய்வது சிறப்பாகும்.

**லுஹா தொழுகை**

லுஹா தொழுகை என்பது அவ்வாபீன் தொழுகையாகும். இத்தொழுகை வலியுறுத்தப்பட்ட சுன்னத்தாகும். ஏராளமான நபிமொழிகளில் இத்தொழுகை பற்றி ஆர்வமூட்டப்பட்டுள்ளது. நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்:

عَنْ أَبِي ذَرٍّ ﷺ عَنْ النَّبِيِّ ﷺ أَنَّهُ قَالَ يُصْبِحُ عَلَى كُلِّ سُلَامَى مِنْ أَحَدِكُمْ صَدَقَةٌ فَكُلُّ تَسْبِيحَةٍ صَدَقَةٌ وَكُلُّ تَحْمِيدَةٍ صَدَقَةٌ وَكُلُّ تَهْلِيلَةٍ صَدَقَةٌ وَكُلُّ تَكْبِيرَةٍ صَدَقَةٌ وَأَمْرٌ بِالْمَعْرُوفِ صَدَقَةٌ وَنَهْيٌ عَنْ الْمُنْكَرِ صَدَقَةٌ وَيُجْزِئُ مِنْ ذَلِكَ رَكْعَتَانِ يَرْكَعُهُمَا مِنْ الضُّحَى (م/ ٧٢٠)

“உங்களில் ஒருவரது ஒவ்வொரு மூட்டுக்கும் தர்மம் உண்டு. சுப்ஹானல் லாஹ் என்று சொல்வதும் தர்மம் ஆகும். அல்ஹம்துலில்லாஹ் என்றுசொல்வதும் தர்மமாகும். லாயிலாஹ இல்லல்லாஹ் என்று சொல்வதும் தர்மமாகும். அல்லாஹு அக்பர் என்று சொல்வதும் தர்மம், நன்மையை ஏவுவதும் தர்மம், தீமையைத் தடுப்பதும் தர்மமே. இவையனைத்திற்கும் நண்பகலில் இரண்டு ரக்அத் (லுஹா) தொழுவது போதுமானதாகும். அறிவிப்பவர்: அபூதர்(ரலி), நூல்: முஸ்லிம்-720

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ أَوْصَانِي خَلِيلِي بِثَلَاثٍ لَا أَدَعُهُنَّ حَتَّى أَمُوتَ صَوْمِ ثَلَاثَةِ أَيَّامٍ مِنْ كُلِّ شَهْرٍ وَصَلَاةِ الضُّحَى وَنَوْمٍ عَلَى وِتْرٍ (خ/ ١١٧٨ ، م/ ٧٢١)

“என் நண்பர் (நபியவர்கள்) எனக்கு மூன்று விஷயங்களை அறிவுறுத்தினார். நான் மரணிக்கும் வரை அவற்றை விட மாட்டேன். அவை, ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பது, லுஹா தொழுவது, தூங்கும் முன் வித்ரைத்

தொழுதுவிடுவது ஆகியவை யாகும்.” அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: புகாரி (1178), முஸ்லிம்(721)

லுஹா தொழுவதற்குச் சிறந்த நேரம் சூரியன் உச்சியை நோக்கி உயர்ந்து கொண்டு அதன் வெப்பம் அதிகரித்துக் கொண்டிருக்கும் பொழுதாகும். சூரியன் உச்சிக்கு வந்துவிட்டால் அதன் நேரம் முடிவடைந்துவிடும். லுஹா தொழுகை குறைந்தபட்சம் இரண்டு ரக்அத்தாகும். அதற்கு மேல் எவ்வளவு வேண்டு மானாலும் தொழலாம். அதற்கு வரையறை இல்லை.

**தொழக்கூடாத நேரங்கள்**

தொழக்கூடாத நேரங்கள் சில நேரங்கள் உள்ளன. அவை வருமாறு:

1. ∴பஜ்ருத் தொழுகைக்குப் பிறகிலிருந்து சூரியன் உதயமாகி ஒரு ஈட்டி அளவு உயரும் வரை.

2. நண்பகலில் சூரியன் நடு உச்சிக்கு வரும்போது. ஒரு பொருளுக்கு நிழல் வருவது நின்றுவிடுவதன் மூலம் இதை அறிந்துகொள்ளலாம். இந்நேரம் சூரியன் மேற்கின் பக்கம் சாயும் வரை நீடிக்கிறது.

3. அஸர் தொழுகைக்குப் பிறகிலிருந்து சூரியன் மறையும் வரை.

ஆனாலும் தடை செய்யப்பட்ட நேரங்களில் சில தொழுகைகளைத் தொழுவது ஆகுமானதே. உதாரணமாக பள்ளிவாசலின் காணிக்கைத் தொழுகை, ஜனாஸாத் தொழுகை, கிரகணத் தொழுகை, தவா∴புக்குப் பிறகு நிறைவேற்றப்படும் இரண்டு ரக்அத், உளுவின் சுன்னத் இரண்டு ரக்அத் போன்று காரண காரியத்தோடு நிறைவேற்றப்படக்கூடிய தொழுகைகளைப்போல. இவ்வாறே தவறவிட்ட ∴பர்ழுத் தொழுகைகளை நிறைவேற்றுவதும் கூடும்.

عَنْ أَنَسٍ قَالَ قَالَ نَبِيُّ الله ﷺ مَنْ نَسِيَ صَلَاةً أَوْ نَامَ عَنْهَا فَكَفَّارَتُهَا أَنْ يُصَلِّيَهَا إِذَا ذَكَرَهَا (خ/ ٥٩٧،م/ ٦٨٤)

“யாரேனும் ஒரு தொழுகையை மறந்துவிட்டால் அல்லது அதைத் தொழாமல் தூங்கிவிட்டால் நினைவுக்கு வந்ததும் அதனை நிறைவேற்றிவிடுவதே அதற்குரிய பரிகாரமாகும்” என நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர்: அனஸ் (ரலி), நூல்: புகாரி (597), முஸ்லிம்(684)

அதுபோல பஜ்ருடைய முன் சுன்னத்தை பஜ்ருக்குப் பிறகு நிறைவேற்றுவதும், ளுஹருடைய சுன்னத் தவறிவிட்டால் அதை அஸருக்குப் பிறகு நிறைவேற்று வதும் கூடும்.

# أحكام الزكاة
# ஜகாத்தின் சட்டங்கள்

**ஜகத்தின் சட்டநிலை:**

ஜகாத் இஸ்லாத்தின் கடமைகளில் மூன்றாவது கடமையாகும். ஒரு முஸ்லிம் நிஸாப் எனும் உச்சவரம்பு பணம் பெற்றிருந்து ஒரு வருடம் முடிந்துவிட்டால் அவன் மீது ஜகாத் கடமையாகிவிடுகின்றது. ﴿وَأَقِيمُوا الصَّلَاةَ وَآتُوا الزَّكَاةَ﴾ [البقرة:١١٠]

அல்லாஹ் கூறுகிறான்: “தொழுகையை நிலைநிறுத்துங்கள், ஜகாத் கொடுங்கள்.” (2:110)

இஸ்லாத்தில் ஜகாத் கடமையாக்கப்பட்டிருப்பதில் சில தத்துவங்களும், பல பயன்களும் உள்ளன. அவை வருமாறு:

1. உள்ளத்தைக் கருமித்தனம், கஞ்சத்தனத்திலிருந்து தூரமாக்கித் தூய்மைப்படுத்துவது.

2. வாரி வழங்கும் தன்மைக்கு ஒரு முஸ்லிமைப் பழக்கப் படுத்துவது.

3. செல்வந்தனுக்கும் ஏழைக்குமிடையே நேசத்தை நிலையாக்குவது. ஏனெனில் மனித உள்ளங்கள் தமக்கு உபகாரம் செய்பவர்களை நேசிப்பதன் மீதே படைக்கப்பட்டுள்ளன.

4. ஏழை முஸ்லிமின் தேவை நிறைவு செய்யப்பட்டுபோதும் என்ற நிலையை உருவாக்குது.

5. மனிதனை பாவங்களை விட்டும் தூய்மைப்படுத்துவது-
பாவங்களை அழித்து, பதவிகளை உயர்த்துவதற்கு ஜகாத் காரணமாக அமைகிறது எனும் வகையில்!

**எவற்றில் ஜகாத் கடமை?**

தங்கம், வெள்ளி, வியாபாரச்சரக்குகள், கால்நடைகள் (ஆடு, மாடு, ஒட்டகம்) பூமியில் விளையும் தானியங்கள், பழங்கள் மற்றும் உலோகங்கள் ஆகியவற்றில் ஜகாத் கடமை.

**தங்கம் வெள்ளி**

தங்கம், வெள்ளி எந்த வகையைச் சார்ந்ததாக இருந் தாலும் அவற்றில் ஜகாத் கடமையாகும். நிஸாப் எனும் உச்சவரம்பு அளவு தங்கம், வெள்ளி யாரிடம் உள்ளதோ அவர் மீது ஜகாத் கடமை. தங்கத்தில் நிஸாப் அளவு 20 மிஸ்கால் அதாவது 85 கிராம். வெள்ளியின் நிஸாப் 200 திர்ஹம் அதாவது 595 கிராம். யார் தங்கத்திற்குரிய நிஸாப் அளவை வைத்திருக்கின்றாரோ அவர் தன்னிடமுள்ளதில் இரண்டரை சதவீதம் ஜகாத் கொடுப்பது அவர் மீது கடமை யாகிவிடுகிறது.

ரொக்கப் பணமாக ஒருவர் ஜகாத் கொடுக்க விரும்பினால் எந்த நாளில் ஓராண்டு பூர்த்தியாகின்றதோ அந்த நாளில் ஒரு கிராம் தங்கம் அல்லது வெள்ளியின் விலை மதிப்பைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். பிறகு அதன் மதிப்புக்கு நிகரான பணத்தை ஜகாத் கொடுக்க வேண்டும். உதாரணமாக ஒருவரிடம் நூறு கிராம் தங்கம் இருந்து ஓராண்டும் பூர்த்தியாகிவிட்டால் அவருக்கு அதில் ஜகாத் கடமையாகி விடுகின்றது. ஏனெனில் அவர் நிஸாப் எனும் உச்சவரம்பைப் பெற்றுவிட்டார். அதற்குரிய ஜகாத் இரண்டரை கிராமாகும். இந்த ஜகாத்தை அவர் ரொக்கப் பணமாக கொடுக்க நாடினால் ஓராண்டு பூர்த்தியான நாளின் (ஜகாத் கடமையான நாளின்) தங்கத்தின் விலை மதிப்பைக் கேட்டு, இரண்டரை கிராம் தங்கத்தின் மதிப்பிற்குச் சமமான தொகையை ஜகாத் கொடுக்க வேண்டும். வெள்ளியின் கணக்கையும் இவ்வாறே செய்து கொள்ள வேண்டும்.

இதுபோன்றே ரொக்கப் பணம் ஜகாத்தின் நிஸாபை அடைந்து, ஓராண்டு பூர்த்தியாகிவிட்டால் அதில் ஜகாத் கடமையாகிவிடுகின்றது. எனவே ஒருவனிடம் 85 கிராம் தங்க மளவிற்கு ரொக்கப் பணம் இருக்குமானால் அவன் மீது ஜகாத் கடமையாகிவிடுகிறது. இரண்டரை சதவீத அளவு கணக்கிட்டு அவன் ஜகாத் கொடுக்க வேண்டும். எனவே ஒரு முஸ்லிமிடம் பணமிருந்து, ஓராண்டு பூர்த்தி யாகிவிட்டால் அவன் தங்க வியாபாரியிடம் 85 கிராம் தங்கத்தின் விலை மதிப்பைக் கேட்க வேண்டும். அத்தொகை போன்று அவனிட மிருக்குமானால் அதற்கு அவன் ஜகாத் கொடுக்கவேண்டும். வியாபாரி கூறியதை விட அவனிடம் குறைவாக இருக்குமானால் அவனுக்கு ஜகாத் கடமையாகாது.

உதாரணமாக ஒருவனிடம் முப்பதாயிரம் ரூபாய் இருந்து, ஓராண்டும் நிறைவு பெற்றிருந்தால் அவன் தனது நாட்டின் நாணய மதிப்பீடு தங்கத்தின் அளவைக் கொண்டிருக்கு மானால் தங்கத்தின் ஒரு கிராம் விலையைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். அல்லது தனது நாட்டின் நாணய மதிப்பீடு வெள்ளியைக் கொண்டிருக்குமானால் ஒரு கிராம் வெள்ளியின் விலையைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்போது 85 கிராம் தங்கத்தின் விலை நாற்பதாயிரமாக இருக்குமானால் அவனுக்கு ஜகாத் கடமையாகாது. ஏனெனில் அவனிடமுள்ள இந்தத் தொகை ஜகாத் கொடுக்குமளவுள்ள தொகையல்ல. வெள்ளிக்கும் இவ்வாறே செய்து கொள்ளவேண்டும்.

**வியாபாரச் சரக்குளுக்குரிய ஜகாத்**

பொருள் வசதியைப் பெற்று அதை வியாபாரத்தில் முதலீடு செய்யக்கூடிய முஸ்லிமான வியாபாரியின் மீது ஜகாத் கொடுப்பதை வருடம் ஒரு முறை இஸ்லாம் கடமையாக்கியுள்ளது. இது, அவன் அல்லாஹ்வின் அருளுக்கு நன்றி செலுத்துதற்காகவும் தன் சகோதரர்களில் தேவையுடையவர்களின் தேவையை நிறைவு செய்வதற்காகவும் ஆகும்.

அசையாப் பொருள், பிராணி, உணவு, பானம், கார் போன்றவற்றில் இலாபத்தை நோக்கமாகக் கொண்டு கொடுக்கல் வாங்கல் செய்யக்கூடிய அனைத்திலும் ஜகாத் கடமையாகின்றது. இவற்றில் ஜகாத்திற்குரிய நிபந்தனை, பணம் நிஸாப் எனும் உச்சவரம்பை எட்டியிருக்க வேண்டும். அவற்றை வெள்ளி, தங்கம் இவ்விரண்டில் ஒன்றின்கிரயத்துக்கு ஈடாக மதிப்பிட வேண்டும். அவற்றின் மொத்தக் கிரயத்தில் இரண்டரை சதவீதம் ஜகாத் கடமையாகும்.

ஒருவனின் வியாபாரப் பொருளின் கிரயமாக ஒரு லட்சம் ரூபாய் இருக்கு மானால் அவன் அதில் 2500 ரூபாய் ஜகாத் கொடுப்பது கடமையாகும். வியாபாரிகள் ஒவ்வொரு வருடமும் தங்களது இருப்பை விலைமதிப்பீடு செய்வது கடமையாகும். பிறகு அவற்றின் ஜகாத்தைக் கொடுப்பார்கள். ஒரு வியாபாரி ஒரு வருடம் பூர்த்தியாக பத்து நாட்கள் இருக்கும்போது ஒரு பொருளை விலைக்கு வாங்கினால் அதை மற்றய பொருள்களுடன் சேர்த்து அதற்கு ஜகாத் கொடுத்து விடவேண்டும். வியாபாரத்தை எந்த நாள் ஆரம்பித்தானோ அந்த நாளிலிருந்து வருடம் ஆரம்பமாகி விடுகிறது. எல்லா முஸ்லிம்களும் தங்களிடமுள்ளவற்றிற்கு ஒவ்வொரு வருடமும் ஜகாத் கொடுக்க வேண்டியதிருப்பதால் இது வருடாந்திர ஜகாத் என்று ஆகிவிட்டது.

தீனி கொடுத்து வளர்க்கும் கால்நடைகள் வியாபாரத்திற்குரியவையாக இருந்தால் அவை ஜகாத்தின் அளவை அடைந்தாலும் அடையாவிட்டாலும்

சரியே! அவற்றின் விலைமதிப்பீடு நிஸாபுக்கு மேல் போகும்போது அவற்றின் பேரில் ஜகாத் கடமையாகிவிடும். எனவே அவன் அவற்றிற்கு நாணயத்தைக் கணக்கிட்டு ஜகாத் கொடுக்க வேண்டும்.

**பங்குகளுக்கு ஜகாத்**

இக்காலத்தில் மக்கள் அசையாச் சொத்துக்களிலும் மற்றவற்றிலும் பங்குகள் போடும் பழக்கம் உடையவர்களாக இருக்கின்றனர். இன்னும் இவர்களில் சிலர் அப்பங்குகளில் ஒரு தொகையை சில சமயங்களில் பல ஆண்டுகளாக முடக்கி விடுகின்றனர். அத்தொகை கூடவும் செய்யும் குறையவும் செய்யும். இவை வியாபாரப் பொருள்களாகக் கணிக்கப் படுவதால் இப்பங்குகளுக்கும் ஜகாத் கொடுக்க வேண்டும். எனவே ஒரு முஸ்லிம் ஒவ்வொரு ஆண்டும் அவற்றின் மதிப்பைக் கணக்கிட்டு அவற்றிற்குரிய ஜகாதைக் கொடுக்க வேண்டும். அல்லது அவற்றை விற்று அவற்றின் கிரயத்தைப் பெற்றுக் கொள்ளும்போது அந்த வருடங்கள் அனைத்திற்கும் ஜகாத் கொடுக்க வேண்டும்.

**விளை பொருளுக்குரிய ஜகாத்**

சேமிக்கப்படக்கூடிய, நிறுக்கப்படக்கூடிய பேரீத்தம், உலர்ந்த திராட்சை போன்ற கனிவகைகளிலும் மணிக்கோதுமை, வார்க்கோதுமை, அரிசி போன்ற தானியங்களிலும் ஜகாத் கடமையாகும். எனினும் சேகரிக்கப்பட முடியாத பழங் களிலும் காய்கறிகளிலும் ஜகாத் கடமையில்லை. விளைபொருள்கள் நிஸாப் எனும் உச்சவரம்பை அதாவது 612 கிலோவை அடைந்துவிட்டால் ஜகாத் கட்டாய மாகும். ஓராண்டு பூர்த்தியாக வேண்டும் என்பது இவற்றில் நிபந்தனையில்லை.

இவை மழை நீர், ஆற்று நீர் போன்ற தண்ணீரால் செலவின்றி நீர்ப்பாசனம் செய்யப்பட்டு விளைந்திருக்குமானால் பத்து சதவீதம் ஜகாத் கடமையாகும். தண்ணீருக்காகச் செலவு செய்யப்பட்டிருக்குமானால் ஐந்து சதவீதம் ஜகாத் கடமையாகும். உதாரணமாக ஒருவன் கோதுமையை செலவின்றி நீர் பாசனம் செய்து அதில் அவனுக்கு 800 கிலோ கிடைத்திருக்குமானால் அதில் அவனுக்கு ஜகாத் கடமையாகும். ஏனெனில் கோதுமைக்குரிய நிஸாப் 552 கி. ஆகும். 800 கிலோவில் பத்தில் ஒன்று அதாவது 80 கிலோ ஜகாத் கடமையாகும். செலவுடன் பாசனம் செய்திருந்தால் இருபது சதவீதம் அதாவது 40 கிலோ கடமையாகும்.

**கால்நடைகளுக்குரிய ஜகாத்**

கால்நடைகள் என்றால் ஒட்டகம், மாடு, வெள்ளாடு, செம்மறி ஆடு ஆகியவை யாகும். இவற்றில் கீழ் காணும் நிபந்தனைகளுடன் ஜகாத் கடமையாகும்.

1. நிஸாப் எனும் உச்சவரம்பை எட்டவேண்டும். ஒட்டகத்தின் நிஸாப் ஐந்து. செம்மறி ஆடு, வெள்ளாடு இவற்றின் நிஸாப் நாற்பது. மாட்டின் நிஸாப் முப்பது. இதற்கு குறைவானதில் ஜகாத் கிடையாது.

2. இவை உரிமையாளரின் கைக்கு வந்து ஓராண்டு பூர்த்தியாகி இருக்க வேண்டும்.

3. இக்கால் நடைகள் வருடத்தில் அதிக நாட்கள் வெளியே சென்று மேய்ந் ததாக இருக்கவேண்டும். தீனி கொடுத்து வளர்க்கப்பட்டவையாகவோ அல்லது அவற்றுக்கான தீனி விலைக்கு வாங்கப்பட்டவையாகவோ இருந்தால் அல்லது அவற்றுக்கான தீனியை உரிமையாளரே சேகரிக்கிறார் என்றால் இதுபோன்ற கால்நடைகளுக்கு ஜகாத் கடமையில்லை. ஆனால் இவை வருடத்தில் அதிக நாட்கள் மேய்ந்தவையாக இருந்தால் ஜகாத் கடமையாகும்.

4. அவை பணியில் ஈடுபடுத்தப்படாதவையாக இருக்க வேண்டும். அவற்றின் உரிமையாளன் அவற்றை விவசாயத்திலோ அல்லது சுமை தூக்கவோ அல்லது வேறு வேலைகளுக்கோ அவற்றைப் பயன்படுத்தாமல் இருக்கவேண்டும்.

**ஒட்டகம்**

ஜகாத்திற்குரிய நிஸாப் ஐந்து ஒட்டகங்கள் இருந்தால் ஒட்டகத்தில் ஜகாத் கடமையாகும். ஒரு முஸ்லிமிடம் 5 முதல் 9 ஒட்டகங்கள் வரை அவனது உடமை யிலிருந்தால் ஓர் ஆண்டு நிறைவடைந்திருந்தால் அவற்றில் ஒரு ஆடு ஜகாத் கடமையாகும். 10 முதல் 14 வரை இருந்தால் அவற்றில் 2 ஆடுகள் கடமை யாகும். 15 முதல் 19 வரை 3 ஆடுகள். 20 முதல் 24 வரை 4 ஆடுகள். 25 முதல் 35 வரை ஒரு வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம். இது அவனுக்கு கிடைக்க வில்லையெனில் 2 வயது பூர்த்தியான ஒரு ஆண் ஒட்டகம்.

36 முதல் 45 வரை இரு வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம். 46 முதல் 60 வரை மூன்று வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம். 61 முதல் 75 வரை நான்கு வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம். 76 முதல் 90 வரை இரு வயது பூர்த்தியான இரு பெண் ஒட்டகம். 91 முதல் 120 வரை மூன்று வயது பூர்த்தியான இரு பெண் ஒட்டகங்கள். இதற்கு மேல் அதிகமானால் ஒவ்வொரு நாற்பதுக்கும் இரு வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம். ஒவ்வொரு ஐம்பதுக்கும் மூன்று வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம். கீழ்காணும் அட்டவணை ஒட்டகத் திற்குரிய ஜகாத்தைத் தெளிவுபடுத்துகிறது.

| எண்ணிக்கை | ஜகாத் |
|---|---|
| 5 முதல் 9 வரை | ஒரு ஆடு |

| | |
|---|---|
| 10 முதல் 14 வரை | இரு ஆடு |
| 15 முதல் 19 வரை | மூன்று ஆடு |
| 20 முதல் 24 வரை | நான்கு ஆடு |
| 25 முதல் 35 வரை | 1 வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம் அல்லது 2 வயது பூர்த்தியான ஒரு ஆண் ஒட்டகம் |
| 36 முதல் 45 வரை | 2 வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம் |
| 46 முதல் 60 வரை | 3 வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம் |
| 61 முதல் 75 வரை | 4 வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம் |
| 76 முதல் 90 வரை | 2 வயது பூர்த்தியான இரு பெண் ஒட்டகங்கள் |
| 91 முதல் 120 வரை | 3 வயது பூர்த்தியான இரு பெண் ஒட்டகங்கள் |

இதற்கு மேல் அதிகமாக இருந்தால் ஒவ்வொரு 40 க்கும் 2 வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகமும் ஒவ்வொரு ஐம்பதுக்கும் 3 வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகமும் கொடுக்க வேண்டும்.

**மாடுகள்**

ஒருவனிடம் 30 முதல் 39 வரை மாடுகள் இருந்தால் ஒரு வயது பூர்த்தியான ஒரு பசுவும், 40 முதல் 59 வரை இரு வயது பூர்த்தியான ஒரு பசுவும், 60 முதல் 69 வரை ஒரு வயது பூர்த்தியான இரண்டு பசுவும், 70 முதல் 79 வரை இரு வயது பூர்த்தியான ஒரு பசுவும் ஒரு வயது பூர்த்தியான ஒரு பசுவும் பின்னர் ஒவ்வொரு 30 க்கும் ஒரு வயது பூர்த்தியான ஒரு பசுவும், ஒவ்வொரு 40 க்கும் இரு வயது பூர்த்தியான பசுவும் கொடுக்க வேண்டும்.

| **எண்ணிக்கை** | **ஜகாத்** |
|---|---|
| 30 முதல் 39 வரை | 1 வயது பூர்த்தியான ஒரு பசு |
| 40 முதல் 59 வரை | 2 வயது பூர்த்தியான பசு ஒன்று |
| 60 முதல் 69 வரை | 1 வயது பூர்த்தியான இரண்டு பசு |
| 70 முதல் 79 வரை | 2 வயது பூர்த்தியான ஒரு பசுவும்<br>1 வயது பூர்த்தியான ஒரு பசுவும் |

**ஆடுகள்**

ஒருவனிடம் 40 முதல் 120 வரை ஆடுகள் இருந்தால் அவன் ஒரு ஆடு கொடுப்பது கடமையாகும். 121 முதல் 200 வரை 2 ஆடுளும், 201 முதல் 300 வரை 3 ஆடுகளும், 301 முதல் 400 வரை 4 ஆடுகளும், 401 முதல் 500 வரை 5

ஆடுகளும் கொடுக்க வேண்டும். பின்னர் இதற்கு மேல் அதிகமாகும் பட்சத்தில் ஒவ்வொரு 100 ஆடுகளுக்கும் சராசரி ஒரு ஆடு கொடுக்க வேண்டும்.

| எண்ணம் | ஜகாத் | எண்ணம் | ஜகாத் |
|---|---|---|---|
| 40 முதல் 120 வரை | 1 ஆடு | 301 முதல் 400 வரை | 4 ஆடுகள் |
| 121 முதல் 200 வரை | 2 ஆடுகள் | 401 முதல் 500 வரை | 5 ஆடுகள் |
| 201 முதல் 300 வரை | 3 ஆடுகள் | | |

பின்னர் ஒவ்வொரு 100 ஆடுகளுக்கும் ஒரு ஆடு கொடுக்க வேண்டும்.

**ஜகாத் பெறத் தகுதியானவர்கள்**

﴿إِنَّمَا الصَّدَقَاتُ لِلْفُقَرَاءِ وَالْمَسَاكِينِ وَالعَامِلِينَ عَلَيْهَا وَالْمُؤَلَّفَةِ قُلُوبُهُمْ وَفِي الرِّقَابِ وَالغَارِمِينَ وَفِي سَبِيلِ اللهِ وَابْنِ السَّبِيلِ فَرِيضَةً مِنَ اللهِ وَاللهُ عَلِيمٌ حَكِيمٌ﴾ [التوبة:٦٠]

அல்லாஹ் கூறுகிறான்: “தர்மங்கள் (ஜகாத்) யாசிப்போருக்கும், ஏழைகளுக்கும், அதை வசூலிப்போருக்கும், உள்ளங்கள் ஈர்க்கப்பட வேண்டியவர்களுக்கும், அடிமைகளை விடுதலை செய்வதற்கும், கடன்பட்டோருக்கும், அல்லாஹ்வின் பாதையில் (போர் புரிவோருக்கும்) வழிப்போக் கர்களுக்கும் உரியனவாகும். இது அல்லாஹ்வின் கடமையாகும். அல்லாஹ் அறிந்தவன், ஞானமிக்கவன்.” (9:60)

அல்லாஹ் ஜகாத் பெறத் தகுதியான எட்டு வகைக் கூட்டத்தினரை விளக்கிக் கூறியுள்ளான். இஸ்லாத்தில் ஜகாத் சமுதாயத்தையும் தேவையுடையோரையும் சென்றடைகின்றது. ஏனைய மார்க்கங்களிலுள்ளது போல மார்க்க விற்பன்னர்களுக்கு மட்டுமே கொடுக்கப்பட மாட்டாது. ஜகாத் பெறத் தகுதியானவர்கள் வருமாறு:

1. யாசிப்போர்: உயிர் வாழ்வதற்குப் போதுமான தேவைகளில் பாதிக்கும் குறைவாக பெற்றிருப்பவர்.

2. ஏழைகள்: உயிர் வாழ்வதற்குப் போதுமான தேவைகளில் பாதிக்கு மேல் பெற்றிருப்பவர். எனினும் அவர் போதுமான அளவை முழுமையாகப் பெற்றுக் கொள்வதில்லை. இவர்களுக்கு பல மாதங்களுக்கான அல்லது ஒரு வருடத் திற்குப் போதுமான அளவுக்குரிய பணம் ஜகாத் நிதியிலிருந்து கொடுக்க வேண்டும்.

3. ஜகாத்தை வசூலிப்பவர்கள்: ஜகாத் தொகையை செல்வந்தர்களிடமிருந்து திரட்டுவதற்காக ஆட்சியாளரால் நியமிக்கப்படுபவர்கள். அவர்கள் செல்வந்தர்களாக இருந்தாலும் அவர்களது அந்தஸ்த்திற்கேற்ப அவர்களது வேலைக்குரிய கூலியைக் கொடுக்க வேண்டும்.

4. உள்ளங்கள் ஈர்க்கப்பட வேண்டியவர்கள்: தம் மக்களிடத்தில் மரியாதைக்குரிய தலைவர்களில் எவர்கள் இஸ்லாத்திற்கு வருவார்கள் என்றோ முஸ்லிம்களுக்குத் தொல்லை தராமலிருப்பார்கள் என்றோ எதிர்பார்க்கப்படுகிறதோ அத்தகையவர்கள். இவ்வாறே புதிதாக இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டோருக்கும் ஜகாத் கொடுக்கப்பட வேண்டும். காரணம் இஸ்லாத்தின் பக்கம் பிணைப்பை ஏற்படுத்து வதற்காகவும், அவர்களின் உள்ளங்களில் ஈமான்- நம்பிக்கையைப் பலப்படுத்துவதற்காகவும் ஆகும்.

5. அடிமைகளை விடுதலை செய்வதற்கும் எதிரிகளால் கைது செய்யப் பட்டவர்களை விடுவிப்பதற்கும் ஜகாத் கொடுக்கப்பட வேண்டும்.

6. கடன்பட்டோர்: இவர்களுடைய கடனை அடைப்பதற்காக ஜகாத் நிதியிலிருந்து கொடுக்கப்பட வேண்டும். ஆயினும் இவர்கள் முஸ்லிம்களாக இருப்பதும், கடனை அடைப்பதற்கு வசதியுள்ள செல்வந்தர்களாக இல்லாமலிருப்பதும், அவர்களுடைய கடன் பாவமான காரியத்தில் இல்லாமலிருப்பதும், தற்காலிக கடனாக இருப்பதும் நிபந்தனையாகும்.

7. அல்லாஹ்வின் பாதையில் (போர் புரிவோர்): இவர்கள் ஊதியம் எதிர் பார்க்காமல் வணக்கமாகக் கருதி போர் புரிபவர்கள் ஆவர். இவர்களுக்கு ஜகாத் வழங்கப்பட வேண்டும். அல்லது ஆயுதங்கள் வாங்குவதற்காக ஜகாத் நிதியிலிருந்து செலவு செய்ய வேண்டும். மார்க்கக் கல்வியைத் தேடுவதும் ஜிஹாதைச் சேர்ந்தது தான். மார்க்கக் கல்வியில் ஈடுபடுவதை நாடும் ஒரு மனிதன் தன்னிடம் பொருளாதார வசதியில்லாமலிருக்குமானால் அவன் மாாக்கக் கல்வியைத் தேடுவதில் ஈடுபடுமளவிற்கு போதுமான தொகையை மட்டும் ஜகாத் நிதியிலிருந்து கொடுப்பது கூடும்.

8. வழிப்போக்கன்: ஊருக்குச் செல்ல முடியாமல் வழியிலேயே நின்றுவிட்ட ஒரு பயணி. அவனது ஊரில் அவன் செல்வந்தனாக இருந்தாலும் அவன் ஊர் போய்ச் சேருமளவிற்கு ஜகாத் தொகையிலிருந்து கொடுக்க வேண்டும்.

பள்ளிகட்டுதல், சாலைகளை சீர்படுத்துதல் போன்ற நற்பணிகளுக்கு ஜகாத் நிதியை செலவிடுவது கூடாது.

**குறிப்பு:**

1. கடலிலிருந்து எடுக்கப்படக்கூடிய முத்து, பவளம், மீன் இன்னும் இது போன்றவற்றில் வியாபாரத்திற்கென ஒதுக்கப்பட்டவற்றைத் தவிர மற்றவற்றில் ஜகாத் கடமையில்லை.

2. வாடகைக் கட்டடங்கள், தொழிற்சாலைகள் போன்ற வற்றில் ஜகாத் கடமையில்லை. எனினும் வாடகைப் பணம் நிஸாப் எனும் உச்சவரம்பை அடைந்து ஓராண்டு பூர்த்தியாகி விடுமானால் அதில் ஜகாத் கடமையாகும். உதாரணமாக ஒரு வீட்டை ஒருவன் வாடகைக்கு விட்டு அதன் வாடகயை எடுத்துக் கொள்கிறான். அவன் வாடகையாக எடுத்துக் கொண்ட தொகைக்கோ அல்லது அதில் சிறிதளவுக்கோ- அவை ஜகாத்தின் அளவவ எட்டும் பட்சத்தில்- ஓராண்டு பூர்த்தியாகிவிடுமானால் அதில் ஜகாத் கடமையாகும்.

# أحكام الصيام
# நோன்பின் சட்டங்கள்

**நோன்பின் சட்டநிலை**

ரமழான் மாதம் நோன்பு நோற்பது இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளில் ஒன்றாகும்.

عَنْ ابْنِ عُمَرَ ﷺ قَالَ قَالَ رَسُولُ الله ﷺ بُنِيَ الْإِسْلَامُ عَلَى خَمْسٍ شَهَادَةِ أَنْ لَا إِلَهَ إِلَّا اللهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ الله وَإِقَامِ الصَّلَاةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالْحَجِّ وَصَوْمِ رَمَضَانَ (خ/ ٨، م/ ١٦)

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: “இஸ்லாம் ஐந்து அடிப்படை கடமைகள் மீது நிறுவப்பட்டுள்ளது. அவை வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் வைத் தவிர வேறு யாருமில்லை, முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்று உறுதியாக நம்புவது, தொழுகையை நிலை நாட்டுவது, ஜகாத் கொடுப்பது, ஹஜ் செய்வது ரமழானில் நோன்பு நோற்பது ஆகியவையாகும். (புகாரி-8, முஸ்லிம்-16)

நோன்பு என்பது அல்லாஹ்வின் பால் நெருங்கும் எண்ணத்துடன் பஜ்ரு உதயமானதிலிருந்து சூரியன் மறையும் வரை உண்ணாமல், பருகாமல், உடலுறவு கொள்ளாமல் இன்னும் நோன்பை முறித்து விடக்கூடிய ஏனைய காரியங்களை விட்டும் விலகியிருப்பதாகும். ரமழான் மாதம் நோன்பு நோற்பது கடமை என்பது முஸ்லிம்களின் ஏகோபித்த முடிவாகும். அல்லாஹ் கூறுகிறான்:

“உங்களில் யார் அம்மாதத்தை அடைகிறாரோ அதில் அவர் நோன்பு நோற்கட்டும்.” (2:185) ﴿فَمَنْ شَهِدَ مِنكُمُ الشَّهْرَ فَلْيَصُمْهُ﴾ [البقرة:١٨٥]

இது புத்தி சீர் நிலையிலுள்ள, பருவ வயதை அடைந்த ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கட்டாயக் கடமையாகும். பருவமடைதல் என்பது 15 வயது பூர்த்தியாவது, அல்லது மர்மஸ்தானத்தில் முடி முளைப்பது, அல்லது கனவில் இந்திரியம் வெளிப்படுவது போன்றவற்றால் ஏற்படுகிறது. கூடுதலாக ஒரு பெண்ணுக்கு

மாதவிடாய் ஏற்படுதல் எனும் காரணமும் உண்டு. ஆக ஒருவனுக்கு இக்காரணங்களில் ஏதேனும் ஒன்று ஏற்பட்டுவிட்டால் அவன் பருவ வயதை அடைந்தவனாகிறான்.

### ரமழானின் சிறப்புகள்

அல்லாஹ் ரமழான் மாதத்தை ஏனைய மாதங்களுக்கில்லாத ஏராளமான சிறப்புகளைக் கொண்டு சிறப்பித்துள்ளான். அத்தகைய சிறப்புகளில் சில:

1. நோன்பாளிகள் நோன்பு திறக்கும் வரை அவர்களுக்காக மலக்குகள் பாவமன்னிப்புத் தேடுகின்றனர்.

2. மூர்க்கத்தனமான ஷைத்தான்கள் விலங்கிடப்படுகிறார்கள்.

3. ஆயிரம் மாதங்களை விட சிறப்பான மகத்துவமிக்க ஓர் இரவு இதில் உள்ளது.

4. ரமழானின் கடைசி இரவில் நோன்பாளிகளுக்கு மன்னிப்பு வழங்கப்படுகிறது.

5. ரமழானின் ஒவ்வொரு இரவிலும் அல்லாஹ் நரகிலிருந்து சிலரை விடுதலை செய்கிறான்.

6. ரமழானில் செய்கின்ற உம்ரா, ஹஜ்ஜுக்குச் சமமாகும்.

மேலும் சங்கைக்குரிய இம்மாத்தின் சிறப்பு பற்றி வந்துள்ள நபிமொழி இதோ:

عن أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ الله ﷺ قَالَ مَنْ صَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ (م/ ٧٦٠)

“ஈமானுடனும் நற்கூலி கிடைக்கும் என்ற எண்ணத்துடனும் யார் ரமழானில் நோன்பு நோற்கிறாரோ அவருக்கு அவர் முன் செய்த பாவங்கள் மன்னிக்கப் படுகின்றன.” என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி-38, முஸ்லிம்-760)

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ الله ﷺ كُلُّ عَمَلِ ابْنِ آدَمَ يُضَاعَفُ الْحَسَنَةُ عَشْرُ أَمْثَالِهَا إِلَى سَبْعِمِائَة ضِعْفٍ قَالَ اللهُ عَزَّ وَجَلَّ إِلَّا الصَّوْمَ فَإِنَّهُ لِي وَأَنَا أَجْزِي بِهِ ... (م/ ١١٥١)

ஆதமின் மகன் செய்கின்ற ஒவ்வொரு நற்செயலுக்கும் பத்திலிருந்து எழுநூறு மடங்குகள் வரை கூலி கொடுக்கப்படும். அல்லாஹ் கூறுகிறான்: “நோன்பைத் தவிர. ஏனெனில் நோன்பு எனக்குரியது; அதற்கு நானே கூலி கொடுப்பேன்.” நபிமொழி. (முஸ்லிம்-1151)

### ரமழானை உறுதி செய்தல்

ரமழான் வருகை இரு காரியங்களால் உறுதியாகும்:

1. **ரமழான் பிறை பார்ப்பது:** பிறை பார்க்கப்பட்டால் நோன்பு கடமையமாகி விடும். عَنْ ابْنِ عُمَرَ عن النبي ﷺ قال: إِذَا رَأَيْتُمُوهُ فَصُومُوا وَإِذَا رَأَيْتُمُوهُ فَأَفْطِرُوا (خ/ ١٩٠٠، م/ ١٠٨٠)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நீங்கள் பிறையைப் பார்த்தால் நோன்பு வையுங்கள். நீங்கள் பிறையைப் பார்த்தால் நோன்பை விட்டுவிடுங்கள்." அறிவிப்பவர் அபுஹுரைரா(ரலி), நூல்: புகாரி-1900, முஸ்லிம்-1080

ரமழான் மாதத்தை உறுதி செய்வதற்கு நீதமான ஒருவர் பிறை பார்ப்பது போதுமானது. ஷவ்வால் பிறையைக் கண்டு நோன்பை விடுவதற்கு நீதமான இருவர் பிறை பார்ப்பது கட்டாயமாகும்.

2. **ஷஃபான் மாதத்தை 30 நாட்களாகப் பூர்த்தியாக்குவது:** ஷஃபான் மாதம் 30 நாட்கள் பூர்த்தியாகிவிட்டால். 31 வது நாள் ரமழானின் முதல் நாளாகும்.

((فَإِنْ غُمَّ عَلَيْكُمْ فَأَكْمِلُوا الْعِدَّةَ ثَلاثِينَ)) (خ/ ١٩٠٧)

"நீங்கள் பிறை பார்க்க முடியாத அளவுக்கு மேக மூட்டம் இருந்தால் மாதத்தின் எண்ணிக்கையை முப்பதாகப் பூர்த்தியாக்குங்கள்." (புகாரி1907)

**நோன்பை விடுவதற்கு சலுகை அளிக்கப்பட்டவர்கள்:**

1. **நோய் குணமடைந்து விடுவதை எதிர்பார்க்கப்படும் நோயாளி:** இவருக்கு நோன்பு நோற்பது சிரமமாக இருந்தால் நோன்பை விட்டுவிட இவருக்கு சலுகை வழங்கப்படுகிறது. விடுபட்ட நோன்பை இவர் பின்னர் கழா செய்ய வேண்டும்.

எனினும் தனது நோய் நீங்கிவிடுமென எதிர்பார்க்க முடியாத நிரந்தர நோயாளிக்கு நோன்பு நோற்பது கட்டாயமில்லை. அவர் ஒவ்வொரு நாளும் ஒரு ஏழைக்கு $1^1/_2$ கி. உணவு வழங்க வேண்டும். அல்லது விடுபட்ட நோன்புகளின் எண்ணிக்கை அளவு ஏழைகளை அழைத்து (ஒரே நேரத்தில்) உணவு வழங்க வேண்டும்.

2. **பயணி:** ஒரு பயணி தனது ஊரில் இருந்து புறப்பட்டுத் திரும்பி வரும் வரை நோன்பை விட்டுவிட சலுகையளிக்கப்படுகிறார். இச்சலுகை அங்கும் தங்கும் எண்ணமின்றி அவர் அங்கு இருக்கும் வரையாகும்.

எந்த நோக்கத்திற்காகப் பயணம் மேற்கொண்டாரோ அந்த நோக்கம் முடிந்த பின் அங்கு தங்குவதில்லை என்ற எண்ணத்துடன் அங்கு இருக்கும் வரை அவர் பயணத்திலேயே இருக்கிறார்.

3. **கர்ப்பிணி, பாலூட்டும் தாய்:** இவ்விரு வரும் தமக்கோ தம் குழைந்தைக்கோ இடையூறு ஏற்படுமெனப் பயந்தால் நோன்பை விட்டுவிட அனுமதிக்கப்படு கிறார்கள். காரணம் நீங்கிவிட்ட பின்னர் விடுபட்ட நோன்பை அவர்கள் கழாச் செய்ய வேண்டும்.

4. **முதியவர்:** இவர் நோன்பு பிடிப்பது சிரமமாக இருந்தால் நோன்பை விட்விட சலுகை அளிக்கப்படுவார். ஆனால் இவருக்கு கழா கிடையாது. மாறாக ஒவ்வொரு நாளும் ஒரு ஏழைக்கு இவர் உணவு கொடுக்க வேண்டும்.

**நோன்பை முறிப்பவை**

1. **உண்பது, குடிப்பது:** மறதியாக உண்டால், குடித்தால் அது நோன்பை முறிக்காது. ((مَنْ نَسِيَ وَهُوَ صَائِمٌ فَأَكَلَ أَوْ شَرِبَ فَلْيُتِمَّ صَوْمَهُ فَإِنَّمَا أَطْعَمَهُ اللهُ وَسَقَاهُ)) (م/ ١١٥٥)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "யாரேனும் நோன்பிருந்த நிலையில் மறதியாக உண்டால் அல்லது குடித்தால் அவர் நோன்பை (முறிக்காமல்) நிறைவு செய்யட்டும். ஏனெனில் அல்லாஹ் அவருக்கு உணவளித்துள்ளான். தண்ணீர்ப் புகட்டியுள்ளான்." (முஸ்லிம்-1155)

மூக்கு வழியாக தண்ணீர் வயிற்றினுள் சென்றுவிடுவது, நரம்பு வழியாக உணவு, இரத்தம் செலுத்துவது. இவையனைத்தும் நோன்பை முறிக்கும். காரணம் இவை நோன்பாளிக்கு உணவாக அமைகின்றன.

2. **உடலுறவு கொள்வது:** நோன்பாளி உடலுறவு கொண்டால் நோன்பு முறிந்து விடும். அவர் நோன்பைக் கழாச் செய்வதுடன் பரிகாரமும் செய்ய வேண்டும். அதாவது ஒரு அடிமையை விடுதலை செய்ய வேண்டும். அதற்கு இயலவில்லையெனில் தொடர்ந்து இரண்டு மாதங்கள் நோன்பு நோற்க வேண்டும்.

இவ்விரண்டு மாதங்களில் மார்க்க ரீதியான அல்லது உடல் ரீதியான காரணம் இன்றி நோன்பை விட்டுவிடக்கூடாது. மார்க்க ரீதியான காரணம் என்பது ஹஜ்ஜுப் பெருநாளும் அதை அடுத்து வரக்கூடிய அய்யாமுத் தஷ்ரீக் எனப்படும் 11, 12, 13 ஆகிய மூன்று நாட்களும் ஆகும். உடல் ரீதியான காரணமென்பது வியாதி, நோன்பை விடவேண்டுமென்ற நோக்கமின்றி பயணம் செய்தல் ஆகியவையாகும்.

எந்தக் காரணமுமின்றித் தொடராக நோன்பு நோற்பதை ஒருவன் விட்டு விட்டால் அது ஒரு நாளாயினும் சரி- தொடர் உண்டாவதற்காக அவன் மீண்டும் புதிதாகத் தொடர்வது அவசியமாகும். தொடராக நோன்பு நோற்க இயலவில்லை எனில் 60 ஏழைகளுக்கு உணவு வழங்க வேண்டும்.

3. **விந்தை வெளியேற்றுதல்:** முத்தமிடுதல், சுய இன்பத்தில் ஈடுபடுதல் போன்ற காரணங்களால் இந்திரியத்தை வெளியேற்றுதல். இவ்வாறு செய்பவன் நோன்பை கழா செய்ய வேண்டும். பரிகாரம் தேவையில்லை. கனவின் மூலம் விந்து வெளியானால் நோன்பு முறியாது.

4. **இரத்தத்தை வெளியேற்றுதல்:** அதாவது (ஆரோக்கியம் கருதி) இரத்தம் குத்தி எடுப்பதற்காகவோ இரத்ததானம் செய்வதற்காகவோ இரத்தத்தை வெளி

யேற்றுதல். இரத்தப் பரிசோதனைக்காக எடுக்கப்படும் குறைவான இரத்தம் நோன்பை முறிக்காது. இவ்வாறே சுயவிருப்பமின்றி மூக்கிலிருந்தும், காயம், பல் பிடுங்குதல் போன்றவற்றால் வெளியேறும் இரத்தம் நோன்பை முறிக்காது.

5. **வாந்தி எடுத்தல்:** வேண்டுமென்றே வாந்தி எடுத்தால் நோன்பு முறிந்து விடும். சுய விருப்பமின்றி வாந்தி வந்தால் நோன்பு முறியாது.

நோன்பை முறிக்கும் இக்காரியங்களில் ஒன்றை நோன்பாளி, மறதியின்றி தெரிந்தோ வேண்டுமென்றோ செய்தால் அவரது நோன்பு முறிந்துவிடும்.

அது குறித்த மார்க்கச் சட்டத்தை அறியாமல், அல்லது நேரம் தெரியாமல்- உதாரணமாக பஜ்ரு இன்னும் உதயமாகவில்லை என எண்ணி, அல்லது சூரியன் மறைந்துவிட்டதெனக் கருதிச் செய்தால் அல்லது மறதியாகவோ, நிர்பந்த மாகவோ செய்தால் அவரது நோன்பு முறியாது. கழாச் செய்வதும் அவசிய மில்லை.

6. **மாதவிடாய், பிரசவ இரத்தம் வெளியாதல்:** ஒரு பெண் எப்போது மாதவிடாய், பிரசவ இரத்தத்தைக் காண்கிறாளோ அப்போதே அவளது நோன்பு முறிந்துவிடும். மட்டுமல்ல இந்த நேரத்தில் நோன்பு நோற்பது ஹராமாகும். ரமழானுக்குப் பின்னர் விடுபட்ட நோன்புகளைக் கழா செய்வது அவள் மீது கடமையாகும்.

**நோன்பை முறிக்காதவை**

1. குளித்தல், நீந்துதல், வெப்பத்தைத் தனித்துக்கொள்ள உடலைத் தண்ணீரால் நனைத்தல்.

2. அதிகாலை வந்துவிட்டதென உறுதியாகத் தெரியாத வரை உண்பது, குடிப்பது, உடலுறவு கொள்வது.

3. பகலில் பல்துலக்குதல். பகலில் எந்த நேரத்தில் பல் துலக்கினாலும் அதனால் நோன்புக்கு எந்தப் பாதகமும் ஏற்படாது. மட்டுமின்றி அது விரும்பத் தக்கதாகும்.

4. வாய் வழியாக உட்கொள்ளாத வகையில் வைத்தியம் செய்தல்.உணவாக அமையாத வகையில் (குளுக்கோஸ் அல்லாத) ஊசி போட்டுக் கொள்வதும், கண், மூக்கில் சொட்டு மருந்திட்டுக் கொள்வதும்- அதன் ருசியைத் தொண் டையில் பெற்றுக் கொண்டாலும் சரியே- கூடும். ஆஸ்மா போன்ற இளைப்புக்காக ஸ்ப்ரேயைப் பயன்படுத்துவதும் இவ்வாறு தான்.

உணவை நாவால் ருசி பார்ப்பதால் நோன்பு முறியாது. ஆயினும் வயிற்றின் உள் எதுவும் சென்று விடக்கூடாது. வாய் கொப்பளிப்பது, நாசிக்குத் தண்ணீர் செலுத்துவது பற்றி குற்றமில்லை. எனினும் தண்ணீர் வயிற்றினுள் சென்றுவிடாத

அளவுக்குப் பக்குவமாகச் செய்ய வேண்டும். இதுபோல வாசனைப் பொருட்களை உபயோகிப்பதும் அவற்றை நுகர்வதும் குற்றமில்லை.

5. மாதவிடாய் ஏற்பட்ட பெண்ணுக்கும், பிரசவித்த பெண்ணுக்கும் இரவிலேயே இரத்தம் நின்றுவிட்டால் அதிகாலை வரை குளிப்பதைப் பிற்படுத்திக் கொள்வதுகூடும். பின்னர் அவ்விருவரும் பஜ்ர் தொழுகைக்காகக் குளித்துக் கொள்ள வேண்டும். பெருந்துடக்கு ஏற்பட்டவரும் இவ்வாறே செய்து கொள்ள வேண்டும்.

**சில முக்கியக் குறிப்புகள்**

1. ஒரு கா∴பிர் ரமழான் பகலில் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டால் மீதமுள்ள நேரத்தில் உண்ணாமல் பருகாமல் இருப்பது கடமையாகும். அவர் அதை கழாச் செய்ய வேண்டியதில்லை.

2. ∴பர்ழான நோன்பிற்கு இரவில் பஜ்ரு நேரத்திற்கு முன்பாகவே நோன்பு நோற்பதாக முடிவு (நிய்யத்) செய்திட வேண்டும். ந∴பிலான நோன்பிற்கு பஜ்ருக்குப் பிறகு சூரியன் உயர்ந்த பின்னரும் நிய்யத் வைத்துக் கொள்லாம். ஆயினும் அவன் பஜ்ருக்குப் பிறகிலிருந்து ஏதும் உண்ணாமலிருந்திருக்க வேண்டும்.

3. நோன்பாளி நோன்பு திறக்கும் நேரத்தில் தனக்கு விருப்பமானவற்றைப் பிரார்த்திப்பது விரும்பத்தக்கது. ((إِنَّ لِلصَّائِمِ عِنْدَ فِطْرِهِ لَدَعْوَةً مَا تُرَدُّ)) (جه/ ١٧٥٣)

நோன்பாளி நோன்பு திறக்கும் நேரத்தில் கேட்கும் துஆ மறுக்கப்பட மாட்டாது என்பது நபிமொழி. (இப்னுமாஜா-1753) ذَهَبَ الظَّمَأُ وَابْتَلَّتِ الْعُرُوْقُ وَثَبَتِ الأَجْرُ إِنْ شَاءَ اللهُ

“தஹபல் ழமவு வப்தல்லதில் உரூக் வஸபதல் அஜ்ரு இன்ஷா அல்லாஹ்” என்ற துஆ ஹதீஸில் வந்துள்ளது. (ஆபூதாவூத்-2357)

(**பொருள்:** தாகம் தணிந்தது. நரம்புகள் நனைந்தன. அல்லாஹ் நாடினால் கூலியும் கிடைத்துவிடும்.) (குறிப்பு: இந்த துஆவை நோன்பு துறந்ததும் கூறவும்)

4. பகலின் இடையில் நோன்பு வந்துவிட்டதென அறிந்து கொண்டவர் எஞ்சியிருக்கும் நேரத்தில் உண்ணாமல் பருகாமல் இருப்பது கடமையாகும். பிறகு அதைக் கழாச் செய்ய வேண்டும்.

5. கழா நோன்புள்ளவர் பொறுப்பிலிருந்து விடுபடுவதற்காக விரைவாகக் கழாச் செய்வது விரும்பத்தக்கதாகும். தாமதப்படுத்தியும் கழாச் செய்யலாம். விடுபட்ட நோன்புகளைத் தொடராகவோ விட்டுவிட்டோ கழா செய்வதும் கூடும். ஆனால் மறு ரமழான் வரை தக்க காரணம் இன்றி பிற்படுத்தக் கூடாது.

## நோன்பின் சுன்னத்துகள்

1. **ஸஹர் செய்தல்:** عن أَنَسٍ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ تَسَحَّرُوا فَإِنَّ فِي السَّحُورِ بَرَكَةً (خ/ ١٩٢٣، / م١٠٩٥) நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஸஹர் செய்யுங்கள் ஏனெனில் ஸஹர் உணவில் பரக்கத் உள்ளது." (புகாரி-1923, முஸ்லிம்-1095)

ஸஹர் செய்வதை இரவின் கடைசி வரை தாமதப்படுத்துவது சுன்னத்தாகும்.

عَنْ سَهْلِ بْنِ سَعْدٍ أَنَّ رَسُولَ الله ﷺ قَالَ لَا يَزَالُ النَّاسُ بِخَيْرٍ مَا عَجَّلُوا الْفِطْرَ (خ/ ١٩٥٧، م/ ١٠٩٨)

"ஸஹர் உணவைத் தாமதப்படுத்தும் வரை மக்கள் நன்மையில் நீடித்திருப் பார்கள்" என நபி(ஸல்) கூறியுள்ளார்கள். நூல்: புகாரி(1957), முஸ்லிம்(1098)

2. **விரைந்து நோன்பு துறத்தல்:** சூரியன் மறைந்துவிட்டதென உறுதியாகத் தெரிந்துவிட்டால் விரைந்து நோன்பு துறந்திட வேண்டும். கனிந்த பேரீத்தம் பழம் மூலம் நோன்பு துறப்பது சுன்னத். அது கிடைக்காவிடில் சற்று காய்ந்த பேரீத்தம் பழம் மூலமும், அதுவும் கிடைக்காவிடில் தண்ணீர் மூலமும், இவற்றில் எவுதும் கிடைக்காதபோது எது கிடைக்கிறதோ அதன் மூலம் நோன்பு துறப்பது சுன்னத்.

3. **துஆச் செய்தல்:** நோன்பு நோற்றிருக்கும்போது குறிப்பாக நோன்பு துறக்கும் சமயம் துஆச் செய்ய வேண்டும்.

عن أبي هريرة قال : قال رسول الله ﷺ : « ثلاث دعوات مستجابات : دعوة الصائم ، ودعوة المسافر ، ودعوة المظلوم » (شعب الإيمان للبيهقي – ٣٤٤٢، ٧٢٠٦)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: "மூன்று துஆக்கள் ஏற்றுக் கொள்ளப்படும். நோன்பாளியின் துஆ, அநீதியிழைக்கப்பட்டவனின் துஆ, பயணியின் துஆ." (பைஹகி- ஷுஅபுல் ஈமான்: 3442, 7206)

நோன்பாளி ரமழான் இரவுத் தொழுகை தொழுவது அவசியமாகும்.

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ الله ﷺ قَالَ مَنْ قَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ (خ/ ٣٧،م/ ٧٥٩)

"எவர் ரமழான் இரவில் ஈமானுடனும் நற்கூலி கிடைக்கும் என்ற எண்ணத் துடனும் நின்று வணங்குகிறாரோ அவரது முன் சென்ற பாவங்கள் அவருக்கு மன்னிக்கப்படுகின்றன" என நபி(ஸல்)கூறியுள்ளார்கள்.(புகாரி-37,முஸ்லிம்-759)

தராவீஹ் தொழுகையை இமாமுடன் முழுமையாக நிறைவேற்றுவது அவசிய மாகும். ((مَنْ قَامَ مَعَ الْإِمَامِ حَتَّى يَنْصَرِفَ كُتِبَ لَهُ قِيَامُ لَيْلَةٍ)) (ت/ ٨٠٦، نس/ ١٣٤٧)

"இமாமுடன் அவர் தொழுகையை முடிக்கின்ற வரை யார் நின்று வணங்கு கிறாரோ அவருக்கு இரவு முழுவதும் நின்று வணங்கிய கூலி எழுதப்படுகிறது" என்பது நபிமொழி.(திர்மிதி-806, நஸயீ-1347)

அதுபோல ரமழானில் அதிகமதிகம் செய்ய வேண்டியவைகளில் தர்மமும் ஒன்றாகும். மேலும் ரமழானில் குர்ஆன் ஓதுவதில் மிகுந்த முயற்சி எடுத்துக் கொள்வதும் அவசியமாகும். ஏனெனில் ரமழான் மாதம் திருக்குர்ஆன் அருளப் பட்ட மாதமாகும். குர்ஆன் ஓதுபவருக்கு ஒவ்வொரு எழுத்துக்கும் ஒரு நன்மை உண்டு. ஒரு நன்மைக்கு கூலி அதுபோன்று பத்து மடங்காகும்.

**தராவீஹ் தொழுகை**

தராவீஹ் என்பது ரமழானில் ஜமாஅத்துடன் தொழும் இரவுத் தொழுகை யாகும். அதன் நேரம் இஷாத்தொழுகைக்குப் பிறகிலிருந்து அதிகாலை உதிக்கும் வரையாகும். ரமழான் இரவில் தொழும்படி நபி(ஸல்) அவர்கள் ஆர்வமூட்டியுள்ளார்கள். தராவீஹ் 11(8+3) ரக்அத்துகள் தொழுவதே நபிவழி. ஒவ்வொரு இரு ரக்அத்திலும் ஸலாம் கொடுக்க வேண்டும். 11 க்கு மேல் அதிகப்படுத்தினால் குற்றமில்லை.

தராவீஹ் தொழுகையில் சுன்னத்தான முறை நிதானமாகவும் தொழுகை யாளிகளுக்கு சிரமம் ஏற்படாத அளவு நீட்டியும் தொழுவதாகும். குழப்பம் ஏற்படாது என்றிருந்தால் தராவீஹ் தொழுகைக்கு பெண்கள் பள்ளிக்கு வருவதில் குற்றம் இல்லை. எனினும் தம் அலங்காரங்களை வெளிப்படுத்தாமல், நறுமணம் பூசாமல் பர்தாவுடன் வருவது நிபந்தனையாகும்.

**சுன்னத்தான நோன்புகள்**

பின்வரும் நாட்களில் நோன்பு நோற்பதை நபி(ஸல்) அவர்கள் ஆர்வமூட்டி யுள்ளார்கள்.

1. ஷவ்வால் மாத ஆறு நோன்புகள்.

عَنْ أَبِي أَيُّوبَ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَنْ صَامَ رَمَضَانَ ثُمَّ أَتْبَعَهُ سِتًّا مِنْ شَوَّالٍ كَانَ كَصِيَامِ الدَّهْرِ (م/ ١١٦٤)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: “யார் ரமழானில் நோன்பு நோற்று அதைத் தொடர்ந்து ஷவ்வாலில் ஆறு நோன்புகள் நோற்றாரோ அவர் காலமெல்லாம் நோன்பு நோற்றவர் போலாவார்.” (முஸ்லிம்-1164)

2. திங்கள், வியாழக் கிழமைகள் தோறும் நோன்பு நோற்பது.

3. ஒவ்வொரு மாதத்திலும் மூன்று நாட்கள். இம்மூன்றையும் “அய்யாமுல்பீழ்” எனும் வெள்ளை நாட்களில் நோற்றால் சிறப்பானதாகும். அவை 13, 14, 15 ஆகிய மூன்று நாட்களாகும்.

4. ஆஷூரா நாள். இது முஹர்ரம் 10 ம் நாளாகும். யூதர்களுக்கு மாற்றம் செய்வதற்காக அதற்கு முன்பு ஒரு நாள் அல்லது பின்பு ஒரு நாள் சேர்த்து நோற்பது சுன்னத். ((صِيَامُ يَوْمِ عَاشُورَاءَ أَحْتَسِبُ عَلَى اللهِ أَنْ يُكَفِّرَ السَّنَةَ الَّتِي قَبْلَهُ)) (م/ ١١٦٢)

“ஆஷூரா தினத்தில் நோன்பு வைப்பதால் அதற்கு முந்தைய வருடத்திற்குரிய பாவங்களை அல்லாஹ் மன்னித்தருள்வான் என்று எதிர்பார்க்கிறேன்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்-1162)

5. அர.்.பா நாள். இது துல்ஹஜ் மாதம் 9 ஆம் நாள் ஆகும்.

((صِيَامُ يَوْمِ عَرَفَةَ أَحْتَسِبُ عَلَى اللهِ أَنْ يُكَفِّرَ السَّنَةَ الَّتِي قَبْلَهُ وَالسَّنَةَ الَّتِي بَعْدَهُ)) (م/ ١١٦٢)

“அர.்.பா நாளில் நோன்பு நோற்பதால் அதற்கு முந்தைய மற்றும் பிந்தைய வருடத்திற்குரிய பாவங்களை அல்லாஹ் மன்னிப்பான் என்று எதிர்பார்க்கிறேன்” என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்-1162)

**நோன்பு தடைசெய்யப்பட்ட நாட்கள்**

1. நோன்புப் பெருநாள், ஹஜ்ஜுப் பெருநாள் என இரு பெருநாட்கள்.

2. தஷ்ரீக்குடைய மூன்று நாட்கள். அவை துல்ஹஜ் மாதத்தின் 11, 12, 13 ஆகிய நாட்களாகும். ஹஜ்ஜுக் கிரான், ஹஜ்ஜுத் தமத்து.்.செய்பவர்களுக்கு பலிப்பிராணிகள் கிடைக்கவில்லையெனில் அவர்கள் இதிலிருந்து விதிவிலக்குப் பெறுவர். (காரணம் அந்நாட்களில் பரிகார நோன்புகள் நோற்க வேண்டியுள்ளது.)

3. மாதவிடாய், பிரசவ இரத்தம் வரக்கூடிய நாட்கள்.

4. ஒரு பெண் தனது கணவன் ஊரில் இருக்கும் சமயம் அவன் அனுமதி யின்றி நோன்பு நோற்பது கூடாது. ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்:

عَنْ أَبِيْ هُرَيْرَةَ يَقُولُ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا تَصُومُ الْمَرْأَةُ وَبَعْلُهَا شَاهِدٌ إِلَّا بِإِذْنِهِ غَيْرَ رَمَضَانَ

(خ/ ٥١٩٢، م/ ١٠٢٦، د/ ٢٤٥٨) واللفظ له

“ஒரு பெண் தனது கணவன் ஊரிலிருக்கும் சமயம் அவன் அனுமதியின்றி (ரமழான் அல்லாத காலங்களில்) நோன்பு நோற்பது கூடாது.” (புகாரி-5192, முஸ்லிம்-1026)

# أحكام الحج
# ஹஜ்ஜின் சட்டங்கள்

**ஹஜ்ஜின் சட்ட நிலையும், சிறப்பும்**

முஸ்லிமான ஆண், பெண் அனைவர் மீதும் வாழ்நாளில் ஒரு முறை ஹஜ் செய்வது கடமையாகும். இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில் இது ஐந்தாவது கடமையாகும். [آل عمران:٩٧] ﴿وَلِلهِ عَلَى النَّاسِ حِجُّ البَيْتِ مَنِ اسْتَطَاعَ إِلَيْهِ سَبِيلًا﴾

அல்லாஹ் கூறுகிறான்: "அந்த ஆலயத்தில் அல்லாஹ்வுக்காக ஹஜ் செய்வது சென்று வர சக்தி பெற்ற மனிதர்களுக்குக் கடமையாகும். (3:97)

عَنْ ابْنِ عُمَرَ قَالَ قَالَ رَسُولُ الله ﷺ بُنِيَ الْإِسْلَامُ عَلَى خَمْسٍ شَهَادَةِ أَنْ لَا إِلَهَ إِلَّا اللهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ الله وَإِقَامِ الصَّلَاةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالْحَجِّ وَصَوْمِ رَمَضَانَ (خ/ ٨، م/ ١٦)

"இஸ்லாம் ஐந்து அடிப்படைக் கடமைகள் மீது நிறுவப்பட்டுள்ளது. அவை, வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்றும் முஹம்மத் நபி அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவார்கள் என்றும் உறுதியாக நம்புவது, தொழுகையை நிலை நாட்டுவது,ஸகாத் கொடுப்பது,ஹஜ் செய்வது ரமழானில் நோன்பு நோற்பது ஆகியனவாகும்" என நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள். (புகாரி-8 முஸ்லிம்-16)

ஹஜ், இறைநெருக்கத்தை ஏற்படுத்தக்கூடிய சிறந்த செயல்களில் ஒன்றாகும்.

قَالَ رَسُولُ الله ﷺ مَنْ حَجَّ هَذَا الْبَيْتَ فَلَمْ يَرْفُثْ وَلَمْ يَفْسُقْ رَجَعَ كَمَا وَلَدَتْهُ أُمُّهُ (خ/ ١٨١٩، م/ ١٣٥٠)

"இச்சைகளைத் தூண்டக்கூடிய சொல், செயல் மற்றும் தீவினை செய்யாமல் யார் அல்லாஹ்வுக்காக ஹஜ் செய்கின்றாரோ அவர்(பாவங்கள் மன்னிக்கப்பட்டு) அன்று பிறந்த பாலகன் போல் திரும்புவார்" என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி-1819, முஸ்லிம்-1350)

**ஹஜ்ஜின் நிபந்தனைகள்**

பருவமடைந்த, புத்தி சீராக உள்ள, சக்தி பெற்ற அனைத்து முஸ்லிம்கள் மீதும் ஹஜ் கடமையாகும். சக்தி பெறுவது என்பது, அங்கு சென்று வருவதற்கு உணவு, தண்ணீர், உடை உட்பட போக்குவரத்துச் செலவுக்குச் சக்தி பெறுவ

தாகும். இச்செலவு அவர்கள் யாருக்குச் செலவு செய்யக் கடமைப்பட்டுள் ளார்களோ அவர்களுக்குப் போக மேலதிகமாக இருக்க வேண்டும். பாதை அச்சமற்றிருப்பதும், ஹஜ்ஜை நிறைவேற்றுவதற்குத் தடையாகவுள்ள நோய் ஏதும் இல்லாத வகையில் உடல் ஆரோக்கியமாக இருப்பதும் சக்தி பெறுவது என்பதில் அடங்கும். பெண்களைப் பொருத்தவரை அவர்களுக்கு மேற்கூறப்பட்ட நிபந்தனைகளுடன் கூடுதலான நிபந்தனைகளும் உள்ளன. அதாவது தக்க ஆண் துணை அவர்களுடன் இருக்க வேண்டும். அது அவர்களுடைய கணவராக இருந்தாலும் சரி. அல்லது அவர்கள் திருமணம் செய்வதற்குத் தடைசெய்யப்பட்ட ஒருவராக இருந்தாலும் சரி. அவள் இத்தா இருப்பவளாக இருந்தால் ஹஜ்ஜுக்குச் செல்லக் கூடாது. காரணம் இத்தா இருக்கும் பெண்கள் தம் வீடுகளிலிருந்து வெளியே செல்வதை இறைவன் தடுத்துள்ளான். எனவே யாருக்கேனும் இத்தடைகளில் ஒன்று இருக்குமானால் அவர் மீது ஹஜ் கடமையாகாது.

**ஹஜ்ஜின் ஒழுக்கங்கள்**

1. ஹஜ் செய்ய விரும்புபவர் தான் ஹஜ்ஜுக்குப் பயணமாகும் முன்னர் தனக்குத் தேவையான ஹஜ்ஜின் சட்டங்களைப் படித்து அல்லது கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.

2. நன்மைக்கு உதவியாக இருக்கக்கூடிய நண்பர்களோடு செல்வதற்கு அக்கரை காட்ட வேண்டும். அவர்களுடன் ஒரு மார்க்க அறிஞரோ அல்லது சிறந்த மாணவரோ இருப்பது சிறப்பு.

3. தன் ஹஜ்ஜின் மூலம் அல்லாஹ்வின் உவப்பையும் அவனது நெருக் கத்தையும் நாட வேண்டும்.

4. பயனற்ற பேச்சுக்களை விட்டும் நாவைப் பாதுகாக்க வேண்டும்.

5. அதிகம் திக்ர்,துஆ செய்ய வேண்டும்.

6. பிறருக்கு தொல்லை தரக் கூடாது.

7. பெண் பர்தா அணிந்து தன்னை மூடி மறைத்துக் கொள்வதற்கும் ஆண்களின் நெருக்கடியை விட்டு தூரமாவதற்கும் ஆர்வம் காட்ட வேண்டும்.

8. ஹஜ் செய்பவர், தாம் உல்லாசப் பயணத்தில் அல்லாமல் இறைவணக் கத்தில் ஈடுபட்டிருப்பதை மனதில் கொள்ள வேண்டும். ஏனெனில் சில ஹாஜிகள்- அல்லாஹ் அவர்களுக்கு நேர்வழி காட்டுவானாக!- ஹஜ்ஜை பொழுது போக் கிற்கும் போட்டோ எடுப்பதற்கும் அரிய சந்தர்ப்பமாக ஆக்கிக் கொள்கின்றனர்.

**இஹ்ராம்**

இஹ்ராம் என்பது ஹஜ்ஜுடைய கிரியைகளில் நுழைவது ஆகும். ஹஜ் அல்லது உம்ரா செய்ய விரும்புகிறவர் இஹ்ராம் செய்வது அவசியமாகும்.

ஹஜ் அல்லது உம்ரா செய்பவர் மக்காவிற்கு வெளியே நபி(ஸல்) அவர்கள் நிர்ணயம் செய்த எல்லைகளில் ஏதேனும் ஒரு எல்லை வழியாக வருபவராக இருந்தால் இஹ்ராம் செய்வது கட்டாயமாகும்.

**எல்லைகள்**

1. **துல்ஹுலை∴பா:** இது மதீனாவுக்கு அருகில் உள்ள ஒரு சிறிய கிராமம். தற்போது இதற்கு "அப்யார் அலி" எனக் கூறப்படுகிறது. இது மதீனாவாசி களுக்கு உரிய எல்லையாகும்.

2. **அல்ஜுஹ்∴பா:** இது ராபி∴க் எனும் ஊருக்கு அருகில் உள்ள ஒருகிராமம். தற்போது மக்கள் ராபி∴கிலிருந்தே இஹ்ராம் செய்து கொள்கிறார்கள். இது சிரியாவாசிகளின் எல்லை.

3. **கர்னுல் மனாஸில்:** (ஸைலுல் கபீர்) இது தாயி∴புக்குச் சமீபமான ஒரு இடம். இது நஜ்துவாசிகளின் எல்லையாகும்.

4. **யலம்லம்:** இது மக்காவிலிருந்து சுமார் 70 கி.மீ.தூரத்திலுள்ளது. இது யமன்வாசிகளின் எல்லையாகும்.

5. **தாதுல் இர்க்:** இது இராக்வாசிகளின் எல்லையாகும்.

இந்த ஐந்து இடங்களும் மேற்கூறப்பட்ட ஊர்வாசிகளுக்கும் இவ்விடங்கள் வழியாக வருகின்றவர்களுக்கும் எல்லைகளாகும். இந்த எல்லைளுக்கு உள்ளே உள்ளவர்களும் ஹரமிலுள்ளவர்களும் அவர்கள் இருக்கின்ற இடங்களிலிருந்தே இஹ்ராம் செய்துகொள்ள வேண்டும்.

**இஹ்ராமின் சுன்னத்துகள்**

இஹ்ராமுக்கு முன் செய்ய வேண்டிய சுன்னத்தான காரியங்கள்:

1. நகங்களை வெட்டுவது, அக்குள் முடியைப் பிடுங்குவது அல்லது மழிப்பது, மீசையைக் கத்தரிப்பது, மர்மஸ்தானத்தின் முடியை மழிப்பது, குளிப்பது, மணம் பூசிக்கொள்வது. ஆடைகளில் அல்லாமல் உடம்புக்கு மட்டும் மணம் பூசிக் கொள்ள வேண்டும்.

2. தையலாடைகளைக் களைவது, வேட்டி உடுத்தி துண்டைப் போர்த்திக் கொள்வது, பெண் தன்னை மூடி மறைத்துக்கொள்வதில் கவனம் செலுத்து வதுடன் தான் விரும்பிய ஆடைகளை அணிந்து கொள்ளலாம். அழகையும் அலங்காரங்களையும் வெளிப்படுத்தக்கூடாது. அந்நிய ஆண்கள் வரும்போது முகத்தையும் முன் கைகளையும் மறைத்துக் கொள்ள வேண்டும். கையுறை மற்றும் முக மூடி அணிவதை தவிர்த்துக்கொள்ள வேண்டும்.

3. பள்ளிக்குச் சென்று அந்நேரம் தொழுகை நேரமாக இருந்தால் ஜமாஅத் துடன் தொழுவது, அல்லது உளுவின் சுன்னத்தான இரண்டு ரக்அத்தைத் தொழுவது. அதன் பின்னர் இஹ்ராம் செய்வது.

**ஹஜ்ஜின் வகைகள்**

ஹஜ் மூன்று வகைப்படும்.

**1. ஹஜ்ஜ த் தமத்து**

இது உம்ராவுக்கு மட்டும் இஹ்ராம் செய்தல். பின்னர் ஹஜ்ஜுடைய நேரம் வந்தால் மக்காவில், தான் தங்கியிருக்கும் இடத்திலிருந்து ஹஜ்ஜுக்காக இஹ்ராம் செய்வது. இத்தகைய ஹஜ்ஜை செய்பவர் எல்லையில் “லப்பைக் உம்ரத்தன் முதமத்திஅன் பிஹா இலல் ஹஜ்” எனக் கூறிக் கொள்ள வேண்டும்.

(பொருள்: இறைவா! உம்ராவை ஹஜ்ஜுடன் சேர்த்து நிய்யத் செய்தவனாக உன்னிடம் வந்துவிட்டேன்) لَبَّيْكَ عُمْرَةً مُتَمَتِّعاً بِهاَ إِلَى الْحَجِّ

தமத்து. தான் ஹஜ் வகைகளில் சிறந்ததாகும். குறிப்பாக ஹஜ் தொடங்கு வதற்கு வெகு நாட்களுக்கு முன்பே மக்கா வருபவர்களுக்கு இதுவே மிகச் சிறந்தது. பின்னர் மக்காவில் அவர் இருக்குமிடத்திலிருந்து ஹஜ்ஜுக்காக மீண்டும் ஒரு முறை இஹ்ராம் செய்ய வேண்டும். அப்போது “லப்பைக் ஹஜ்ஜன்” لَبَّيْكَ حَجًّا என்று கூறவேண்டும். (பொருள்: இறைவா! ஹஜ்ஜை நிய்யத் செய்து உன்னிடம் வந்துவிட்டேன்) இவ்வகை ஹஜ் செய்பவர் குர்பானி கொடுப்பது கட்டாயமாகும். ஒருவருக்கு ஒரு ஆடு அல்லது ஏழு பேர் சேர்ந்து ஒரு மாடு அல்லது ஒரு ஒட்டகம் கொடுக்கலாம்.

**2. ஹஜ்ஜ ல் கிரான்:**

இது ஹஜ், உம்ரா இரண்டுக்கும் சேர்த்து இஹ்ராம் செய்வதாகும். இவர் “லப்பைக் உம்ரதன் வஹஜ்ஜன்” لَبَّيْكَ عُمْرَةً وَحَجًّا எனக் கூற வேண்டும். (பொருள்: ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்து நிய்யத் செய்தவனாக இறைவா! உன்னிடம் வந்து விட்டேன்.)

இவர் ஆரம்பமாக உம்ராச் செய்துவிட்டு பின்னர் அந்த இஹ்ராமுடனேயே துல்ஹஜ் 10 ஆம் நாள் வரை இருக்க வேண்டும்.

இது பெரும்பாலும் ஹஜ்ஜுடைய நேரத்திற்கு முன்னர் உம்ராச் செய்து முடித்து பின்னர் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டிக் கொள்ளப் போதாத குறுகிய நேரத்தில் வருபவர்களுக்காகும். இந்த ஹஜ்ஜுக்கும் குர்பானி அவசியம்.

**3. ஹஜ்ஜ ல் இஃப்ராத்:**

இது ஹஜ்ஜுக்காக மட்டும் நிய்யத் செய்வதாகும். இவர் எல்லையிலிருந்து இஹ்ராம் செய்ய வேண்டும். "லப்பைக் ஹஜ்ஜன்" எனக் கூறவேண்டும். இவருக்கு குர்பானி கடமையல்ல.

விமானத்தில் பயணம் செய்பவராக இருந்தால் எல்லையில் இஹ்ராம் (நிய்யத்) செய்வது அவசியம். எல்லையை அறிந்து கொள்வது சிரமமாக இருந்தால் அதற்கு முன்னர் போதுமான கால அளவில் இஹ்ராம் செய்ய வேண்டும். எல்லையில் செய்ய வேண்டிய சுத்தம், மணம் பூசுதல், நகங்கள் வெட்டுதல், இஹ்ராம் ஆடை அணிதல் ஆகியவற்றை விரும்பினால் விமானத்தில் ஏறுவதற்கு முன்போ அல்லது விமானத்தில் வைத்தோ செய்யலாம். பின்பு எல்லையை அடைவதற்கு முன் அல்லது அதை அடைந்து கொள்ளும் நேரத்தில் இஹ்ராம் (நிய்யத்) செய்து கொள்ள வேண்டும்.

**இஹ்ராம் முறை**

1. ஹஜ்ஜுத் தமத்து.ஃ. செய்ய விரும்புகிறவர் "லப்பைக் உம்ரதன் முதமத் திஅன் பிஹா இலல் ஹஜ்" என்று கூற வேண்டும்.
2. ஹஜ் கிரான் செய்பவர் "லப்பைக் உம்ரதன் வஹஜ்ஜன்" எனக் கூற வேண்டும்.
3. இ.ஃ.ப்ராத் செய்பவர் "லப்பைக் ஹஜ்ஜன்" எனக் கூற வேண்டும்.

இஹ்ராம் செய்த பின் தல்பியா சொல்வதும் அதை இஹ்ராம் செய்ததி லிருந்து தவா.ஃ.பை ஆரம்பிக்கும் வரை திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டி ருப்பதும் சுன்னத்தாகும். தல்பியா வருமாறு:

لَبَّيْكَ اَللّٰهُمَّ لَبَّيْكَ لَبَّيْكَ لاَشَرِيْكَ لَكَ لَبَّيْكَ إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكُ لَكَ لاَشَرِيْكَ لَكَ

லப்பைக் அல்லாஹும்ம லப்பைக், லப்பைக் லாஷரீக்க லக லப்பைக், இன்னல் ஹம்த வன்நி.ஃ.மத்த லக வல் முல்க், லாஷரீக்க லக்.

(பொருள்: உன்னிடம் வந்துவிட்டேன். இறைவா! உன்னிடமே வந்து விட்டேன். உன்னிடம் வந்துவிட்டேன். உனக்கு இணை இல்லை. உன்னிடமே வந்து விட்டேன். புகழும் அருட்பாக்கியங்களும் ஆட்சியும் உனக்கேயுரியன. உனக்கு இணை எதுவுமில்லை.)

**இஹ்ராமில் தடுக்கப்பட்டவை**

இஹ்ராம் செய்தவருக்கு, அதற்கு முன் ஆகுமானவையாக இருந்த சில விஷயங்கள் ஹராமாகிவிடும். அவை வருமாறு:

1. தலை முடி மற்றும் உடம்பின் ஏனைய பாகங்களிலுள்ள முடிகளை நீக்குவது. எனினும் தேவையின் நிமித்தம் இலேசாகத் தலையைச் சொரிவதால் (முடி விழுவதில்) குற்றமில்லை.

2. நகங்களை வெட்டுதல். எனினும் நகம் துண்டாகி விட்டால் அல்லது அது அவனுக்குத் தொல்லையாக இருந்தால் அதை நீக்குவது குற்றமல்ல.

3. வாசனைத் திரவியங்கள் மற்றும் வாசனைச் சோப்பு உபயோகிப்பது.

4. உடலுறவும் அதற்குத் தூண்டுதலாக உள்ள செயல்களும். திருமணம் முடித்தல் இச்சையுடன் பார்த்தல், அணைத்தல், முத்தமிடுதல் போன்றவை!

5. கையுறை அணிதல்.

6. பிராணிகளை வேட்டையாடுதல்.

இவ்வனைத்தும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஹராமானவையாகும். ஆண்களுக்கு அதிகப்படியாக இன்னும் சில ஹராமாகின்றன.

அ. தையல் ஆடை அணிவது. எனினும் இஹ்ராமிலுள்ளவன் பெல்ட், கண்ணாடி, வாட்ச் போன்ற தேவையான பொருட்கள் அணிவது கூடும்.

ஆ. தலையை ஒட்டினாற்போல் ஏதேனு மொன்றைக் கொண்டு தலையை மறைத்தல். தலையோடு ஒட்டாமல் சற்று உயரமாக வைத்து தலையை மறைத்தால் குற்றமில்லை. உதாரணமாக குடை, வாகனம், கூடாரம் போன்று!

இ. காலுறை அணிவது. செருப்பு இல்லையெனில் காலுறை அணியலாம்.

தடுக்கப்பட்ட இவற்றில் ஒன்றை ஒருவர் செய்துவிட்டால் அவனுக்கு மூன்று நிலைகள் உள்ளன:

1. தக்க காரணமின்றிச் செய்பவன். இவன் பாவியாவான். இவனுக்கு அபராதம் உண்டு.

2. தேவைக்காகச் செய்பவன். இவன் பாவியாக மாட்டான். இவனுக்கும் அபராதமுண்டு.

3. தக்க காரணத்துடன் செய்பவன். அதாவது அறியாமலோ,மறந்தோ,நிர்ப்பந் தமாகவோ செய்வது. இத்தகையவனுக்கு குற்றமுமில்லை, அபராதமுமில்லை.

**தவாஃப் -வலம் வருதல்**

மஸ்ஜிதுல் ஹராமில் (கஅபா பள்ளி) நுழையும் போது வலது காலை வைத்து بِسْمِ اللهِ وَالصَّلاَةُ وَالسَّلاَمُ عَلَى رَسُوْلِ اللهِ اَللَّهُمَّ اغْفِرْ لِيْ ذُنُوْبِيْ وَافْتَحْ لِيْ أَبْوَابَ رَحْمَتِكَ

“பிஸ்மில்லாஹி, வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹ், அல்லாஹும் மக்ஃபிர்லீ துநூபி வஃப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக்க” என்று கூறுவது சுன்னதாகும். (பொருள்: அல்லாஹ்வின் பெயர் கூறி நுழைகிறேன்.

கருணையும் ஈடேற்றமும் அல்லாஹ்வின் தூதர் மீது உண்டாவதாக! இறைவா! எனது பாவங்களை மன்னித்து, உன் அருள் வாயில்களை எனக்குத் திறந்திடு.)

இந்த துஆ எல்லாப் பள்ளிகளுக்கும் பொதுவானது. பின்பு கஅபாவை தவா∴ப் செய்வதற்காக அதை முன்னோக்க வேண்டும். தவா∴ப் என்பது அல்லாஹ்வுக்கு வணக்கம் செய்யும் எண்ணத்தில் கஅபாவை இடப்புறமாக ஏழு முறை வலம் வருவதாகும். ஹஜருல் அஸ்வதிலிருந்து ஆரம்பித்து ஹஜருல் அஸ்வதில் முடிக்க வேண்டும். தவா∴ப் செய்யும்போது உளூவுடன் இருக்க வேண்டும்.

**தவா∴ப் செய்யும் முறை**

1. ஹஜருல் அஸ்வதின் பக்கம் சென்று அதை தனது வலது கையால் தொட்டு பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர் எனக் கூற வேண்டும். முடிந்தால் அக்கல்லை முத்தமிட வேண்டும். இயல வில்லையெனில் கல்லைத் தொட்ட தனது கையை முத்தமிட்டுக்கொள்ள வேண்டும். ஹஜருல் அஸ்வதைத் தொடவும் முடிய வில்லையெனில் அதை முன்னோக்கி அல்லாஹு அக்பர் எனக் கூறி தனது கை கொண்டு அதன் பால் சுட்டிக்காட்ட வேண்டும். தனது கையை முத்தமிடக் கூடாது.

பின்பு கஅபதுல்லாவை தனது இடப் புறமாக்கி தவா∴பைத் தொடங்க வேண்டும். தான் விரும்பிய (திக்ரு,) துஆக்களைக் கேட்கலாம். அல்லது தனக்குத் தெரிந்த குர்ஆன் வசனங்களை ஓதலாம். ஹாஜி தன் மொழியில் தனக்கும் தான் விரும்புபவருக்கும் துஆச் செய்யலாம். இங்கு துஆ செய்வதற்கென குறிப்பான துஆக்கள் ஏதும் இல்லை.

2. ருக்னுல் யமானியை அடைந்து விட்டால், இயன்றால் அதைத் தொட்டு பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர் எனக் கூற வேண்டும். தனது கையை முத்தமிட கூடாது. இயலவில்லையெனில் தொடர்ந்து நடந்து கொண்டிருக்க வேண்டும். அதன் பக்கம் கையால் சுட்டிக்காட்டவோ தக்பீர் சொல்லவோ கூடாது. ருக்னுல் யமானிக்கும் ஹஜருல் அஸ்வதுக்கும் இடையில் "ரப்பனா ஆத்தினா ∴பித்துன்யா ஹஸனதன் வ∴பில் ஆகிரத்தி ஹஸனதன் வகினா அதாபன் நார்" எனக் கூற வேண்டும். (பொருள்: எங்கள் இறைவா! எங்களுக்கு இவ்வுலகிலும் மறுவுலகிலும் நன்மையைத் தருவாயாக! நரக வேதனையிலிருந்து எங்களைக் காப்பாயாக! (2:201) رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ

3. ஹஜருல் அஸ்வதை அடைந்துவிட்டால் வலது கையால் தொட வேண்டும். முடியவில்லையானால் அல்லாஹு அக்பர் எனக் கூறி தனது கையால் சுட்டிக்

காட்ட வேண்டும். இவ்வாறு செய்வதன் மூலம் தவா.ஃ.பின் ஏழு சுற்றுக்களில் ஒரு சுற்று முடிவடைந்து விடுகிறது. மீதமுள்ள சுற்றுக்களைப் பூர்த்தி செய்வதற்கு,

4. தொடர்ந்து வலம் வந்து கொண்டிருக்க வேண்டும். ஏழு சுற்றுக்களைப் பூர்த்தியாக்கும் வரை முதல் சுற்றில் செய்தது போலவே செய்ய வேண்டும். ஹஜருல் அஸ்வதின் பக்கம் செல்லும் போதெல்லாம் தக்பீர் சொல்ல வேண்டும். இதுபோன்றே ஏழாவது சுற்றுக்குப் பின்னரும் தக்பீர் சொல்ல வேண்டும்.

முதல் மூன்று சுற்றுக்களில் தொங் கோட்டம் ஓடுவது சுன்னத்தாகும். மீத முள்ள நான்கு சுற்றுக்களில் நடந்தே செல்ல வேண்டும். தொங்கோட்டம் என்பது கால் எட்டுகளை சுருக்கி வைத்து சற்று வேகமாக நடப்பதாகும். மேலும் இந்த தவா.ஃ.பில் மேல் துண்டின் நடுப்பகுதியை வலது அக்குளுக்குக் கீழ் வழியாகக் கொண்டு வந்து இரு ஓரங்களையும் இடது தோள் புஜத்தின் மீது போட்டுக் கொள்ள வேண்டும். வலது தோள் புஜம் மட்டும் திறந்திருக்க வேண்டும். இதுவும் சுன்னத்தாகும்.

தொங்கோட்டமும் துண்டை இவ்வாறு போட்டுக் கொள்வதும் உம்ரா அல்லது ஹஜ் செய்பவர் மக்காவுக்கு வரும்போது செய்யக்கூடிய முதல் தவா.ஃ.பில் மட்டும் தான். மேலும் இவ்விரண்டும் ஆண்களுக்கு மட்டும் தான்.

**தவா.ஃ.புக்குப் பின்னர்**

தவா.ஃ.புக்குப் பின்னர் மகாம் இப்றாஹீமுக்குப் பின்னால்-தனக்கும் கஅபா வுக்கும் இடையே மகாம் இருக்கும் விதமாக நின்று இரண்டு ரக்அத்துகள் தொழுவது சுன்னத்தாகும். தொழுவதற்கு முன் துண்டை இரண்டு தோள் புஜங்கள் மீதும் நெஞ்சின் மீதும் போட்டுக் கொள்ள வேண்டும்.

அப்படித் தொழும்போது முதல் ரக்அத்தில் சூரத்துல் .ஃ.பாத்திஹாவும் குல்யா அய்யுஹல் கா.ஃ.பிரூனும், இரண்டாவது ரக்அத்தில் சூரத்துல் .ஃ.பாத்திஹாவும் குல் ஹுவல்லாஹு அஹதும் ஓத வேண்டும். கடுமையான நெருக்கடியினால் மகாம் இப்றாஹீமுக்குப் பின்னால் நின்று தொழ முடியவில்லையெனில் பள்ளியின் எந்த இடத்தில் வேண்டுமானாலும் நின்று தொழுது கொள்ளலாம். பிறகு ஸம் ஸம் தண்ணீரை வயிறு நிரம்ப- அதாவது அதிகமாகக் குடிப்பது சுன்னத்தாகும்.

**ஸயீ செய்தல்**

பின்பு ஸயீ செய்யுமிடத்திற்குச் சென்று ஸ.ஃ.பாவின் பக்கமாகச் செல்ல வேண்டும். அதை நெருங்கும்போது إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَائِرِ الله "இன்னஸ் ஸ.ஃ.பா வல் மர்வத மின் ஷஆயி ரில்லாஹ்" என ஓத வேண்டும். (பொருள்: ஸ.ஃ.பா,

மர்வா (எனும் இரு குன்றுகள்) அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் உள்ளவையாகும். 2:158)

கஅபாவைக் காணுமளவு ஸ.்.பாவில் ஏற வேண்டும். பின்பு கஅபாவை முன்னோக்கி இரு கைகளையும் உயர்த்தி, அல்லாஹ்வைப் புகழ்ந்து விரும்பிய துஆவைக் கேட்க வேண்டும். எவ்வாறெனில்

لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَاللهُ أَكْبَرُ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ يُحْيِي وَيُمِيْتُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ أَنْجَزَ وَعْدَهُ وَنَصَرَ عَبْدَهُ وَهَزَمَ الأَحْزَابَ وَحْدَهُ

“லாஇலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்கலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து யுஹ்யீ வயுமீத்து வஹுவ அலா குல்லி ஷையின் கதீர். லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தா, அன்ஜஸ வ.்.தா, வநஸர அப்தா, வஹஸ மல் அஹ்ஸாப வஹ்தா”

என்ற திக்ரை முதலில் ஓதி, நீண்ட நேரம் துஆச் செய்ய வேண்டும். பின்பு மீண்டும் அந்த திக்ரை ஓதி நீண்ட நேரம் துஆ செய்ய வேண்டும். பின்பு மீண்டும் அந்த திக்ரை ஓதி பின்பு ஸ.்.பாவிலிருந்து இறங்கி மர்வாவை நோக்கி நடக்க வேண்டும்.

(திக்ரின் பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன் அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சி, அதிகாரம் அவனுக்குரியதே! புகழ் அனைத்தும் அவனுக்கே! உயிர்ப்பிப்பவனும் மரணிக்கச் செய்பவனும் அவனே! அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன். தன் வாக்குறுதியை நிறைவேற்றியவன். தன் அடியாருக்கு உதவியவன். எதிரிப் படையினரைத் தோல்வியுறச் செய்தவன் அவன் மட்டுமே!)

ஸ.்.பா மர்வாவுக்கு இடையிலுள்ள பச்சைத் தூணை அடைந்தால் மறு பச்சைத் தூணை அடையும் வரை முடிந்த அளவு விரைந்து (தொங்கோட்டமாகச்) செல்வது சுன்னத்தாகும். இப்படிச் செய்யும்போது யாருக்கும் தொந்தரவு கொடுக்கக்கூடாது என்பது நிபந்தனை ஆகும். விரைந்து செல்வது ஆண்களுக்கு மட்டுமே பெண்களுக்கல்ல.

மர்வாவை அடைந்ததும் அதில் ஏறி கிப்லாவை முன்னோக்கி கைகளை உயர்த்தி ஸ.்.பாவில் செய்யததுபோல (திக்ரு,துஆ) செய்ய வேண்டும். இவ்வாறு செய்து விட்டால் ஸயீக்குரிய ஏழு சுற்றுக்களில் ஒன்றை முடித்து விட்டார். திக்ரு, துஆவுக்குப் பின்னர் மர்வாவிலிருந்து ஸ.்.பாவை நோக்கிச் செல்ல வேண்டும். இரண்டு பச்சைத் தூண்களுக்கிடையே தொங்கோட்டம் ஓடவேண்டும். ஸ.்.பாவை

நெருங்கும்போது “இன்னஸ் ஸ.ஃ.பா வல் மர்வத மின் ஷஆயி ரில்லாஹ்” என்று கூறக்கூடாது. முதன் முதலில் ஸ.ஃ.பாவை நெருங்கும்போது மட்டும் தான் அவ்வாறு கூற வேண்டும். இது இரண்டாவது சுற்றாகும்.

ஸ.ஃ.பாவில் முன்னர் செய்ததுபோலவே செய்து கொள்ள வேண்டும். ஸயீயின் இடையில் அதிகமதிகம் துஆ (திக்ரு, குர்ஆன் ஓதுதல் என)செய்து கொள்வது சுன்னத்தாகும். இவ்வாறு ஏழு சுற்றுக்களையும் செய்து முடிக்க வேண்டும். ஏழாவது சுற்று மர்வாவில் முடியும்.

ஒருவர் ஹஜ்ஜுத் தமத்து.ஃ. செய்பவராக இருந்தால் ஸயீக்குப் பின்னர் தலை முடியைக் கத்தரித்து, உம்ராவை முடித்துக் கொள்ள வேண்டும். பின்பு சாதாரண ஆடைகள் அணிந்து இஹ்ராமி லிருந்து விடுபட வேண்டும். துல்ஹஜ் 8-ஆம் நாள் வந்துவிட்டால் அவர் இருக்குமிடத்திலிருந்தே ளுஹர் தொழுகைக்கு சிறிது முன் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் செய்ய வேண்டும். உம்ராவின் இஹ்ராமில் செய்த அனைத்தையும் செய்து கொள்ள வேண்டும். பின்னர் இஹ்ராமை நிய்யத் செய்து “லப்பைக் ஹஜ்ஜன்” எனக் கூறி, தல்பியா சொல்ல வேண்டும். பின்பு மினா சென்று அங்கு ளுஹர், அஸர், மக்ரிப், இஷா, ஃபஜ்ர் ஆகிய தொழுகைகளை சுருக்கித் தொழ வேண்டும்.

### துல்ஹஜ் 8-ஆம் நாள்

ஹாஜி மினா சென்று அங்கு ளுஹர், அஸர், மக்ரிப், இஷா, ஃபஜ்ர் ஆகிய தொழுகைகளைத் தொழ வேண்டும். இவற்றில் 4 ரக்அத் தொழுகைகளை 2 ரக்அத்தாக சுருக்கித் தொழ வேண்டும்.

### 9-ஆம் நாள் (அரஃபா நாள்)

இந்நாளில் பின் வருவமாறு செயல்படுவது ஷரீஅத்தின் கட்டளையாகும்.

1. சூரியன் உதித்த பின் ஹாஜி அர.ஃ.பா வுக்குச் சென்று அங்கு சூரியன் மறையும் வரை தங்க வேண்டும். சூரியன் உச்சி சாய்ந்து விட்டால் ளுஹரையும் அஸரையும் சேர்த்து ஜம்வு கஸராக தொழ வேண்டும். தொழுகைக்குப் பின்னர் திக்ர்,துஆ, தல்பியாவில் ஈடுபட வேண்டும். அல்லாஹ்வுக்குப் பணிந்து, அதிக மதிகம் துஆ செய்வது சுன்னத்தாகும். தனக்காகவும் பிற முஸ்லிம்களுக்காகவும் துஆ செய்ய வேண்டும். தான் விரும்பியதையெல்லாம் கேட்கலாம். துஆச் செய்யும் போது கைகளை உயர்த்துவது விரும்பத்தக்கதாகும்.

அர.ஃ.பாவில் தங்குவது ஹஜ்ஜின் முதல் நிலைக் கடமைகளில் ஒன்றாகும். யார் அர.ஃ.பாவில் தங்கவில்லையோ அவரது ஹஜ் நிறைவேறாது. அங்கு தங்குவதற்குரிய நேரம் 9-ஆம் நாள் சூரியன் உதயமானதிலிருந்து 10-ஆம்

நாள் ∴பஜ்ர் உதயமாகும் வரையாகும். எனவே ஒருவர் இந்த நேரத்தின் இரவிலோ பகலிலோ கொஞ்ச நேரம் தங்கிவிட்டால் அவரது ஹஜ் பரிபூரண மடைந்து விடுகிறது. ஹாஜி தாம் அர∴பாவின் எல்கைக்குள் இருக்கிறோமா என்பதை உறுதிப்படுத்திக் கொள்வது அவசியமாகும்.

2. அர∴பா நாளின் சூரியன் நன்கு மறைந்து விட்டதென தெரிந்தால் முஸ்த லி∴பாவை நோக்கி அமைதியாகவும் கம்பீரமாகவும் உரத்த குரலில் தல்பியா கூறிக் கொண்டும் செல்ல வேண்டும்.

**முஸ்தலி∴பா**

முஸ்தலி∴பாவை அடைந்ததும் ம∴ரிபையும் இஷாவையும் சேர்த்து, இஷாவை மட்டும் சுருக்கித் தொழ வேண்டும். தொழுத பிறகு உணவு தயார் செய்தல் போன்ற (அவசியக்) காரியங்களைச் செய்து கொள்ளலாம். ∴பஜ்ருத் தொழுகைக்கு சுறுசுறுப்பாக எழுந்துவிடுவதற்காக சீக்கிரமாகத் தூங்குவது சிறப்பாகும்.

**10-ஆம் நாள் (பெருநாள்)**

1. ∴பஜ்ரு தொழுகையின் நேரம் வந்ததும் ∴பஜ்ரு தொழுது விட்டு அதே இடத்தில் அமர்ந்து நல்ல வெளிச்சம் வரும் வரை திக்ர், துஆவை அதிகப்படுத்த வேண்டும். (திக்ர் வருமாறு: அல்லாஹு அக்பர், லாஇலாஹ இல்லல் லாஹு வஹ்தஹு லா ஷரீக்கலஹு)

2. ஏழு பொடிக் கற்களைப் பொறுக்கிக் கொண்டு தல்பியாக் கூறியவராக சூரியன் உதயமாகும் முன் மினாவை நோக்கிச் செல்ல வேண்டும்.

3. ஜம்ரத்துல் அகபா (ஜம்ரத்துல்குப்ரா) வை அடையும் வரை தல்பியா சொல்லிக் கொண்டே செல்ல வேண்டும். அங்கு கற்களை ஒவ்வொன்றாக எறிய வேண்டும். ஒவ்வொரு கல்லை எறியும் போது அல்லாஹு அக்பர் என தக்பீர் கூற வேண்டும்.

4. கல் எறிந்த பின்பு அவர் ஹஜ்ஜுத் தமத்து∴ அல்லது ஹஜ் கிரான் செய்பவ ராக இருந்தால் குர்பானி கொடுக்க வேண்டும். குர்பானி இறச்சியை அவர் சாப்பிடுவதும் தர்மம் செய்வதும் விரும்பத் தக்கது.

5. குர்பானி கொடுத்த பிறகு தலை முடி முழுவதையும் மழிக்கவோ அல்லது கத்தரிக்கவோ வேண்டும். மழிப்பதே சிறந்தது. பெண்கள் தம் தலை முடி முழு வதிலிருந்தும் விரல் நுனி அளவு (சுமார் 3 செ.மீ)வெட்டிக் கொள்ள வேண்டும். அதன் பின்னர் இஹ்ராமின் காரணமாகத் தடுக்கப்பட்டிருந்த தையலாடை அணிதல், வாசனைத் திரவியம் பூசுதல், நகம் வெட்டுதல், முடிகளை நீக்குதல்

போன்ற அனைத்தும் ஹலாலாகும். எனவே அதன் பின்னர் குளிப்பது, சுத்தம் செய்வது, மணம் பூசுவது, தையலாடைகள் அணிவது விரும்பத்தக்கதாகும். எனினும் உடலுறவு மட்டும் கஅபதுல்லாவை வலம் வருவது வரை தடுக்கப் பட்டதாகவே இருக்கும்.

6. ஹஜ்ஜுடைய தவா∴பை அதாவது தவா∴புல் இ∴பாழாவை நிறைவேற்று வதற்காக அல்மஸ்ஜிதுல் ஹராமுக்குச் செல்ல வேண்டும். கஅபதுல்லாவில் ஏழு தடவை வலம் வந்த பிறகு இரண்டு ரக்அத தொழ வேண்டும். பின்னர் ஸயீச் செய்யுமிடத்திற்குச் சென்று ஸ∴பா, மர்வாவுக்கு இடையே ஏழு தடவை ஸயீ செய்ய வேண்டும். (இந்த ஸயீ தமத்து∴ செய்பவருக்கு மட்டுமே. கிரான், இ∴ப்ராத் செய்பவர் முதல் தவா∴புக்குப் பிறகு ஸயீ செய்திருந்தால் மீண்டும் இந்த ஸயீ தேவையில்லை. ஏனெனில் முதல் ஸயீ தான் அவருக்கு ஹஜ் உடைய ஸயீ. முன்பு ஸயீ செய்யாதிருந்தால் இந்த ஸயீ அவசியம்.) ஸயீக்குப் பின்னர் இஹ்ராமின் காரணமாக தடுக்கப்பட்டிருந்த அனைத்தும் ஹலாலாகும் மனைவியிடம் கூடுவது உட்பட.

7. ஹாஜி மினாவில் 11,12 ஆவது இரவுகள் தங்குவது அவசியமாகும். 12 ஆவது இரவு ஊருக்குப் புறப்படாமல் பிந்திவிடுபவர் 13 ஆவது இரவும் தங்குவது அவசியமாகும். இரவு தங்க வேண்டும் என்பதன் கருத்து, அதிக இரவு அங்கு தங்க வேண்டுமென்பதாகும்.

பத்தாம் நாள் செய்ய வேண்டிய காரியங்களை முதலில் கல்லெறிதல், பின்பு குர்பானி கொடுத்தல், பிறகு தலை முடி கழைதல், பின்பு தவா∴ப் செய்தல் என வரிசைக்கிரமமாகச் செய்வதே சுன்னத் ஆகும். அவற்றை வரிசை மாறிச் செய் தாலும் குற்றமில்லை.

**11 ஆம் நாள்**

இந்நாளில் ஹாஜி கல்லெறிவது அவசியமாகும். கல்லெறியும் நேரம் சூரியன் உச்சி சாய்ந்ததிலிருந்து துவங்குகிறது. அதற்கு முன் கல்லெறிவது கூடாது. சிறிய தூணிலிருந்து ஆரம்பித்து பின்னர் நடுத் தூண், அதன் பின்னர் பெரிய தூண் என முன்று தூண்களிலும் எறிய வேண்டும். எறியும் முறை வருமாறு:

1. 21 பொடிக் கற்களைத் தன்னுடன் எடுத்துக் கொள்ள வேண்டும். பின்பு சிறிய தூணான ஜம்ரதுஸ் ஸுக்ராவுக்கு சென்று ஏழு கற்களை- ஒவ்வொரு கல்லுடனும் அல்லாஹு அக்பர் எனக் கூறி- எறிய வேண்டும். கற்களை சரியாகத் தொட்டியினுள் எறிவதற்கு அக்கறை காட்ட வேண்டும். கற்களை ஒன்றன் பின்

ஒன்றாக எறிய வேண்டும். பின்னர் சிறிது வலது பக்கம் சென்று நின்று கொண்டு நீண்ட நேரம் துஆச் செய்வது சுன்னத்தாகும்.

2. இதன் பிறகு நடுத்தூணான ஜம்ரதுல் உஸ்தாவுக்குச் சென்று ஏழு கற்களை ஒவ்வொன்றாக அல்லாஹு அக்பர் எனக் கூறி எறிய வேண்டும். பிறகு சிறிது இடது புறம் சென்று நின்று கொண்டு நீண்ட நேரம் துஆச் செய்வது சுன்னதாகும்.

3. பெரிய தூணான ஜம்ரதுல் குப்ராவுக்குச சென்று ஏழு கற்களை ஒவ்வொன்றாக தக்பீர் கூறி எறிய வேண்டும். பின்னர் அங்கு நிற்காமல் சென்று விட வேண்டும்.

**12 ஆம் நாள்**

1. 11- ஆம் நாள் செய்தது போலவே செய்துகொள்ள வேண்டும். ஹாஜி தாமதமாகி 13 ஆவது நாள் தங்கியிருக்க விரும்பினால் அதுவே சிறந்து. அப்படி தங்கிவிட்டால் அந்நாளில் 11, 12 ஆவது நாட்களில் செய்ததுபோலவே செய்து கொள்ள வேண்டும்.

2. 12-ஆம் நாள் கல்லெறிந்த பின்னர் அல்லது தாமதமாகச் செல்பவர் 13-ஆம் நாள் கல்லெறிந்த பிறகு தவா.ஃ.புல்விதா.ஃ. செய்வதற்காக கஅபாவுக்குச் செல்ல வேண்டும். கஅபாவை ஏழு முறை வலம் வந்த பிறகு முடிந்தால் மகாம் இப்றாஹீ முக்குப் பின்னால் அல்லது பள்ளியின் ஏதாவது ஓர் இடத்தில் இரு ரக்அத்கள் தொழுவது சுன்னத் ஆகும். மாதவிடாய் மற்றும் பிரசவத் தீட்டுடைய பெண் இந்த தவா.ஃ.ப் செய்ய வேண்டியதில்லை.

3. இதன் பிறகு ஹாஜி வேறு எதிலும் ஈடுபடாமல் எனினும் திக்ர், துஆ, பயனள்ளவற்றைச் செவியேற்பது போன்றவற்றில் ஈடுபட்டவராக மக்காவிலிருந்து வெளியேறி விட வேண்டும். இந்த தவா.ஃ.புக்குப் பிறகு நண்பர்களை எதிர்பார்ப்பது அல்லது சாமான்களை எடுத்துக் கொள்வது அல்லது வழியில் தேவையான வற்றை வாங்கிக் கொள்வது போன்ற காரணங்களுக்காக சிறிது நேரம் தங்கி யிருப்பது குற்றமல்ல.

**ஹஜ்ஜின் ருகுன்கள்** (முதன் நிலைக் கடமைகள்)

1. இஹ்ராம், 2. அர.ஃ.பாவில் தங்குவது, 3. தவா.ஃ.புல் இ.ஃ.பாழா (பெருநாளில் செய்யும் தவா.ஃ.ப்), 4. ஸயீ செய்வது.

இவைகளில் ஒன்றை ஒருவர் விட்டு விட்டால் அவரது ஹஜ் நிறைவேறாது.

**ஹஜ்ஜின் வாஜிபுகள்** (இரண்டாம் நிலைக் கடமைகள்)

1. எல்லையில் இஹ்ராம் செய்வது.
2. அரபாவில் பகலில் தங்கியவர் சூரியன் மறையும் வரை அங்கு தங்குவது.

3. பலவீனர்கள், பெண்கள் தவிர மற்றவர்கள் அதிகாலை நன்கு வெளுக்கும் வரை முஸ்தலி.்.பாவில் தங்குவது. பலவீனர்களும் பெண்களும் பாதி இரவு வரை அங்கு தங்கலாம்.
4. 11,12,13 ஆகிய தஷ்ரீக்குடைய இரவு களில் மினாவில் தங்குவது.
5. 11,12,13 நாட்களில் கல்லெறிவது.
6. தலை முடியை மழிப்பது அல்லது கத்தரிப்பது.
7. தவா.்.புல் விதா.்.

இவற்றில் ஒன்றை யாரேனும் விட்டு விட்டால் அவர் குர்பானி கொடுப்பது கடமையாகும். அதாவது ஒரு ஆடு அல்லது ஏழு பேர் சேர்ந்து ஒரு மாடு அல்லது ஒரு ஒட்டகம் அறுத்து ஹரம் ஷரீ.்.பிலுள்ள ஏழைகளுக்கு வழங்க வேண்டும்.

**மஸ்ஜிதுந் நபவியைத் தரிசித்தல்**

நபியவர்களின் பள்ளியில் தொழுவதற்காக அங்கு செல்வது முஸ்தஹப்- விரும்பத்தக்கதாகும். இங்கு தொழுவது மஸ்ஜிதுல் ஹராம் அல்லாத ஏனைய பள்ளிகளில் தொழும் ஆயிரம் தொழுகைகளை விடச் சிறந்ததாகும் என ஹதீஸில் வந்துள்ளது. இப்பள்ளியைத் தரிசிப்பது ஷரீஅத்தின் நடைமுறை என்பது காலம் முழுவதுமாகும். அதற்கென குறிப்பிட்ட நாள் எதுவும் கிடையாது. அது ஹஜ்ஜில் செய்ய வேண்டிய காரியங்களில் உள்ள தல்ல.

ஒரு முஸ்லிம் இப்பள்ளியில் இருக்கும் வரை நபி (ஸல்) அவர்களுடைய கப்ரையும் அவர்களின் இரு நண்பர்களான அபூபக்கர் (ரலி), உமர் (ரலி) ஆகியோரின் கப்ருகளையும் சந்திப்பது முஸ்தஹப் ஆகும். கப்ரு ஸியாரத் ஆண்களுக்கு மட்டுமே. பெண்களுக்கல்ல. நபியவர்கள் அடங்கப்பட்டுள்ள அறையின் பகுதியைத் தொடுவதோ, அதை வலம் வருவதோ அல்லது துஆச் செய்யும்போது அதை முன்னோக்குவதோ கூடாது.

## أحكام الأطعمة
## உணவுகளின் சட்டங்கள்

அல்லாஹ் தனது அடியார்களைத் தூய்மையானவற்றை உண்ணுமாறு ஏவியுள்ளான். அசுத்தமானவற்றை உண்ண வேண்டாமெனத் தடுத்துள்ளான்.

"நம்பிக்கைகொண்டோரே! நாம் உங்களுக்கு வழங்கிய தூய்மையானவற்றை உண்ணுங்கள் " (2:172) ﴿ يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُلُوا مِنْ طَيِّبَاتِ مَا رَزَقْنَاكُمْ ... ﴾ [ البقرة: ١٧٢]

உணவுப் பொருட்களைப் பொறுத்தவரை சட்டத்தின் அசல் நிலை ஆகும் என்பதே! எவற்றை உண்ணக்கூடாதென தடுக்கப்பட்டுள்ளதோ அவற்றைத் தவிர! எனவே அல்லாஹ் தனது அடியார்களுக்கு தூய்மையானவற்றை அனுமதித் திருக்கிறான் என்று சொன்னால் அதன் மூலம் அவர்கள் பயன் பெறவேண்டும் என்பதற்காகத்தான். ஆகையால் பாவங்களுக்கு அல்லாஹ்வின் அருட்கொடை களைப் பயன்படுத்தக் கூடாது.

என்னென்ன உணவு, பானங்களை அல்லாஹ் தடை செய்யப்பட்டதாக (ஹராமாக) ஆக்கியுள்ளானோ அவற்றைத் தன்னுடைய அடியார்களுக்குத் தெளிவுபடுத்தியுள்ளான். ﴿ وَقَدْ فَصَّلَ لَكُمْ مَا حَرَّمَ عَلَيْكُمْ إِلَّا مَا اضْطُرِرْتُمْ إِلَيْهِ ﴾ [الأنعام:١١٩]

அல்லாஹ் கூறுகிறான்: "நீங்கள் நிர்பந்திக்கப்படும்போது தவிர (மற்ற நேரங் களில்) உங்களுக்கு அவன் தடை செய்ததைத் தெளிவுபடுத்திவிட்டான்."(6:119)

எனவே அல்லாஹ் ஹராமென தெளிவாகக் கூறாதவை ஹலாலாகும்.

((إن الله فرض الفرائض فلا تضيعوها وحدد حدودا فلا تعتدوها وحرم أشياء فلا تنتهكوها وسكت عن أشياء رحمة لكم من غير نسيان فلا تبحثوا عنها)) (الطبراني)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: "அல்லாஹ் சில கடமைகளைக் கடமையாக் கியுள்ளான்- அவற்றை பாழாக்கிவிடாதீர்கள். சில வரம்புகளை விதித்துள்ளான்- அவற்றைக் கடந்து விடாதீர்கள். சிலவற்றைத் தடை செய்துள்ளான்- அவற்றை மீறிவிடாதீர்கள், சில விஷயங்கள் பற்றி எதுவும் கூறாமல் மௌனம் சாதித் துள்ளான். மறதியினால் அல்ல, உங்களின் மீது கிருபை கொண்டு. அவை பற்றி நுணுகிப் பார்த்துக் கொண்டிருக்காதீர்கள். (தப்ரானி)

உணவுகள், பானங்கள், உடைகள் இவற்றில் அல்லாஹ்வும் அவன் தூதரும் ஹராம் என்று தெளிவாகக் கூறாதவற்றை நாம் ஹராமாக்கக் கூடாது. அடிப்படை என்ன வென்றால் தூய்மையான கெடுதியிழைக்காத அனைத்து உணவுகளும் ஹலாலானவையே. செத்தவை, இரத்தம், மதுபானம், புகையிலை, அசுத்தம்

கலந்தவை போன்ற அசுத்தமான அல்லது கெடுதியிழைக்கக்கூடிய உணவுகள் நீங்கலாக! ஏனெனில் இவை ஹராமாகும். காரணம் இவை அசுத்தமானவை யாகவும் கெடுதியிழைக்கக்கூடியவையாகவும் உள்ளன. செத்தவை என்றால் மார்க்கம் அனுமதித்த முறையில் அறுக்கப்படாமல் உயிர் பிரிந்தவை ஆகும். இரத்தம் என்பது அறுக்கப்பட்ட பிராணியிலிருந்து வெளியேறியதாகும். அறுக்கப் பட்ட பின் மாமிசத்திலும் நரம்புகளிலும் தங்கியிருக்கும் இரத்தம் ஹலாலாகும்.

அனுமதிக்கப்பட்ட உணவுகளில் பிராணிகள், தாவரங்கள் என இரு வகை உள்ளன. தாவரங்களில் கெடுதியில் லாதவை ஹலாலாகும். பிராணிகளில் கடலில் வாழக்கூடியவை, தரையில் வாழக்கூடியவை என இரு வகை உள்ளன. கடலில் வாழக்கூடியவையனைத்தும் பொதுவாக ஹலாலாகும். அவற்றை அறுக்க வேண்டும் என்ற நிபந்தனை கிடையாது. காரணம் கடல்வாழ்ப் பிராணிகளில் செத்த வைகளே ஆகுமானவையாக உள்ளன!

தரையில் வாழக்கூடிய பிராணிகளில் இஸ்லாம் ஹராமாக்கியவற்றைத் தவிர ஏனைய அனைத்தும் ஹலாலாகும். அவை: 1. நாட்டுக் கழுதை. 2. கழுதைப் புலி நீங்கலாக கீறிக்கிழிக்கக்கூடிய பற்கள் உள்ளவை.

பறவைகளில் வேட்டையாடக்கூடிய நகங்கள் உள்ளவை நீங்கலாக அனைத்தும் அனுமதிக்கப்பட்டவையாகும்.

عَنْ ابْنِ عَبَّاسٍ قَالَ نَهَى رَسُولُ اللهِ ﷺ عَنْ كُلِّ ذِي نَابٍ مِنْ السِّبَاعِ وَعَنْ كُلِّ ذِي مِخْلَبٍ مِنْ الطَّيْرِ (م/ ١٩٣٤)

விலங்குகளில் கீறிக்கிழிக்கக்கூடிய பற்கள் உள்ளவற்றையும் பறவைகளில் வேட்டையாடக்கூடிய நகங்கள் உள்ளவற்றையும் நபி (ஸல்) அவர்கள் தடுத் துள்ளதாக இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள். (முஸ்லிம்-1934)

பறைவைகளில் பிணம் தின்னக்கூடியவை ஹராமாகும். கழுகு, பருந்து, காகம் போன்று. ஏனெனில் இவை அசுத்தமானவற்றைத் தின்கின்றன. (மட்டுமல்ல இவைகளுக்கும் வேட்டையாடும் நகங்கள் உள்ளன.) பாம்பு, எலி, புழு, பூச்சிகள் போன்ற அறுவருக்கத்தக்கவையும் ஹராமாகும்.

மேலே கூறப்பட்ட பிராணிகள், பறவைகள் தவிர அனைத்தும் ஹலாலாகும். உதாரணமாக குதிரை, ஆடு, மாடு, ஒட்டகம், கோழி, காட்டுக் கழுதை, மான், ஒட்டகச்சிவிங்கி, தீக்கோழி, முயல் இன்னும் இவை போன்றவை. இவற்றில் நஜீஸை- அசுத்தத்தை அதிகமாக உண்ணக்கூடியவை நீக்கப்பட்டுள்ளது. அவற்றை மூன்று நாட்கள் அடைத்து வைத்து சுத்தமானவற்றை உணவாகக் கொடுக்கப்படும் வரை உண்பது ஹராமாகும். பள்ளிவாசலுக்கு வரும்போது

வெறுக்கத்தக்க வாடையுள்ள பூண்டு, வெயங்காயம் போன்றவற்றை உண்பது வெறுக்கத்தக்கதாகும்.

விலக்கப்பட்ட உணவை உண்ண வேண்டிய நிர்பந்தம் ஒருவனுக்கு ஏற்பட்டால்- அதை உண்ணவில்லையானால் செத்துப் போவான் என அஞ்சுவது போன்ற நிலைமை எனில், தனது உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் அளவு அதை உண்பது அவனுக்குக் கூடும். ஆனால் நஞ்சைத் தவிர!

ஒருவன் ஒரு தோட்டத்தைக் கடந்து செல்கிறான், அதன் கனிகள் மரத்தில் இருக்கின்றன அல்லது கீழே விழுந்து கிடக்கின்றன என்றால் அத்தோட்டத்திற்கு மதில் சுவரும், காவலாளியும் இல்லை என்றால் அதிலிருந்து சாப்பிட்டுக் கொள்ளலாம் எடுத்துச் செல்லக் கூடாது. ஆனால் மரத்தில் ஏறியோ அல்லது எதையாவது கொண்டு எறிந்தோ அல்லது சேகரித்து வைக்கப்பட்டதிலிருந்தோ நிர்ப்பந்தமின்றி உண்பது கூடாது. நிர்பந்த சூழ்நிலைக்கு விதிவிலக்கு உண்டு!

### அறுப்பதன் சட்டங்கள்

தரைவாழ்ப் பிராணிகள் ஹலாலாக ஆவதற்கு ஷரீஅத் அனுமதித்த முறையில் அவற்றை அறுப்பது நிபந்தனையாகும்.

அறுப்பது என்பது உண்ண அனுமதிக்கப்பட்ட பிராணியின் தொண்டையையும், உணவுக் குழாயையும் முறிக்கும் அளவு அறுக்க வேண்டும். அறுக்க இடம் அளிக்காத பிராணியைக் குத்தி வீழ்த்தி அறுக்க வேண்டும். சக்திக்குட்பட்ட எந்தப் பிராணியையும் அறுக்காமல் உண்பது ஹலாலாகாது. ஏனெனில் அறுக்கப் படாதவை செத்தவையாகும்.

### அறுப்பதற்குரிய விதிகள்

அறுப்பதற்கு சில விதிகள் உள்ளன. அவை வருமாறு:

1. அறுக்கத் தகுதியானவனாக இருக்கவேண்டும். அதாவது அறுப்பவன் புத்தி சீர்நிலையில் உள்ள, மார்க்கம் அறிந்த முஸ்லிமாகவோ அல்லது வேதம் கொடுக்கப்பட்டவனாகவோ இருக்க வேண்டும். போதையுள்ளவன், பைத்தியக் காரன், விபரமில்லாத சிறுவன் ஆகியோர் அறுத்தது கூடாததாகும். ஏனெனில் இவர்களிடம் விளங்கும் தன்மையில்லாததால் அறுப்பதன் நோக்கம் இவர்களிடம் செல்லாது. மேலும் சிலை வணங்கக்கூடிய கா∴பிரோ, நெருப்பு வணங்கியோ, கப்ருவணங்கியோ அறுத்ததும் ஹலாலாகாது.

2. அறுக்கும் கருவியை நன்றாகத் தீட்டிக்கொள்ள வேண்டும். இரத்தத்தை ஓட்டக்கூடிய இரும்பு, கல் அல்லது இதுபோன்ற கூர்மையானவற்றைக் கொண்டு அறுப்பது கூடும்.பல்(எலும்பு) மற்றும் நகம் கொண்டு அறுப்பது கூடாது.

3. தொண்டையை- மூச்சுக் குழாயை அறுக்க வேண்டும். மேலும் உணவுக் குழாய், பிடரி நரம்புகளில் ஒரு நரம்பு ஆகியவற்றையும் அறுக்க வேண்டும். குறிப்பாக இந்த இடத்தில் இவற்றை அறுப்பதற்குரிய தத்துவம் இரத்தத்தை வெளியேற்றுவதே ஆகும். ஏனெனில் இந்த இடம்தான் நரம்புகள் ஒன்று சேரும் இடமாகும். மேலும் இது விரைவாக உயிர் பிரிவதற்கு ஒரு வழியாகவும் பிராணிகளுக்கு சிரமமில்லாமல் இலேசாகவும் இருக்கும். அத்துடன் மாமிசம் மிகச் சுவை யாகவும் இருக்கும்.

மேற்கூறப்பட்ட பகுதியில் அறுக்க இயலவில்லையெனில்- உதாரணமாக வேட்டைப் பிராணி போன்று- அதன் உடலில் ஏதேனும் ஓர் இடத்தில் காயப் படுத்துவதன் மூலம் அதன் அறுப்பு நிறைவேறிவிடும்.

கழுத்து நெறிக்கப்பட்ட, அடிபட்ட, உயரமான இடத்திலிருந்து வீழ்ந்த, மோதப் பட்ட, கொடிய விலங்குகளால் கடித்துக் குதறப்பட்ட பிராணிகளை உண்பது கூடாது. ஆனால் அவை உயிர் பிரியாமல் இருந்து அவற்றை அறுத்து விட்டால் அவற்றைச் சாப்பிடுவது ஹலாலாகும்.

4. அறுக்கும்போது அறுக்கக்கூடியவன் பிஸ்மில்லாஹ் என்று கூற வேண்டும். அத்துடன் அல்லாஹு அக்பர் என்பதையும் சேர்த்துக் கூறுவது சுன்னத்தாகும்.

**அறுக்கும் ஒழுங்குமுறைகள்**

1. பிராணிகளை கூர்மையற்ற ஆயுதங்களைக் கொண்டு அறுப்பதும்,

2. அவை பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஆயுதங்களைக் கூர்மைப் படுத்துவதும்,

3. கிப்லா அல்லாத திசைகளில் அவற்றைப் படுக்க வைத்து அறுப்பதும்,

4. மரணிக்கு முன் கழுத்தை வெட்டுவதும், தோலை உரிப்பதும் ஆகிய இவையனைத்தும் வெறுக்கத்தக்கதாகும்.

ஆடு, மாடுகளை இடது பக்கமாக படுக்கவைத்தும், ஒட்டகத்தை அதன் இடது காலைக் கட்டி நிற்க வைத்தும் அறுப்பது சுன்னத்தாகும். அல்லாஹ் மிக அறிந்தவன்.

**வேட்டையாடுதல்**

தேவைக்காக மிருகங்களை வேட்டையாடுவது கூடும். வீண், விளையாட் டுக்காக வேட்டையாடுவது மக்ரூஹ்- வெறுக்கத்தக்கதாகும். வேட்டையாடி பிடிபட்ட பிராணிக்கு இரு நிலைகள் உள்ளன.

1.உயிருடன் பெற்றுக் கொள்வது, அப்போது அதை அறுப்பது அவசியமாகும்.

2. இறந்த நிலையிலோ அல்லது நிலையற்ற உயிருடனோ பெற்றுக் கொள்ளப்பட்டால் அவை ஹலாலாகும்.

அறுக்கக்கூடியவனுக்குரிய நிபந்தனைகள் தான் வேட்டையாடக்கூடிய வனுக்கும். அவை வருமாறு:

1. புத்தி சீர்நிலையில் உள்ள முஸ்லிமாக அல்லது வேதக்காரனாக இருக்க வேண்டும். பைத்தியக்காரன், போதையுள்ளவன் அறுத்தவற்றையும் நெருப்பு வணங்கி, சிலை வணங்கி, கப்ருவணங்கி போன்ற கா.ஃ.பிர்கள் அறுத்தவற்றையும் முஸ்லிம் உண்பது கூடாது.

2. அறுக்கக்கூடிய ஆயுதம் இரத்தத்தை ஓட்டக்கூடிய வகையில் கூர்மை யானதாக இருப்பது நிபந்தனையாகும். எலும்பு, நகத்தைக் கொண்டு அறுக்கக் கூடாது. வேட்டைப் பிராணியை ஆயுதத்தின் அழுத்தத்தினால் காயப்படுத் தாமல் அதன் கூர்மை கொண்டு காயப்படுத்தியிருக்க வேண்டும்.

வேட்டையாடக்கூடிய நாய் மற்றும் பறவைகள் பயிற்று விக்கப்பட்டவையாக இருந்தால் அவை கொன்றவற்றை சாப்பிடுவது கூடும். பயிற்றுவிக்கப்பட்ட வேட்டைப் பிராணி என்பது அதைப் “போ” என அனுப்பி வைத்தால் போகும், “வா” என அழைத்தால் திரும்பி வரும். மேலும் அது ஒரு வேட்டையைப் பிடித்தால் தனது எஜமானனிடம் வரும் வரை எஜமானனுக்காகவே பிடித்து வைத்துக் கொள்ளும். தனக்காக பிடித்துக் கொள்ளாது.

3. வேட்டையாடுபவன் வேட்டைப் பிராணியை நோக்கி கருவியை எறிய வேண்டும். அவனது கையிலிருந்து ஆயுதம் கீழே விழுந்து ஒரு பிராணியைக் கொன்று விட்டால் அது அவனுக்கு ஹலாலாகாது. ஏனெனில் அதை வேட்டை யாடுவது அவனது நோக்கமாக இருக்கவில்லை. ஒரு நாய் தானாகவே சென்று ஒரு பிராணியைக் கொன்றுவிட்டால் அதன் எஜமானன் அதை அனுப்பாததாலும் அவன் வேட்டையை நாடாததாலும் அவனுக்கு அது ஹலாலாகாது.

ஒருவன் ஒரு பிராணியை எறிந்து அது வேறு பிராணியையோ அல்லது பிராணி களின் ஒரு கூட்டத்தையோ கொன்று விட்டால் அவை அனைத்தும் அவனுக்கு ஹலாலாகிவிடும்.

4. அம்பை அல்லது காயப்படுத்தக்கூடியதை அனுப்பும்போது பிஸ்மில்லாஹ் என்று கூற வேண்டும். அத்துடன் அல்லாஹு அக்பர் என சேர்த்துக் கூறுவது சுன்னத்தாகும்.

குறிப்பு: நபி(ஸல்)அவர்கள் அனுமதி வழங்காத காரியங் களுக்காக நாய் வளர்ப்பது ஹராமாகும். அவர்கள் அனுமதி வழங்கியவை வேட்டை, விவசாயப்

பாதுகாப்பு மற்றும் கால்நடைகளைப் பாதுகாத்தல் ஆகிய மூன்று காரியங்கள் ஆகும்.

## أحكام اللباس

## ஆடை அணிவதன் சட்டங்கள்

இஸ்லாம் அழகையும் சுத்தத்தையும் விரும்பும் மார்க்கமாகும். ஒரு முஸ்லிம் அழகிய தோற்றத்துடன் திகழ்வதற்கு இஸ்லாம் அனுமதித்திருக்கிறது. அதுமட்டுமல்ல அதற்கு ஆர்வமும் ஊட்டுகிறது. மனிதனின் மானத்தை மறைக்கவும் அவனை அலங்கரிக்கவும் உதவக்கூடிய ஆடைகளை அல்லாஹ் படைத்திருக்கிறான்.

﴿يَا بَنِي آَدَمَ قَدْ أَنْزَلْنَا عَلَيْكُمْ لِبَاسًا يُوَارِي سَوْآَتِكُمْ وَرِيشًا وَلِبَاسُ التَّقْوَى ذَلِكَ خَيْرٌ ذَلِكَ مِنْ آَيَاتِ اللهِ لَعَلَّهُمْ يَذَّكَّرُونَ﴾ [الأعراف:٢٦]

“ஆதமுடை மக்களே! உங்கள் வெட்கத்தலங்களை மறைக்கும் ஆடையையும், அலங்காரத்தையும் உங்களுக்கு அருளியுள்ளோம். (ஆயினும்) இறையச்சம் எனும் ஆடையே சிறந்தது. இது அல்லாஹ்வின் சான்றுகளில் உள்ளதாகும். இதன் மூலம் அவர்கள் நற்சிந்தனை பெறக்கூடும்.” (7:26)

“ஆடைகளைப் பொறுத்தவரை சட்டத்தின் அசல் நிலை ஆகுமென்பதே! ஆனால் அணியக்கூடாதென தடுக்கப்பட்டுள்ளதை அணிவது கூடாது. குறிப்பிட்ட ஆடையைத்தான் அணிய வேண்டும் என்று இஸ்லாம் நிர்ணயம் செய்யவில்லை. ஆயினும் ஆடை அணிவதில் ஒரு முஸ்லிம் அவசியம் கடைபிடிக்க வேண்டிய சில சட்டங்களை இஸ்லாம் வகுத்துத் தந்துள்ளது. அவை வருமாறு:

1. அவன் அணியும் ஆடை மறைக்கப்பட வேண்டிய உறுப்புக்களை மறைக்கும் விதமாக அமைந்திருக்க வேண்டும். அவற்றை வெளிப்படுத்தும் விதமாக அமைந்திருக்கக்கூடாது.

2. முஸ்லிம் அல்லாதோருக்கு ஒப்பாகும் வகையில் அல்லது சில தீமையான காரியங்களைச் செய்யக்கூடியவர்கள் என அறியப்படுவோருக்கு (உரிய பிரத்தியேகமான ஆடைக்கு) ஒப்பாகும் வகையில் அந்த ஆடை அமைந்திருக்கக்கூடாது.

3. ஆடை விஷயத்தில் வீண் விரயம் செய்யக்கூடாது.

இதுபோன்ற நிபந்தனைகளை கவனத்தில் கொண்ட பிறகு ஒருவன் தனது தேவை மற்றும் சமூக வழக்கத்திற்குப் பொருத்தமான ஆடையை அணிந்து கொள்ள வேண்டும்.ஆடை விஷயத்தில் தடுக்கப்பட்ட சில விஷயங்கள் வருமாறு:

1. ஆண்களைப் பொருத்தவரை தங்கம் மற்றும் பட்டு அணிவது கூடாது. ஆனால் பெண்களுக்கு இவ்விரண்டும் ஆகுமானதே.

عن عَلِيِّ بْنِ أَبِي طَالِبٍ ﷺ يَقُولُ إِنَّ نَبِيَّ الله ﷺ أَخَذَ حَرِيرًا فَجَعَلَهُ فِي يَمِينِهِ وَأَخَذَ ذَهَبًا فَجَعَلَهُ فِي شِمَالِهِ ثُمَّ قَالَ إِنَّ هَذَيْنِ حَرَامٌ عَلَى ذُكُورِ أُمَّتِي (نس/ ٥٠٥٣، د/ ٤٠٥٧، جه/ ٣٥٩٥)

ஏனெனில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பட்டை எடுத்து தமது வலது கையில் வைத்துக் கொண்டு தங்கத்தை தமது இடது வைத்துக் கொண்டு “இவ்விரண்டும் என் சமுதாயத்திலுள்ள ஆண்களுக்கு விலக்கப்பட்டதாகும்” எனக் கூறினார்கள். அறிவிப்பவர்: அலீ(ரலி), நூல்: நஸயீ(5053), அபூதாவூத் (4057), இப்னுமாஜா(3595)

ஆனாலும் ஆண்கள் வெள்ளி மோதிரம் அணிவதில் எந்தக் குற்றமும் இல்லை. அல்லது சிறிதளவு வெள்ளி கலந்திருக்கின்ற ஏதேனும் ஒன்றை அணிந்து கொள்வது பற்றியோ எந்தக் குற்றமுமில்லை. ஆனாலும் அது வழக்கமாக ஆண்கள் அணிந்து கொள்ளும் பொருளாக இருக்க வேண்டும்.

2. உயிருள்ளவற்றின் உருவங்கள் பொறிக்கப்பட்ட ஆடையை அணிவது கூடாது. அந்த வகையில் ஒரு மனிதனின் அல்லது ஒரு உயிரினத்தின் உருவம் பொறிக்கப்பட்ட ஆடையை ஒரு முஸ்லிம் அணிவது கூடாது. அந்த உருவம் உடையிலோ ஆபரணத்திலோ அல்லது அவன் அணிந்து கொள்கின்ற வேறு எதில் இருந்தாலும் சரியே.

عَنْ عَائِشَةَ أُمِّ الْمُؤْمِنِينَ ﷺ أَنَّهَا أَخْبَرَتْهُ أَنَّهَا اشْتَرَتْ نُمْرُقَةً فِيهَا تَصَاوِيرُ فَلَمَّا رَآهَا رَسُولُ الله ﷺ قَامَ عَلَى الْبَابِ فَلَمْ يَدْخُلْهُ فَعَرَفْتُ فِي وَجْهِهِ الْكَرَاهِيَةَ فَقُلْتُ يَا رَسُولَ الله أَتُوبُ إِلَى الله وَإِلَى رَسُولِهِ ﷺ مَاذَا أَذْنَبْتُ فَقَالَ رَسُولُ الله ﷺ مَا بَالُ هَذِهِ النُّمْرُقَةِ قُلْتُ اشْتَرَيْتُهَا لَكَ لِتَقْعُدَ عَلَيْهَا وَتَوَسَّدَهَا فَقَالَ رَسُولُ الله ﷺ إِنَّ أَصْحَابَ هَذِهِ الصُّوَرِ يَوْمَ الْقِيَامَةِ يُعَذَّبُونَ فَيُقَالُ لَهُمْ أَحْيُوا مَا خَلَقْتُمْ وَقَالَ إِنَّ الْبَيْتَ الَّذِي فِيهِ الصُّوَرُ لَا تَدْخُلُهُ الْمَلَائِكَةُ (خ/ ٢١٠٥، م/ ٢١٠٧)

ஆயிஷா(ரலி) அறிவிக்கிறார்கள்: உருவங்கள் உள்ள தலையணை ஒன்றை நான் வாங்கினேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதைப் பார்த்தபோது வீட்டிற்குள் நுழையாமல் வாசலிலேயே நின்று விட்டார்கள். அவர்களின் முகம் வெறுப்பு அடைந்ததை நான் அறிந்து கொண்டேன். “அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்விடமும் அவன் தூதரிடமும் பாவமன்னிப்புத் தேடிக்கொள்கிறேன்; நான் செய்த தவறு என்ன?” என்று கேட்டேன். அதற்கு அவர்கள், “இது என்ன தலை யணை?” என்று கேட்டார்கள். “தாங்கள் இதில் அமர்வதற்காகவும், சாய்ந்து

கொள்வதற்காகவும் உங்களுக்காக இதை வாங்கினேன்" என்று கூறினேன். உடனே நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள், "இந்த உருவங்களை வரைந்தவர்கள் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவார்கள். 'நீங்கள் படைத்தவற்றுக்கு உயிர் கொடுங்கள்' என்று அவர்களிடம் கூறப்படும்" என்று கூறினார்கள். பிறகு உருவப் படங்கள் உள்ள வீட்டில் வானவர்கள் நுழையமாட்டார்கள்" என்றும் கூறினார்கள். நூல்: புகாரி(2105), முஸ்லிம்(2107)

3. கணுக்காலுக்குக் கீழே தொங்கும் வகையில் ஆடை அணிவது ஆண் களுக்குத் தடுக்கப்பட்ட காரியங்களில் ஒன்றாகும். ஏனெனில்

عَنْ أَبِي هُرَيْرَةَ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ مَا أَسْفَلَ مِنْ الْكَعْبَيْنِ مِنْ الْإِزَارِ فَفِي النَّارِ (خ/ ٥٧٨٧)

" கணுக்காலுக்குக் கீழே தொங்கும் வகையில் அங்கி அணிபவர் நரகத்தில் (புகுவார்)" என நபிகள் நாயகம் (ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரி(5787)

இவ்வாறாக அரேபியர்கள் அணிகின்ற தோப், ஸிர்வால் போன்ற ஆடை களையும் பேண்ட், லுங்கி போன்ற ஆடைகளையும் கணுக்காலுக்குக் கீழே தொங்கும் வகையில் அணிவது தடுக்கப்பட்டதாகும். இந்தத் தடை பெருமைக்காக அணிபவர்களுக்கு மட்டும் தான் என்பதல்ல. பெருமைக்காக யார் இவ்வாறு அணிகிறாரோ அவர் இன்னும் கடுமையாக எச்சரிக்கப்படுகிறார்.

عَنْ ابْنِ عُمَرَ قَالَ قَالَ رَسُولُ الله ﷺ مَنْ جَرَّ ثَوْبَهُ خُيَلَاءَ لَمْ يَنْظُرْ الله إِلَيْهِ يَوْمَ الْقِيَامَةِ (خ/ ٣٦٦٥، م/ ٢٠٨٥)

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: "பெருமைக்காக தனது ஆடையை யார் தரையோடு இழுத்துக் கொண்டு செல்கிறாரோ அவரை மறுமையில் அல்லாஹ் பார்க்க மாட்டான்." அறிவிப்பவர்: இப்னு உமர்(ரலி), நூல்: புகாரி(3665), முஸ்லிம்(2085)

பெண்கள் தமது பாதங்களை மறைக்கும் வகையில் நீளமாக ஆடை அணிந்து கொள்ள வேண்டும்.

4. ஆணாயினும் சரி பெண்ணாயினும் சரி மறைக்கபட வேண்டிய உறுப்புகள் வெளியே தெரியும் அளவுக்கு மெல்லிய அல்லது அரை குறையான ஆடை அணிவது கூடாது.

5. பெண்கள் ஆண்களுக்கோ ஆண்கள் பெண்களுக்கு ஒப்பாகின்ற வகையில் ஆடை அணிவது தடுக்கப்பட்டதாகும். ஏனெனில்

عَنْ ابْنِ عَبَّاسٍ قَالَ لَعَنَ رَسُولُ الله ﷺ الْمُتَشَبِّهِينَ مِنْ الرِّجَالِ بِالنِّسَاءِ وَالْمُتَشَبِّهَاتِ مِنْ النِّسَاءِ بِالرِّجَالِ تَابَعَهُ عَمْرٌو أَخْبَرَنَا شُعْبَةُ (خ/ ٥٨٨٥)

“பெண்களுக்கு ஒப்பாகின்ற ஆண்களையும் ஆண்களுக்கு ஒப்பாகின்ற பெண்களையும் அல்லாஹ்வின் தூதர் சபித்துள்ளார்கள்” என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்துள்ளார்கள். (புகாரி-5885)

6. முஸ்லிமல்லாதவர்களுக்கு ஒப்பாகின்ற வகையில் ஆடை அணிவதும் தடுக்கப்பட்டதாகும். எனவே ஒரு முஸ்லிமல்லாதவர்களுக்கே உரிய பிரத்தி யேகமான ஆடைகளை அணிவது கூடாது.

عن ا بْنَ عَمْرٍو قَالَ رَأَى رَسُولُ الله ﷺ عَلَيَّ ثَوْبَيْنِ مُعَصْفَرَيْنِ فَقَالَ إِنَّ هَذِهِ مِنْ ثِيَابِ الْكُفَّارِ فَلَا تَلْبَسْهَا (م/ ٢٠٧٧)

அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவிக்கிறார்கள்: “நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என்னிடம் இரண்டு காவி உடைகளைக் காட்டி ‘இவை காபிர்களின் உடையாகும். இவற்றை அணியாதே’ என்று கூறினார்கள்.” (முஸ்லிம்-2077)

**ஆடை அனிவதன் சுன்னத்துகளும் ஒழுக்கங்களும்**

1. ஒரு முஸ்லிம் அவசியம் கடைபிடிக்க வேண்டிய சுன்னத்துகளில் ஒன்று அவன் புதிய ஆடையை அணியும்போது ஒரு துஆவை ஓத வேண்டும். ஏனெனில்

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ قَالَ كَانَ رَسُولُ الله ﷺ إِذَا اسْتَجَدَّ ثَوْبًا سَمَّاهُ بِاسْمِهِ إِمَّا قَمِيصًا أَوْ عِمَامَةً ثُمَّ يَقُولُ **اللَّهُمَّ لَكَ الْحَمْدُ أَنْتَ كَسَوْتَنِيهِ أَسْأَلُكَ مِنْ خَيْرِهِ وَخَيْرِ مَا صُنِعَ لَهُ وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهِ وَشَرِّ مَا صُنِعَ لَهُ** (د/ ٤٠٢٠)

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் புதிய ஆடையை அணிந்தால் சட்டை அல்லது தலைப்பாகை என அதன் பெயர் குறிப்பிட்டு, “அல்லாஹும்ம லகல் ஹம்து அன்த கஸவ்தனீஹி, அஸ்அலுக மின் கைரிஹி வகைரமா சுனிஅலஹு வஅஊது பிக மின் ஷர்ரிஹி வஷர்ரிமா சுனிஅலஹு” என்று கூறுவார்கள். அறிவிப்வர்: அபூஸயீத்(ரலி), நூல்: அபூதாவூத்(4020)

(பொருள்: இறைவா! உனக்கே எல்லாப் புகழும். நீயே இதை எனக்கு அணிவித்தாய். இதன் நன்மையையும் எதற்காக இது தயாரிக்கப்பட்டுள்ளதோ அதன் நன்மையையும் நான் உன்னிடம் கோருகிறேன். மேலும் இதன் தீமையை விட்டும் எதற்காக இது தயாரிக்கப்பட்டுள்ளதோ அதன் தீமையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்)

2. ஆடை அணியும்போது வலது புறத்திலிருந்து அணிவது சுன்னத்தாகும்.

عَنْ عَائِشَةَ كَانَ النَّبِيُّ ﷺ يُحِبُّ التَّيَمُّنَ مَا اسْتَطَاعَ فِي شَأْنِهِ كُلِّهِ فِي طُهُورِهِ وَتَرَجُّلِهِ وَتَنَعُّلِهِ (خ/ ٤٢٦، م/ ٢٦٨)

ஆயிஷா(ரலி) அறிவிப்பதாவது: “நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சுத்தம் செய்யும்போதும் தலைவாரும்போதும் செருப்பு அணியும்போதும் இன்னும் தமது

எல்லாக் காரியங்களிலும் முடிந்தவரை வலது புறத்திலிருந்து துவங்குவதையே விரும்புவார்கள்." (புகாரி-426, முஸ்லிம்-268)

இவ்வாறே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் செருப்பணிந்தால் முதலில் வலது காலில் அணிவார்கள். செருப்பைக் கழற்றும்போது முதலில் இடது காலிலிருந்து கழற்றுவார்கள்.

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِذَا انْتَعَلَ أَحَدُكُمْ فَلْيَبْدَأْ بِالْيُمْنَى وَإِذَا خَلَعَ فَلْيَبْدَأْ بِالشِّمَالِ وَلْيُنْعِلْهُمَا جَمِيعًا أَوْ لِيَخْلَعْهُمَا جَمِيعًا (خ/ ٥٨٥٥، م/ ٥٤٩٥) واللفظ له

அபூஹுரைரா (ரலி) அறிவிப்பதாவது: "உங்களில் யாரேனும் செருப்பு அணிந்தால் முதலில் வலது காலில் அணியட்டும். கழற்றும்போது முதலில் இடது காலிலிருந்து கழற்றட்டும். இரண்டையும் கழற்றிக் கொள்ளட்டும். அல்லது இரண்டையும் அணிந்து கொள்ளட்டும்" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரழி), நூல்: புகாரி(5855), முஸ்லிம்(5495),

மேலும் ஒரு செருப்பில் நடக்கக் கூடாது என்ற தடையும் ஹதீஸில் வந்துள்ளது.

3. உடல், உடை ஆகிய இரண்டின் தூய்மையைப் பேண வேண்டும். அதே நேரத்தில் அவ்விரண்டையும் அசுத்தத்தை விட்டும் சுத்தமாக வைத்திருப்பதற்கு அக்கறை காட்ட வேண்டும். ஏனெனில் தூய்மை தான் அழகிற்கும் அலங்காரத் திற்கும் அடிப்படையாகும். இஸ்லாம் பொதுவாக தூய்மையைப் பேணு வதையும், உடல் மற்றும் உடையை தூய்மையாக வைத்திருப்பதற்கு அக்கறை காட்டுவதையும் ஆர்வமூட்டுகிறது.

4. வெள்ளை நிற ஆடை அணிவது விரும்பத்தக்கதாகும்.

عَنْ ابْنِ عَبَّاسٍ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ الْبَسُوا مِنْ ثِيَابِكُمْ الْبَيَاضَ فَإِنَّهَا مِنْ خَيْرِ ثِيَابِكُمْ وَكَفِّنُوا فِيهَا مَوْتَاكُمْ

(ت/ ٩٩٤، نس/ ٥٢٢٧، د/ ٣٨٧٨)

"வெள்ளை நிற ஆடையையே அணியுங்கள்; அந்த ஆடையிலேயே இறந்தவர் களையும் க.்.பன் செய்யுங்கள். ஏனெனில் உங்கள் ஆடைகளில் சிறந்தது ஆதுதான்" என நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ்(ரலி), நூல்: திர்மதி(994), நஸயீ(5227), அபூதாவூத்(3878)

5. ஆடை வகைகளிலும் அனுமதிக்கப்பட்ட அலங்காரத்திலும் நடுநிலையை மேற்கொள்ள வேண்டும்.

﴿ وَالَّذِينَ إِذَا أَنْفَقُوا لَمْ يُسْرِفُوا وَلَمْ يَقْتُرُوا وَكَانَ بَيْنَ ذَلِكَ قَوَامًا ﴾ [الفرقان :٦٧]

அல்லாஹ் கூறுகிறான்: “அவர்கள் செலவிடும்போது விரையம் செய்ய மாட்டார்கள்; கஞ்சத்தனமும் செய்ய மாட்டார்கள்; அதற்கு இடைப்பட்ட நிலையாகவே அது இருக்கும்.” (25:67)

عَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ عَنْ أَبِيهِ عَنْ جَدِّهِ قَالَ قَالَ رَسُولُ الله ﷺ كُلُوا وَتَصَدَّقُوا وَالْبَسُوا فِي غَيْرِ إِسْرَافٍ وَلَا مَخِيلَةٍ (نس/ ٢٥١٢، جه/ ٣٦٠٥، حم/ ٦٤٠٨) وورد في البخاري تعليقا

“வீண் விரையமோ பெருமையோ இன்றி உண்ணுங்கள் பருகுங்கள் தான தர்மமும் செய்யுங்கள்” என நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். நூல்: நஸயீ(2512), இப்னுமாஜா(3605), அஹ்மத்(6408) அறிவிப்பாளர் வரிசை யின்றி புகாரியிலும் இது பதிவு செய்யப்பட்டுள்ளது.

# திருமணத்தின் சட்டங்கள்

## திருமணத்திற்குரிய நிபந்தனைகள்

1. **மணமகன், மணமகளின் சம்மதம்:** பருமடைந்த, புத்தி சீர்நிலையில் உள்ள ஓர் ஆணை அவனுக்கு விருப்பமில்லாத பெண்ணை திருமணம் செய்யுமாறு வற்புறுத்தக் கூடாது. அதுபோல பருமடைந்த, புத்தி சீர்நிலையில் உள்ள ஒரு பெண்ணை அவளுக்கு விருப்பமில்லாத ஆணை மணந்து கொள்ளுமாறு வற்புறுத்தக் கூடாது. இஸ்லாம் பெண்ணின் சம்மதமில்லாமல் அவளுக்கு மணம் முடித்து வைப்பதைத் தடை செய்துள்ளது. ஒரு பெண் ஒருவனை மணமுடிக்க மறுத்துவிட்டால் அவளின் தந்தை உட்பட எவரும் அவனை மணமுடித்துக் கொள்ளுமாறு அவளை வற்புத்துவது கூடாது.

2. **வலீ** (பொறுப்பாளர்): பொறுப்பாளர் இல்லாமல் திருமணம் செல்லாது. ஏனெனில் "பொறுப்பாளர் இல்லாமல் திருமணம் கூடாது" என நபி (ஸல்) கூறியுள்ளார்கள். (திர்மிதி-1101, அபூதாவூத்-2085, இப்னுமாஜா-1881)

عَنْ أَبِي مُوسَى قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا نِكَاحَ إِلَّا بِوَلِيٍّ (ت/ ١١٠١، د/ ٢٠٨٥، جه/ ١٨٨١)

ஒரு பெண் தானாகவே மணம் முடித்துக் கொண்டால் அது செல்லாது, அத்திருமணத்தை அவள் தானாக நடத்திக் கொண்டாலும் சரி அல்லது வேறு யாரிடத்திலும் அவள் பொறுப்பு ஒப்படைத்துக் கொண்டாலும் சரி.

-ஒரு முஸ்லிமான பெண்ணுக்கு கா.ஃ.பிர் வலியாக முடியாது. பொறுப்பாளர் இல்லாத பெண்ணிற்கு அந்த ஊர்த் தலைவர் திருமணம் நடத்திவைப்பார்.

-அப்பெண்ணின் உறவினர்களில் பருவமடைந்த, புத்தி சீர்நிலையிலுள்ள, நேர்மையானவராக பொறுப்பாளர் இருக்க வேண்டும்.

**-பொறுப்பாளரின் வரிசை வருமாறு:** முதலில் தந்தை, பிறகு அவரால் வஸிய்யத் செய்யப்பட்டவர், பிறகு தந்தைவழிப் பாட்டன், தந்தைவழிப் பாட்டன் ஒன்றுக்கு மேற்பட்டவர் இருந்தால் அவர்களில் தந்தைக்கு மிக நெருங்கியவர் வலியாக வருவார்.பிறகு அவளுடைய மகன், பிறகு மகனுடைய மகன், இப்படியே எத்தனை தலைமுறை இறங்கிச் சென்றாலும் சரி. பிறகு அவளது உடன்பிறந்த சகோதரன், பின்னர் தகப்பன்வழிச் சகோதரன், பின்னர் உடன்பிறந்த சகோதரனின பிள்ளைகள், பின்பு தகப்பன்வழிச் சகோதரனின் நெருக்கமான பிள்ளைகள், பிறகு தாய் தகப்பனின் சிறிய, பெரிய தந்தையர், பின்பு தகப்பன்வழி சிறிய, பெரிய தந்தையர், பின்பு அவர்களின் நெருக்கமான பிள்ளைகள், பின்பு அவளின் தகப்பனின் சிறிய, பெரிய தந்தையர், பின்பு அவர்களின் பிள்ளைகள். பின்பு பாட்டனின் சிறிய, பெரிய தந்தையர், பின்னர் அவனுடைய பிள்ளைகள்.

-பொறுப்பாளர் ஒரு பெண்ணை மணமுடித்துக் கொடுக்கும் முன் அவளிடம் அனுமதி கேட்டுக் கொள்வது அவசியமாகும். பொறுப்பாளர் அவசியமென்பதன் நோக்கம் விபச்சாரத்திற்குரிய வழியை அடைத்துவிடுவதே. ஏனெனில் விபச்சாரம் செய்பவன் ஒரு பெண்ணிடம் “உனக்கு இவ்வளவு தருகிறேன் என்னை மணந்து கொள்” எனக் கூறி தன் நண்பர்களில் அல்லது மற்றவர்களில் இருவரை சாட்சி யாக்கிக் கொள்வது ஒன்றும் இயலாத காரியமல்ல.

3. **இரு சாட்சிகள்:** திருமண ஒப்பந்தம் நடைபெறுகிறபோது முஸ்லிம்களில் நீதமுள்ள இருவரோ, இருவருக்கு மேற்பட்டவர்களோ பங்குகொள்வது அவசிய மாகும். அவர்கள் விபச்சாரம், மது அருந்துதல் போன்ற பெரும் பாவங்களில் ஈடுபடாதவர்களாகவும் நம்பத்தகுந்தவர்களாகவும் இருப்பது அவசியமாகும்.

**திருமண ஒப்பந்தத்திற்குரிய வார்த்தை:**

மணமகன் அல்லது அவனால் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டவர் ஒப்பந்த நேரத்தில் “உங்களது மகளை எனக்கு அல்லது என் பொறுப்பாளருக்கு மண முடித்துக் கொடுங்கள்” என்று சொல்ல வேண்டும். அதற்கு பெண்ணின் வலி-பொறுப்பாளர் “எனது மகளை அல்லது எனது பொறுப்பிலுள்ள இன்னவளை நான் உனக்கு மணமுடித்துத் தந்துவிட்டேன்” என்று கூறவேண்டும். மணமகன், “இவளை மணமுடித்துத் தந்ததை நான் ஒப்புக் கொண்டேன்” என்று சொல்ல வேண்டும். மணமகன் தான் விரும்பியவரைத் தனக்கு பொறுப்பாளராக நியமிக்கலாம்.

4. **மஹர்**(மணக்கொடை): மணமகன் மணப் பெண்ணுக்கு மஹர் கொடுப்பது கட்டாயமாகும். மஹரில் விரும்பத்தக்கது அது குறைவாக இருப்பதே. மஹர் எந்த அளவுக்கு குறைவாகவும் இலேசாகவும் உள்ளதோ அந்த அளவுக்கு அது சிறப்பானதாகும். மஹருக்கு “ஸதாக்” என்றும் சொல்லப்படும்.

-மஹ்ர் தொகையை திருமண ஒப்பந்த நேரத்தில் குறிப்பிடுவதும், அந்த நேரத்திலேயே அதைக் கொடுத்துவிடுவதும் சுன்னத்தாகும். எனினும் முழு வதையும் அல்லது அதில் ஒரு பகுதியை ஒரு கால தவணை வரை பிற்படுத்து வதும் கூடும்.

-ஒருவன் உடலுறவு கொள்ளும் முன் தன் மனைவியை தலாக் சொல்லி விட்டால் மஹரில் பாதியை அவள் எடுத்துக் கொள்ள வேண்டும். திருமண ஒப்பந்தம் முடிந்து உடலுறவு கொள்ளுமுன் கணவன் இறந்து விட்டால் சொத்துரிமையும், முழு மஹரும் அவளுக்குண்டு.

**திருமணத்திற்குப் பின்:**

1. **செலவு செய்தல்:** கணவன் தன் மனைவிக்கு உணவு, பானம், உடை, உறைவிடம் ஆகியவற்றுக்காக நல்ல முறையில் செலவு செய்வது கடமை யாகும். இந்தக் கடமையில் ஏதாவது கஞ்சத்தனம் செய்தால் அவன் பாவி யாவான். இந்நேரத்தில் அவனின் பொருளில் போதுமானதை அவள் எடுத்துக் கொள்வதோ அல்லது அவன் பெயரில் கடன் வாங்கிக் கொள்வதோ அவளுக்குக் கூடும். அப்படி அவள் கடன் வாங்கி விட்டால் அவன் அதை நிறைவேற்றுவது அவசியமாகும்.

வலீமா விருந்தும் அவனுடைய செலவில் அடங்கும். வலீமா என்பது திருமண நாட்களில் கணவன் ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்து மக்களை அதற்கு அழைப் பதாகும். இது மார்க்கத்தில் கட்டளையிடப்பட்ட ஒரு சுன்னத்தாகும். ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் இந்த விருந்தைக் கொடுத்திருப்பதோடு இதைக் கொடுக்க வேண்டும் என்று ஏவியும் உள்ளார்கள்.

2. **சொத்துரிமை:** ஒருவன் ஒரு பெண்ணை எப்போது முறையாக திருமணம் செய்து கொண்டானோ அப்போதே அவர்கள் இருவருக்குமிடையே சொத்துரிமை ஏற்பட்டு விடுகிறது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَلَكُمْ نِصْفُ مَا تَرَكَ أَزْوَاجُكُمْ إِنْ لَمْ يَكُنْ لَهُنَّ وَلَدٌ فَإِنْ كَانَ لَهُنَّ وَلَدٌ فَلَكُمُ الرُّبُعُ مِمَّا تَرَكْنَ مِنْ بَعْدِ وَصِيَّةٍ يُوصِينَ بِهَا أَوْ دَيْنٍ وَلَهُنَّ الرُّبُعُ مِمَّا تَرَكْتُمْ إِنْ لَمْ يَكُنْ لَكُمْ وَلَدٌ فَإِنْ كَانَ لَكُمْ وَلَدٌ فَلَهُنَّ الثُّمُنُ مِمَّا تَرَكْتُمْ مِنْ بَعْدِ وَصِيَّةٍ تُوصُونَ بِهَا أَوْ دَيْنٍ﴾ [النساء:١٢]

“உங்கள் மனைவியர் விட்டுச் சென்ற சொத்தில், அவர்களுக்கு குழந்தைகள் இல்லையெனில் உங்களுக்குப் பாதி பாகமுண்டு. அவர்களுக்குக் குழந்தைகள் இருந்தால் அவர்கள் விட்டுச் சென்ற சொத்தில் நான்கில் ஒரு பாகம் உங்களுக் குரியது. (இதுவும்) அவர்கள் செய்திருக்கிற மரணசாசனத்தையும், கடனையும் நிறைவேற்றிய பின்னர் தான். இன்னும் உங்களுக்கு குழந்தைகள் இல்லை எனில் நீங்கள் விட்டுச் சென்ற சொத்தில் நான்கில் ஒரு பாகம் மனைவியர்க் குரியது.உங்களுக்குக் குழந்தைகள் இருந்தால் நீங்கள் விட்டுச் சென்ற சொத்தி லிருந்து எட்டில் ஒரு பாகம் அவர்களுக்குரியதாகும். (இதுவும்) நீங்கள் செய்தி ருக்கும் மரணசாசனத்தையும், கடனையும் நிறைவேற்றிய பின்னர்தான்.” (4:12)

இந்த சொத்துரிமையில் அவன் அவளுடன் உடலுறவு கொண்டாலும், உடலுறவு கொள்ளா விட்டாலும் எந்த வித்தியாசமுமில்லை.

**திருமணத்தின் சுன்னத்துகள், ஒழுங்குகள்**

1. திருமணத்தை பகிரங்கமாக அறிவிப்புச் செய்வதும், மணமக்களுக்கு துஆச் செய்வதும் சுன்னத்தாகும். மணமகன் அல்லது மணமகளுக்கு,

بَارَكَ اللهُ لَكَ وَبَارَكَ عَلَيْكَ وَجَمَعَ بَيْنَكُمَا فِيْ خَيْرٍ

"பாரக்கல்லாஹு லக வபாரக்க அலைக்க வஜமஅ பைனக்குமா ∴பீ ஹைர்" எனக் கூறவேண்டும். (பொருள்: அல்லாஹ் உமக்கு அகத்திலும் புறத்திலும் பரகத் செய்வானாக! நன்மையில் உங்கள் இருவரையும் ஒன்று சேர்ப்பானாக!.)

2. உடலுறவு கொள்ள விரும்பினால் بِسْمِ اللهِ اَللّٰهُمَّ جَنِّبْنَا الشَّيْطَانَ وَجَنِّبِ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا

"பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான வஜன்னிபிஷ் ஷைத்தான மா ரஸக்தனா" என இருவரும் கூறுவது சுன்னத்தாகும். (பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயரால் உறவு கொள்கிறேன். இறைவா! எங்களை ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பாயாக! மேலும் நீ எங்களுக்கு வழங்கிய குழந்தைகளையும் ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பாயாக!)

3. கணவன், மனைவி இருவரும் உடலுறவின்போது தங்களிடையே நடந்த விஷயங்களை வெளியே கூறுவது வெறுக்கத்தக்கதாகும்.

4. மாதவிடாய், பிரசவத் தீட்டு சமயத்திலும், அதிலிருந்து சுத்தமான பிறகு குளிப்பதற்கு முன்பும் மனைவியிடம் உடலுறவு கொள்வது ஹராமாகும்.

5. பெண்ணின் பின்துவாரத்தில் உடலுறவு கொள்வது ஹராமாகும். நிச்சயமாக இது இஸ்லாம் ஹராமாக்கிய பெரும்பாவங்களில் ஒன்றாகும்.

6. உடலுறவில் கணவன் தனது மனைவிக்குரிய உரிமையை முழுமையாக வழங்குவது கடமையாகும். மேலும் அவள் கர்ப்பமாவதை அவன் விரும்பாத போது அவன் அஸ்ல் செய்வதாக இருந்தாலும் அவளது அனுமதியின்றி செய்யக் கூடாது. அல்லது வேறு ஏதும் நிர்ப்பந்தம் இல்லாமல் அஸ்ல் செய்யக்கூடாது.

அஸ்ல் என்பது உடலுறவின்போது கருத்தரிப்பதைத் தவிர்ப்பதற்காக மேற்கொள்ளும் இயல்பான ஒரு வழிமுறையாகும். ஆணுறை, காப்பர்- டி போன்றவற்றை பயன்படுத்துவதும் இதன் அர்த்தத்தின் கீழ் வரும்.

### மனைவி எப்படி இருக்க வேண்டும்?

திருமணத்தின் நோக்கம் சுகம் அனுபவிப்பதும், நல்ல குடும்படுத்தையும் ஆரோக்கியமான சமுதாயத்தையும் உருவாக்குவதும் ஆகும். திருமணமாகக் கூடிய பெண் புற அழகும் அக அழகும் உள்ளவள் எனக் கூறத் தகுந்தவளாக இருந்தால் பெரும் நன்மையே விளையும். அல்லாஹ்வின் நல்லுதவியால் அதுவே பூரணமும், நற்பாக்கியமுமாகும். புற அழகு என்பது பரிபூரணமான உடலமைப்பு இருப்பதாகும். அக அழகு என்பது மார்க்கமும் நற்குணமும் பரிபூரணமாக இருப்பதாகும். ஆனாலும் நபி(ஸல்)அவர்கள் அறிவுறுத்தியது

போல அவள் மார்க்கப் பற்று உடையவளாக இருப்பது தான் மிக முக்கியமானது. இதுபோன்றே இறையச்சமுள்ள, நல்லொழுக்கமுள்ள ஆணை மணந்து கொள் வதற்கு பெண்ணும் ஆர்வம் காட்ட வேண்டும்.

**மணம் புரிவதற்கு விலக்கப்பட்ட பெண்கள்**

இவர்கள் இரு வகையினராவர்: நிரந்தரமாக விலக்கப்பட்டவர்கள், ஒரு குறிப்பிட்ட காலம் வரை விலக்கப்பட்டவர்கள்.

**நிரந்தரமாக விலக்கப்பட்டவர்கள்:**

இவர்கள் மூன்று வகையினர்.

**1. உறவு முறையால் விலக்கப்பட்டவர்கள்**

இவர்கள் ஏழு பேர்.

﴿ حُرِّمَتْ عَلَيْكُمْ أُمَّهَاتُكُمْ وَبَنَاتُكُمْ وَأَخَوَاتُكُمْ وَعَمَّاتُكُمْ وَخَالَاتُكُمْ وَبَنَاتُ الأَخِ وَبَنَاتُ الأُخْتِ ... ﴾ [النساء:٢٣]

அல்லாஹ் கூறுகிறான்: “உங்களுக்கு (மணமுடிக்க) விலக்கப்பட்டவர்கள் உங்கள் தாய்மார்கள், உங்கள் புதல்வியர், உங்கள் சகோதரிகள், உங்கள் தந்தையரின் சகோதரிகள், உங்கள் தாயின் சகோதரிகள், உங்கள் சகோ தரனின் புதல்வியர், உங்கள் சகோதரியின் புதல்வியர்....” (4:23)

1. **தாய்மார்கள்:** இவர்களில் தாயும்,தாய்,தந்தைவழிப் பாட்டியரும் அடங்குவர்.

2. **புதல்வியர்:** இவர்களில் சொந்தப் புதல்வியர்களும், மகன்வழிப் பேத்திகளும் மகள்வழிப் பேத்திகளும் அடங்குவர். இப்படியே எத்தனை தலைமுறை இறங்கிச் சென்றாலும் அனைவரும் அடங்குவர்.

3. **சகோதரிகள்:** இவர்களில் உடன்பிறந்த சகோதரிகளும், தாய்வழி, தந்தை வழிச் சகோதரிகளும் அடங்குவர்.

4. **மாமியர்** (தந்தையரின் சகோதரிகள்): இவர்களில் அவனுடைய மாமியரும், அவனது தகப்பன், பாட்டன்களின் மாமியரும், அவனின் தாய், பாட்டியரின் மாமியரும் அடங்குவர்.

5. **சிற்றன்னையர், பெரியன்னையர்** (தாயின் சகோதரிகள்): இவர்களில் அவனின் சிற்றன்னையரும், பெரியன்னையரும் அவனுடைய தந்தை, பாட்டனின் சிற்றன் னையரும், பெரியன்னையரும், அவனுடைய தாய், பாட்டியரின் சிற்றனையரும், பெரியன்னையரும் அடங்குவர்.

6. **சகோதரனின் புதல்வியர்:** உடன் பிறந்த சகோதரனின் புதல்வியரும், தந்தை வழிச் சகோதரனின் புதல்வியரும், தாய்வழிச் சகோதரனின் புதல்வியரும்,

இவர்களின் புதல்வர்களின் புதல்வியரும், புதல்வியர்களின் புதல்வியர்களும் இப்படியே எத்தனை தலைமுறை இறங்கிச் சென்றாலும் அனைவரும் அடங்குவர்.

7. **சகோதரியின் புதல்வியர்:** இவர்களில் உடன் பிறந்த சகோதரியின் புதல்வியரும், தாய், தந்தைவழிச் சகோதரியின் புதல்வியரும், இவர்களின் புதல்வியரின் புதல்வியரும், அவர்களின் புதல்வியரின் புதல்வியரும் இப்படியே எத்தனை தலைமுறை இறங்கிச் சென்றாலும் அனைவரும் அடங்குவர்.

**2. பால்குடியினால் விலக்கப்பட்டவர்கள்**

இவர்கள் உறவு முறையால் விலக்கப்பட்டவர்கள் போன்று தான்.

((يَحْرُمُ مِنْ الرَّضَاعِ مَا يَحْرُمُ مِنْ النَّسَبِ)) (خ/ ٢٦٤٥، م/ ١٤٤٧)

“உறவு முறையில் விலக்கப்பட்டோர் பால்குடி உறவிலும் விலக்கப்பட்ட வர்களே!” என்பது நபிமொழி. நூல்: புகாரி(2645), முஸ்லிம்(1447)

எனினும் பால்குடியினால் விலக்கப்படுவதற்கு சில நிபந்தனைகள் உள்ளன. அவை வருமாறு:

1. ஐந்து அல்லது அதற்கு அதிகமான தடவைகள் வாய் வைத்து பால் குடித்திருக்க வேண்டும். ஒரு குழந்தை ஒரு பெண்ணிடம் ஒரு தடவையில் நான்கு மிடர் பால் குடித்திருந்தால் அவள் அவனுக்குத் தாயாக மாட்டாள்.

2. பால்குடி மறப்பதற்கு முன் பால் குடித்திருக்க வேண்டும். அதாவது அந்த ஐந்து தடவையும் பால்குடி மறப்பதற்கு முன்பாக இருக்க வேண்டும். அதற்குப் பின்னராக இருந்தால் அல்லது சில தடவைகள் பால்குடி மறப்பதற்கு முன்பும் சில தடவைகள் பால்குடி மறந்த பின்புமாக இருந்தால் அவள் அக்குழந்தைக்கு தாயாக மாட்டாள்.

பால்குடியின் இந்த நிபந்தனைகள் பரிபூரணமாகிவிட்டால் அக்குழந்தை அப்பெண்ணுக்கு பிள்ளையாகிவிடுகிறது. அவளின் பிள்ளைகள் இக்குழந்தைக்கு உடன்பிறந்தவர்களாகிவிடுகிறார்கள். அப்பிள்ளைகள் இக்குழந்தை பால்குடிக்கும் முன் பிறந்திருந்தாலும் சரி அல்லது அதற்குப் பிறகு பிறந்திருந்தாலும் சரி. பாலூட்டியவளின் கணவனின் பிள்ளைகளும் இக்குழந்தைக்கு உடன்பிறந்தவர் களாகிவிடுகிறார்கள். அப்பிள்ளைகள் இவனுக்கு பாலூட்டியவளின் பிள்ளைகளாக இருந்தாலும் சரி அல்லது மாற்றாந்தாயின் பிள்ளைகளாக இருந்தாலும் சரி.

இந்த இடத்தில் ஒன்றை நாம் அறிந்து கொள்வது அவசியமாகிறது. அதாவது பால் குடித்த குழந்தையின் உறவினர்களில் அதனுடைய சந்ததியினரைத் தவிர வேறு யாருக்கும் அந்த பால்குடியில் சம்பந்தமில்லை. அதனால் எவ்வித மாறுதலும் ஏற்படாது.

### 3. திருமண உறவால் விலக்கப்பட்டவர்கள்

1. **தகப்பன், பாட்டனின் மனைவியர்:** ஒருவன் எப்போது ஒரு பெண்ணைத் திருமண ஒப்பந்தம் செய்துவிடுகிறானோ அப்போதே அப்பெண் அவன் மகன் களுக்கும், மகனுடைய மகன்களுக்கும், மகளுடைய மகன்களுக்கும் இப்படியே எத்தனை தலைமுறை இறங்கிச் சென்றாலும் அவர்கள் அனைவருக்கும் ஹராமாகிவிடுகிறாள். அவளுடன் அவன் உடலுறவு கொண்டாலும் சரி, உடலுறவு கொள்ளாம லிருந்தாலும் சரி.

2. **மகன்களின் மனைவியர்:** ஒருவன் எப்போதுஒருத்தியைத் திருமண ஒப்பந்தம் செய்துவிடுகிறானோ அப்போதே அவனின் தகப்பன், பாட்டன்கள் இப்படியே எத்தனை தலைமுறையானாலும் அவர்களுக்கு இத்திருமண ஒப்பந்தத்தினால் மட்டுமே அவள் ஹராமாகிவிடுகிறாள். இவர்கள் தந்தை வழியிலுள்ளவர்க ளானாலும் சரி, தாய் வழியிலுள்ளவர்களானாலும் சரி. அவளுடன் அவன் உடலுறவு கொள்ளாவிட்டாலும் சரி.

3. **மனைவியின் தாயும், அவளது பாட்டிகளும்:** ஒருவன் ஒரு பெண்ணை எப்போது திருமண ஒப்பந்தம் செய்து விடுகிறானோ அப்போதே அத்திருமண ஒப்பந்தத் தினால் மட்டும் அவளுடைய தாயும் பாட்டிகளும் அவனுக்கு ஹராமாகி விடுகிறார்கள். அவளுடன் அவன் உடலுறவு கொள்ளவில்லை யென்றாலும் சரி. அப்பாட்டிகள் தகப்பன் வழியாயினும் சரி அல்லது தாய் வழியாயினும் சரி.

4. **மனைவியின் மகள்களும், அவளின் மகன்கள் மற்றும் மகள்களின் மகள்களும் இவர்கள் எத்தனை தலைமுறையானாலும் சரி:** ஒருவன் ஒரு பெண்ணை மண முடித்து அவளுடன் எப்போது உடலுறவு கொண்டுவிடுகிறானோ அப்போதே இவர்கள் அவனுக்கு ஹராமாகிவிடுகிறார்கள். இவர்கள் இவன் மணமுடிப்பதற்கு முன் பிறந்தவர்களாக இருந்தாலும் சரி அல்லது அதற்குப் பின் பிறந்தவர்களாக இருந்தாலும் சரி. அவர்கள் இருவருக்குமிடையே உடலுறவுக்கு முன்பே பிரிவு ஏற்பட்டு விட்டால் இவர்கள் அவனுக்கு ஹராமாகமாட்டார்கள்.

### ஒரு குறிப்பிட்ட காலம் வரை விலக்கப்பட்டவர்கள்

இவர்கள் பல வகையினர்.

1. **மனைவியின் சகோதரி, அவளது தந்தையின் சகோதரி மற்றும் தாயின் சகோதரி:** மனைவி மரணமடையும் வரை அல்லது மணவிலக்கால் அவளைப் பிரிந்து இத்தா முடிவடையும் வரை இவர்கள் அவனுக்கு ஹராமாவார்கள்.

2. **கணவன் மரணம் அடைந்ததால் இத்தா இருப்பவள்:** அதாவது ஒரு பெண் தனது கணவன் இறந்ததற்காக இத்தா இருந்து கொண்டிருந்தால் அவளது

இத்தா காலம் முடியும் வரை அவளை மண முடிப்பதும் பெண் கேட்டுச் செல்வதும் கூடாது.

3. **ஹஜ், உம்ராவிற்காக இஹ்ராம் கட்டியிருப்பவள்:** இவள் இஹ்ராமிலிருந்து விடுபடும் வரை இவளை மண முடிப்பது கூடாது.

**தலாக்- விவாகரத்து**

தலாக் கூறுவது அடிப்படையில் வெறுக்கத்தக்கதாகும். எனினும் ஒரு பெண் தன் கணவனுடன் வாழ்க்கையைத் தொடர்வதால் துன்பத்திற்கு ஆளாகிறாள், அல்லது ஒரு கணவன் தன் மனைவியுடன் வாழ்க்கையைத் தொடர்வதால் துன்பத்திற்கு ஆளாகிறான் எனும்போது- அல்லது வேறு காரணங்களுக்காக- சில நேரங்களில் விவாகரத்து அவசியமாகிறதபோது அல்லாஹ் தன் அடியார் களுக்கு விவாகரத்தை ஆகுமாக்கி இருப்பது அவனது அருளில் ஒன்றாகும். எனவே இப்படி ஏதாவது ஒரு காரணம் ஏற்பட்டால் அவளை தலாக் சொல்வதில் குற்றமில்லை. எனினும் பின்வரும் ஒழுங்குமுறைகளைப் பேணுவது அவசியம்.

1. மாதவிடாய் காலத்தில் தலாக் சொல்லக் கூடாது. அவ்வாறு தலாக் சொல்லி விட்டால் அவன் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்தவனாகவும், விலக்கப்பட்ட ஒன்றை (ஹராமை) செய்தவனாகவும் ஆகி விடுகிறான். இந்த நேரத்தில் அவளை அவன் திரும்ப அழைத்துக் கொண்டு அவள் தூய்மையாகும் வரை தன்னுடன் வைத்துக் கொள்வது கடமையாகும். அதன் பிறகு அவன் விரும்பினால் அவளைத் தலாக் சொல்லலாம். ஆயினும் சிறந்தது எதுவெனில் அவளுக்கு இரண்டாம் முறை மாதவிடாய் ஏற்படும் வரை அவளை விட்டு வைக்க வேண்டும். அதன் பிறகு அவள் அதிலிருந்து தூய்மை யானதும் அவன் விரும்பினால் அவளைத் தன்னுடன் வைத்துக் கொள்ளலாம். விரும்பினால் அவளை விவாகரத்து செய்து விடலாம்.

2. அவள் தூய்மையாக இருக்கும்போது அவளுடன் உடலுறவு கொண்ட நிலையில் தலாக் சொல்லக் கூடாது. அவள் கருவுற்றிருப்பது தெளிவானாலே தவிர! ஒருவன் தன் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்து தூய்மைமான பிறகு அவளிடம் உடலுறவு கொண்டு பிறகு தலாக் சொல்ல விரும்பினால் மீண்டும் அவளுக்கு மாதவிடாய் வந்து அதிலிருந்து தூய்மையாகாத வரை அவளை தலாக் விடக்கூடாது. அதனால் நாட்கள் அதிகமானாலும சரியே. அவள் தூய்மை யாகிவிட்டால் அவளிடம் உடலுறவு கொள்வதற்கு முன் விரும் பினால் அவளை தலாக் சொல்லலாம். ஆனால் அவள் கருவுற்றிருப்பது தெளிவாகிவிட்டால் அல்லது அவள் கர்ப்பிணியாக இருந்தால் அவளை தலாக் விடுவதில் குற்றமில்லை.

**தலாக்கினால் ஏற்படும் விளைவுகள்**

தலாக் என்பது மனைவியை பிரிந்துவிடுவது என்றாகிவிட்டபோது அப்படி பிரிவதன் விளைவால் அநேக சட்ட நிலைகள் ஏற்படுகின்றன. அவை வருமாறு:

1- கணவன் தன் மனைவியிடம் தனித்திருந்த பிறகு அல்லது உடலுறவு கொண்ட பிறகு தலாக் சொன்னால் அவள் இத்தா இருப்பது அவசியமாகும். அவளுடன் அவன் உடலுறவு கொள்வதற்கு முன்போ அல்லது தனித்திருப்பதற்கு முன்போ அவன் தலாக் சொல்லியிருந்தால் இத்தா வேண்டியதில்லை.

- இத்தா என்பது மாதவிடாய் வரக்கூடிய பெண்ணாக இருந்தால் மூன்று மாதவிடாய்களும், மாதவிடாய் வராத வளாக இருந்தால் மூன்று மாதங்களும் காத்திருப்பதாகும். கர்ப்பமுற்றவளாக இருந்தால் குழந்தையைப் பெற்றெடுப்பது வரை காத்திருக்க வேண்டும்.

- இத்தாவின் நோக்கம் தலாக் சொல்லப்பட்டவளை திரும்ப அழைத்துக் கொள்வதற்கான சந்தர்ப்பத்தைக் கணவனுக்கு வழங்குவதாகும். அதுபோல அவள் கருவுற்றிருக்கிறாளா? இல்லையா? என்பதை உறுதி செய்வதுமாகும்.

2. ஒருவன் தனது மனைவியை இதற்கு முன்பு இரண்டு தடவைகள் தலாக் சொல்லியிருந்தால் அவனுக்கு அவள் ஹராமாகிவிடுகிறாள். அதாவது ஒருவன் தனது மனைவியை ஒரு தடவை தலாக் சொல்லிவிட்டு இத்தா காலத்திலேயே அவளை திரும்ப அழைத்துக் கொள்கிறான் அல்லது இத்தா முடிந்து திருமணத்தைப் புதுப்பித்துக்கொள்கிறான். அதன் பிறகு இரண்டாம் முறை தலாக் சொல்லிவிட்டு இத்தா காலத்திலேயே திரும்ப அழைத்துக் கொள்கிறான் அல்லது இத்தா முடிந்து திருமணத்தைப் புதுப்பித்துக் கொள்கிறான். பிறகு மூன்றாம் முறை தலாக் சொல்லி விட்டால் அவன் அப்பெண்ணை மணந்து கொள்ள முடியாது. ஆனால் அவள் வேறொருவனை முறையாகத் திருமணம் செய்து, அவன் அவளுடன் உடலுறவு கொண்டு பிறகு அவளை அவன் விரும் பாமல் தலாக் கூறினால் இப்போது அவள் முதல் கணவனுக்கு ஹலாலாகி விடுகிறாள். மூன்று முறை தலாக் விட்டவன் மீது அப்பெண்ணை அல்லாஹ் ஹராமாக்கியிருப்பது கணவன்மார்கள் செய்யும் அநீதியைத் தடுத்து பெண் களுக்கு அல்லாஹ் கிருபை செய்திருப்பதாகும்.

**குலஃ**

இது ஒரு பெண் தனக்குப் பிடிக்காத கணவனை விட்டும் விலகுவதற்காக அவன் கொடுத்த மஹ்ரைத் திருப்பிக் கொடுத்து விவாகரத்தை வேண்டுவதாகும். கணவன் அவளை வெறுத்து அவளைப் பிரிந்துவிட விரும்பினால் அவளிடம்

இருந்து மஹர் தொகையை வாங்க உரிமை கிடையாது. அவனுக்குரிய உரிமை அவளிடம் பொறுமையாகயிருப்பது அல்லது அவளை விவரகரத்துச் செய்து விடுவதுதான்.

தன் மனைவி தன்னிடம் விவாகரத்துக் கோர வேண்டுமென்பதற்காக கணவன் அவளைத் துன்புறுத்தக் கூடாது என்பது போல மனைவி அவனால் துன்பம் அடைந்து அவனுடன் பொறுமையாக இருக்க முடியவில்லை என்றால் தான் விவாகரத்தைக் கோரவேண்டும். கணவன் அவளுக்கு கொடுத்த மஹரை விடவும் கூடுதலாக அவளிடம் வாங்குவது வெறுக்கத்தக்கதாகும்.

**திருமணத்தில் நீடிப்பதற்கான அல்லது அதை முறிப்பதற்கான அதிகாரம்**

கணவன், மனைவி இருவருக்கும் திருமண ஒப்பந்தத்தை தக்க வைத்துக் கொள்வதற்கும் ஏதேனுமொரு காரணத்திற்காகத் திருமணத்தை ரத்து செய்வதற்கும் அதிகாரம் இருக்கிறது. உதாரணமாக கணவன் மனைவியிடம் நோயையோ, அல்லது இயற்கையான குறையையோ காண்கிறான். அல்லது மனைவி கணவனிடம் இதுபோன்ற குறையைக் காண்கிறாள். திருமண ஒப்பந்த நேரத்தில் இக்குறையை அவர்களிடம் சொல்லப்படவில்லை எனில் இந்நேரத்தில் இருவருக்கும் திருமண ஒப்பந்தத்தைத் தக்க வைத்துக் கொள்ளவோ முறித்து விடவோ அதிகாரம் இருக்கிறது. உதாரணமாக,

1. அவ்விருவரில் ஒருவர் பைத்தியமாக இருக்கிறார் அல்லது ஒருவர் மற்றவருக்கு திருமணத்தினுடைய முழு உரிமையையும் கொடுக்க முடியாத அளவுக்கு நோயாளியாக இருக்கிறார். இந்த நேரத்தில் பாதிக்கப்பட்டவருக்கு திருமணத்தை முறித்துவிடுவதற்கு அதிகாரம் இருக்கிறது. இது (பாதிக்கப் பட்டவன் கணவனாக இருக்கும் பட்சத்தில் திருமணத்தை முறிப்பது) உடலுறவுக்கு முன்பாக இருக்குமானால் கணவன் அவளுக்குக் கொடுத்த மஹரைத் திரும்பப் பெற்றுக் கொள்வது கூடும்.

2. நிர்ணயிக்கப்பட்ட மஹர் கொடுக்க இயலாமலாகி விடுவது! இந்த நேரத்தில் திருமண ஒப்பந்தத்தை முறிப்பதில் பெண்ணுக்குரிய உரிமை உடலுறவுக்கு முன் தான். உடலுறவுக்குப் பிறகு அந்த உரிமை இல்லை.

3. அவளுக்கு செலவு செய்ய வசதியில்லாமலாகிவிடுவது. ஒருவன் அவளுக்கு செலவு செய்ய வசதியில்லாமலாகி விட்டால் அவள் முடிந்த அளவு எதிர்பார்க்க வேண்டும். பிறகு நீதிமன்றத்தை அணுகி திருமணத்தை முறித்துக் கொள்ள அவளுக்கு உரிமை உண்டு.

4. கணவன் காணாமல் போய் அவன் இருக்குமிடம் தெரியவுமில்லை, தனது மனைவிக்கான செலவை விட்டு வைத்திருக்கவுமில்லை, அவளுக்குச் செலவு செய்யும்படி யாரையும் பொறுப்பாக்கவுமில்லை, யாரும் அவளுக்கு செலவு செய்ய முன்வரவுமில்லை, அவளுக்குச் செலவு செய்துவிட்டு பின்னர் அவளது கணவனிடம் அத்தொகையை வாங்கிக் கொள்பவரும் இல்லை எனில் இது போன்ற சந்தர்ப்பங்களில் ஷரீஅத் நீதிபதியின் மூலம் திருமணத்தை ரத்து செய்ய அவள் உரிமை பெறுகிறாள்.

**முஸ்லிமல்லாதவரைத் திருமணம் செய்தல்**

யூத, கிறிஸ்தவரல்லாத நிராகரிப்புக் கொள்கையுடைய பெண்ணை மணம் புரிவது முஸ்லிமுக்கு விலக்கப்பட்டதாகும். மேலும் முஸ்லிம் பெண் முஸ்லிமல்லாதவனை மணப்பதும் கூடாது. அவன் யூத, கிறிஸ்தவனாக இருந்தாலும் சரி இல்லா விட்டாலும் சரியே! ஒரு பெண் தனது கணவனுக்கு முன்பே முஸ்லிமாகி விட்டால் தன்னை சுகம் அனுபவிக்க தன் கணவனுக்கு இடமளிக்கக் கூடாது. இதோ முஸ்லிமல்லாதவர்களை மண முடிப்பதோடு மட்டும் தொடர்புடைய சில சட்டங்கள்:

1. கா.ஃ.பிரான கணவன், மனைவி இருவரும் இஸ்லாத்தைத் தழுவிவிட்டால் பழைய திருமணத்திலேயே அவ்விருவரும் நீடிக்கலாம்- எப்போதெனில் அத்திருமணத்திற்கு மார்க்க ரீதியான தடை இல்லாதபோது. உதாரணமாக அப்பெண் அவனுக்கு (சகோதரியின் மகள் போன்ற) மணம் முடிக்க விலக்கப் பட்டவளாக இருக்கின்றாள், அல்லது அவளை மணப்பது அவனுக்கு அனுமதி யில்லாத நிலையில் இருக்கின்றாள் எனில் இந்த நேரத்தில் அவ்விருவரையும் பிரித்து வைக்கப்படும்.

2. வேதக்காரப் பெண்ணின் கணவன் இஸ்லாத்தைத் தழுவினால் அவர்கள் இருவரும் பழைய திருமணத்திலேயே இருந்து கொள்ளலாம்.

3. வேதக்காரர்கள் அல்லாத கணவன், மனைவி இருவரில் ஒருவர் உடலுற வுக்கு முன் இஸ்லாத்தைத் தழுவிவிட்டால் அவர்களின் நிகாஹ் முறிந்துவிடும்.

4. வேதக்காரனாக இருந்தாலும் சரி மற்றவனாக இருந்தாலும் சரி முஸ்லிம் அல்லாதவனின் மனைவி உடலுறவுக்கு முன் முஸ்லிமாகி விட்டால் திருமணம் முறிந்துபோகும். ஏனெனில் முஸ்லிம் பெண் கா.ஃ.பிருக்கு ஹலாலாக மாட்டாள்.

5. கா.ஃ.பிரின் மனைவி உடலுறவுக்குப் பின் முஸ்லிமாகி விட்டால் இத்தா முடியும் வரை அவளின் விஷயம் நிறுத்தி வைக்கப்படும். இத்தா முடிந்த பின்னும் அவன் இஸ்லாத்தைத் தழுவாவிட்டால் திருமணம் முறிந்துபோகும். பிறகு அவள்

யாரை விரும் புகிறாளோ அவரை மணந்து கொள்ளலாம். அவள் விரும்பினால் இஸ்லாத்தைத் தழுவும் வரை அவனை அவள் எதிர்பார்த்திருக்கலாம். இந்த இடைக்காலத்தில் அவளுக்கு அவனிடம் எந்த உரிமையுமில்லை. இதுபோன்றே அவனுக்கும் அவளிடம் எந்த உரிமையும் கிடையாது.அவன் முஸ்லிமாகிவிட்டால் திருமணத்தைப் புதுப்பிக்காமலேயே அவன் அவளுக்கு கணவனாகி விடுவான். அவள் அவனை பல ஆண்டுகள் எதிர்பார்த்தாலும் சரி. வேதம் கொடுக்கப்பட்ட பெண் அல்லாதவளின் கணவன் முஸ்லிமானாலும் இதே சட்டம் தான்.

6. உடலுறவுக்கு முன்பே மனைவி இஸ்லாத்தை விட்டும் மாறிவிட்டால் திருமணம் முறிந்துவிடும். அவளுக்கு மஹரும் கிடையாது. இதேபோல் கணவன் இஸ்லாத்தை விட்டும் மாறிவிட்டால் திருமணம் முறிந்துவிடும். அவன் பாதி மஹர் கொடுக்க வேண்டும். அவ்விருவரில் இஸ்லாத்தை விட்டும் வெளியேறிய ஒருவர் இஸ்லாத்தில் இணைந்து விட்டால் அவர்களிருவருக்கிடையே தலாக் ஏற்படாம லிருந்தால் முந்தைய திருமணத்தின் அடிப்படையிலேயே அவர்களிருவரும் இருந்து கொள்வார்கள்.

**வேதக்காரப் பெண்களை மணப்பதன் தீங்குகள்**

அல்லாஹ் திருமணத்தை அனுமதித்திருப்பதன் நோக்கம் பண்பாட்டைச் சீர்படுத்துவதும், சீர்கேடுகளிலிருந்து சமுதாயத்தைத் தூய்மைப்படுத்துவதும், கற்புநெறியைப் பாதுகாத்துக்கொள்வதும், சமூகத்தில் தூய்மையான இஸ்லாமிய கட்டுக்கோப்பை நிலை நிறுத்துவதும், வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, முஹம்மது நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத் தூதரென சான்று பகரக்கூடிய சமுதாயத்தைத் தோற்றுவிப்பதும்தான். மார்க்கப் பற்றும், சிறப்பும், நற்குணமும், நல்லொழுக்கமும் உள்ள பெண்ணை மண முடிப்பதன் மூலம்தான் இதுபோன்ற சீர்திருத்தங்கள் ஏற்படும். வேதக்காரப் பெண்ணை ஒரு முஸ்லிம் மணப்பதால் ஏற்படும் விளைவுகளையும் தீங்கு களையும் நாம் சுருக்கமாகக் கீழே தருகிறோம்.

1. **குடும்பத்தினுள்:** சிறிய குடும்பத்திற்குள் கணவன் செல்வாக்கு உள்ளவனாக இருந்தால் பெண்ணிடம் மாற்றம் ஏற்பட்டு, அவள் இஸ்லாத்தைத் தழுவிவிடலாம் எனப் பெரிதும் எண்ணலாம். சில சமயம் இதற்கு மாறான நிலையும் உருவாகலாம். அப்பெண் இஸ்லாத்தை விடுத்து தனது மார்க்கத்தைப் பற்றிப் பிடிப்பவளாக இருந்து மது அருந்துதல், பன்றி இறைச்சி உண்ணுதல், கள்ளக் காதலனை வைத்துக் கொள்ளல் போன்றவற்றை தனது மார்க்கம் அனுமதிக் கிறது என எண்ணிச் செயல்படுபவளாகவும் ஆகிவிடலாம். இதனால் அவளும்

அவளது குடும்பமும் சிதறுண்டு, பண்பாடுகள் கட்டவிழ்ந்துபோகும். குழந்தைகள் தீய வழியில் வளர்ந்துவிடுவார்கள்.

சில சமயம் நிலைமை மேலும் மோசமாகிவிடும். மதமாச்சரியமும் பிடிவாதமும் உள்ள மனைவி தன் குழந்தைகளை வேண்டுமென்றே சர்ச்சுகளுக்கு அழைத்துச் சென்றால் கிறிஸ்தவர்களின் வணக்கமுறைகளை அவர்களும் பழகிக் கொள் வார்கள். இளமையில் வருவது தான் முதுமையிலும் வரும்.

2. **சமூகத்தில் ஏற்படும் விளைவுகள்:** முஸ்லிம் சமுதாயத்தினுள் வேதக்காரப் பெண்கள் அதிகரிப்பது ஆபத்தான விஷயமாகும். ஏனெனில் இப்பெண்கள் இஸ்லாமிய சமுதாயத்தினுள் சிந்தனை ரீதியான யுத்தத்திற்குக் காரணமாக ஆகிவிடுவார்கள். இன்னும் இதைத் தொடர்ந்து சமுதாயக் கட்டுப்பாடுகளும் பண்பாடுகளும் சீர்குலைந்து போய்விடுவதோடு கிறிஸ்தவக் கலாச்சாரங்களும் நுழைந்து விடுகின்றன. இவற்றின் பட்டியலில் முதல் வரிசையில் இருப்பது அறை குறை ஆடைகளுடன் ஆண்களும், பெண்களும் கலந்துறவாடும் பழக்கமும், இஸ்லாமிய போதனைகளுக்கு மாற்றமான சில பழக்கங்களும் தான்!

# كتاب المرأة المسلمة

# முஸ்லிம் பெண்மணிக்குரிய சட்டங்கள்

## இஸ்லாத்தில் பெண்கள் நிலை

இஸ்லாத்தில் பெண்களுக்கிருக்கிற உரிமைகள் பற்றிப் பேசுவதற்கு முன் பெண்களை மற்ற சமூகத்தினர் எப்படி நடத்திக் கொண்டிருந்தார்கள் என்பதைத் தெளிவுபடுத்துவது அவசியமாகும்.

கிரேக்கர்கள் பெண்களை வியாபாரப் பொருட்களாகவே கருதினர். அவர்களுக்கென எந்த உரிமையும் கிடையாது. உரிமைகள் அனைத்தும் ஆண்களுக்கே என்றனர். இன்னும் அப்பெண்களுக்குச் சொத்துரிமை, கொடுக்கல், வாங்கல் போன்ற உரிமைகள் தடுக்கப்பட்டிருந்தன. அவர்களில் பிரபலமான தத்துவஞானி சாக்ரடீஸ் என்பவன், “பெண்கள் இருப்பது உலகின் வீழ்ச்சிக்கு மிகப்பெரும் மூலகாரணமாகும். மேலும் அவர்கள் புறத்தோற்றம் அழகாக இருக்கும் விஷ மரத்திற்கு ஒப்பானவர்கள். எனினும் அதன் கனிகளை சிட்டுக்குருவிகள் தின்றவுடனேயே இறந்து விடுகின்றன” என்று கூறியுள்ளான்.

ரோமானியர்கள் பெண்களுக்கு ஆன்மா கிடையாது என்று கருதியிருந்தனர். அவர்களிடம் பெண்களுக்கு எந்த மதிப்பும் உரிமையும் இருந்ததில்லை. “பெண்களுக்கு ஆன்மா கிடையாது” என்பது அவர்களிடம் ஒரு சுலோகமாக இருந்தது. இதனால்தான் அவர்களின் உடலில் கொதிக்கின்ற எண்ணெயை ஊற்றியும், அவர்களைத் தூண்களில் கட்டியும் வேதனை செய்தார்கள். இது மட்டுமின்றி குற்றமற்ற பெண்களை குதிரைகளின் வால்களில் கட்டி அவர்கள் மரணித்துப் போகின்ற அளவிற்கு மிக விரைவாக ஓட்டிவிடுவார்கள்.

பெண்கள் விஷயத்தில் இந்தியர்களின் கண்ணோட்டமும் இவ்வாறு தான் இருந்துள்ளது. அவர்கள் இன்னும் ஒரு படி அதிகமாக கணவன் இறந்து விட்டால் அவனின் சிதையுடன் மனைவியையும் எரித்துவிடுபவர்களாகவும் இருந்திருக்கின்றனர்.

சீனர்கள் பெண்களை நற்பாக்கியத்தையும், செல்வங்களையும் அழித்துவிடக் கூடிய தண்ணீருக்கு ஒப்பாக்கினர். அவர்கள் தம் மனைவியரை உயிரோடு புதைத்து விடுவதற்கும் விற்றுவிடுவதற்கும் உரிமை பெற்றிருந்தனர்.

பெண்கள் சாபத்திற்குரியவர்களென யூதர்கள் கருதுகிறார்கள். ஏனெனில் அவள் தான் ஆதம்(அலை) அவர்களை வழிகெடுத்து அந்த மரத்தைச் சாப்பிடச் செய்தாள். மேலும் பெண்ணுக்கு மாதவிடாய் வந்துவிட்டால் அவள் அசுத்தமானவள், வீட்டையும் அவள் தொடும் பொருளையும் அசுத்தப்படுத்திவிடக் கூடியவள் எனவும் கருதுகிறார்கள். பெண்ணுக்குச் சகோதரர்கள் இருந்தால் அவள் தன் தந்தையின் சொத்தில் சிறிதும் உரிமை பெறமாட்டாள் எனவும் கருதுகிறார்கள்.

கிறிஸ்தவர்கள் பெண்களை ஷைத்தானாகக் கருதுகிறார்கள். கிறுத்தவ அறிஞர்களில் ஒருவர் ‘பெண் மனித இனத்தைச் சார்ந்தவளல்ல’ எனக் கூறினர். இன்னும் புனித பூனபெ.்.ன்தூரா என்பவன் கூறினான்: “நீங்கள் பெண்களைக் கண்டால் அவளை மனித இனத்தைச் சார்ந்தவள் எனக் கருதிவிடாதீர்கள். அது மட்டுமல்ல அவளை ஒரு உயிருள்ள ஜீவனாகக் கூட கருதாதீர்கள். மாறாக நீங்கள் காண்பது நிச்சயமாக ஷைத்தானின் உருவத்தைத்தான். இன்னும் நீங்கள் செவியேற்கும் அவளது சப்தம் பாம்பின் சீற்றம் தான்”

மேலும் கடந்த (19ஆம்) நூற்றாண்டின் நடுப்பகுதி வரை ஆங்கிலேய பொதுச் சட்டப்படி பெண்கள் பிரஜா உரிமை கொடுக்கப்படாதவர்களாக இருந்தனர். இது போன்றே பெண்களுக்கென தனிப்பட்ட உரிமைகள் எதுவும் கிடையாது. இன்னும் அவள் அணியும் ஆடை உட்பட எந்தப் பொருளையும் சொந்தப்படுத்திக் கொள்ளவும் உரிமை கிடையாது.

1567 ஆம் ஆண்டு ஸ்காட்லண்ட் பாராளுமன்றம் பெண்களுக்கு எந்த அதிகாரமும் கொடுக்கக் கூடாதென சட்டம் இயற்றியது. இவ்வாறே எட்டாவது ஹென்றியின் காலத்தில் ஆங்கிலேயப் பாராளுமன்றம் பெண்கள் அசுத்தமான வர்கள் என்பதால் இன்ஜீலைப் படிக்கக் கூடாதென சட்டம் இயற்றியது.

பிரஞ்சுக்காரர்கள் 586 ஆம் ஆண்டில் பெண்கள் மனித இனத்தைச் சார்ந்த வர்களா? இல்லையா? என ஆய்வு செய்து முடிவெடுக்க ஒரு சபையை அமைத்தனர். அச்சபை பெண்கள் மனித இனத்தைச் சார்ந்தவர்கள் தான். எனினும் அவர்கள் ஆண்களுக்குப் பணிவிடை செய்வதற்காகவே படைக்கப் பட்டவர்களென முடிவு செய்தது.

1805 ஆம் ஆண்டு வரை ஆங்கிலேயரின் சட்டத்தில் ஒரு கணவன் தனது மனைவியை விற்பது கூடுமென்றே இருந்துள்ளது. மனைவியின் விலை ஆறு பெனி (அரை ஷிலிங்) என நிர்ணயமும் செய்யப்பட்டது. (பெனி, ஷிலிங் என்பது ஆங்கிலேய நாணயத்தின் பெயர்கள்)

இஸ்லாத்திற்கு முன்பு வரை அரேபியர்களிடத்தில் பெண்கள் இழிந்த பிறவிகளாக இருந்தனர். அவளுக்கு சொத்துரிமை கிடையாது. அவர்களை ஒரு பொருட்டாகக் கருதப்பட மாட்டாது. அவர்களுக்கு எந்த உரிமையும் கிடையாது.

மட்டுமல்லாமல் அவர்களில் பெரும்பாலோர் தம் பெண் மக்களை உயிருடன் புதைப்பவர்களாக இருந்திருக்கின்றனர்.

இவ்வனைத்து கொடுமைகளையும் பெண்களை விட்டும் துடைத்தெறிவதற் காகவும் ஆண்களும் பெண்களும் சமமானவர்கள் தான் என்பதை விளக்கு

வதற்காகவும்தான் இஸ்லாம் வந்தது. எனவே ஆண்களுக்கு உரிமைகளிருப்பது போல் பெண்களுக்கும் உரிமைகள் இருக்கின்றன. அல்லாஹ் கூறுகிறான்:

﴿يَا أَيُّهَا النَّاسُ إِنَّا خَلَقْنَاكُمْ مِنْ ذَكَرٍ وَأُنْثَى وَجَعَلْنَاكُمْ شُعُوبًا وَقَبَائِلَ لِتَعَارَفُوا إِنَّ أَكْرَمَكُمْ عِنْدَ اللهِ أَتْقَاكُمْ إِنَّ اللهَ عَلِيمٌ خَبِيرٌ﴾ [ الحجرات:١٣]

“மனிதர்களே! உங்களை ஓர் ஆண், பெண்ணில் இருந்தே நாம் படைத்தோம். பின்னர் நீங்கள் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்வதற்காக உங்களைப் பல கிளைகளாகவும் கோத்திரங்களாகவும் ஆக்கினோம். உங்களில் (இறைவனை) அதிகம் அஞ்சுவோரே அல்லாஹ்விடம் அதிகம் சிறந்தவர். அல்லாஹ் நன்கறி பவன், (யாவற்றையும் சூழ்ந்து) தெரிந்தவன்.” (49:13)

﴿وَمَنْ يَعْمَلْ مِنَ الصَّالِحَاتِ مِنْ ذَكَرٍ أَوْ أُنْثَى وَهُوَ مُؤْمِنٌ فَأُولَئِكَ يَدْخُلُونَ الْجَنَّةَ وَلَا يُظْلَمُونَ نَقِيرًا﴾ [النساء:١٢٤]

“ஆண்களிலோ பெண்களிலோ நம்பிக்கை கொண்டு நல்லறங்கள் செய்தோர் சொர்க்கத்தில் நுழைவார்கள். சிறிதளவும் அவர்கள் அநீதமிழைக்கப்பட மாட்டார்கள்.” (4:124)

﴿وَوَصَّيْنَا الإِنْسَانَ بِوَالِدَيْهِ حُسْنًا﴾ [ العنكبوت:٨]

“மனிதன் தன் பெற்றோருக்கு நன்மை செய்ய வேண்டுமென நாம் அறிவுறுத்தி யுள்ளோம்.” (46:15)

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ أَكْمَلُ الْمُؤْمِنِينَ إِيمَانًا أَحْسَنُهُمْ خُلُقًا وَخِيَارُكُمْ خِيَارُكُمْ لِنِسَائِهِمْ خُلُقًا (ت/ ١١٦٢)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: “மு.்.மின்களில் பரிபூரணமான ஈமானுடைய வர்கள் அவர்களில் அழகிய குணமுடையவர்களே. தன் மனைவியிடத்தில் சிறந்தவரே உங்களில் சிறந்தவர்.” (திர்மிதி-1162)

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللهِ ﷺ فَقَالَ يَا رَسُولَ اللهِ مَنْ أَحَقُّ النَّاسِ بِحُسْنِ صَحَابَتِي قَالَ أُمُّكَ قَالَ ثُمَّ مَنْ قَالَ ثُمَّ أُمُّكَ قَالَ ثُمَّ مَنْ قَالَ ثُمَّ أُمُّكَ قَالَ ثُمَّ مَنْ قَالَ ثُمَّ أَبُوكَ (خ/ ٥٩٧١، م/ ٢٥٤٨)

நபி(ஸல்)அவர்களிடம் ஒரு மனிதர் வந்து ‘மனிதர்களில் நான் அழகிய நட்புடன் நடந்து கொள்ள வேண்டியவர் யார்?’ எனக் கேட்டார். அதற்கு நபி(ஸல்)அவர்கள், “உனது தாய்” எனக் கூறினார்கள். ‘பின்பு யார்?’ எனக் கேட்டார். நபியவர்கள் “உனது தாய்” எனக் கூறினார்கள். ‘பின்பு யார்?’ எனக் கேட்டார். நபியவர்கள் “உன் தாய்” என்றே கூறினார்கள். ‘பின்பு யார்?’ எனக் கேட்டார்.“உன் தந்தை” எனக் கூறினார்கள். (புகாரி-5971, முஸ்லிம்-2548)

இது பெண்கள் பற்றிய இஸ்லாத்தின் சுருக்கமான கண்ணோட்டமாகும்.

**பெண்ணுக்குரிய பொதுவான உரிமைகள்**

நிச்சயமாக பெண்கள் அவசியம் தெரிந்திருக்க வேண்டிய பொதுவான உரிமைகள் உள்ளன. அவற்றை அவள் விரும்பும்போது பூரணமாகச் செய்து கொள்வதை சமூகம் அங்கீகரிக்கவும் செய்கின்றது. அவ்வுரிமைகள் வருமாறு:

1- **சொந்தமாக்கும் உரிமை:** வீடுகள், விவசாய நிலங்கள், தோட்டங்கள், வெள்ளி, தங்கம், கால்நடை வகைகள் இவற்றில் விரும்பியவற்றை ஒரு பெண் தனக்கு சொந்தமாக்கிக் கொள்ளலாம். அப்பெண் தாயாக அல்லது மகளாக அல்லது சகோதரியாக இருப்பினும் சரி.

2- **திருமணம் செய்யும் உரிமை:** கணவனைத் தேர்வு செய்வது, தனக்கு விருப்பமில்லாதவனை ஏற்கமறுப்பது, தனக்கு இடையூறு ஏற்பட்டால் திருமண ஒப்பந்தத்தை முறித்துக்கொள்வது போன்றவற்றிலும் அவள் உரிமை பெறுகிறாள். இவை பெண்களுக்குரிய உரிமைகள் என்பதில் முஸ்லிம்களின் ஏகமனதான முடிவாகும்.

3- **கல்வி கற்கும் உரிமை:** தனக்குக் கடமையான அனைத்தையும் கற்றுக் கொள்வது, உதாரணமாக அல்லாஹ்வை அறிவது, அவனுக்குச் செய்ய வேண்டிய வணக்கங்களையும் அதை நிறைவேற்றும் முறையையும் அறிவது, இன்னும் தன்னுடைய கடமைகளையும் தனக்குத் தேவையான ஒழுக்கங் களையும் தான் கடை பிடிக்க வேண்டிய சிறந்த பண்பாடுகளையும் அறிவது.

﴿فَاعْلَمْ أَنَّهُ لَا إِلَهَ إِلَّا اللَّهُ﴾ [ محمد:١٩] ((طَلَبُ الْعِلْمِ فَرِيضَةٌ عَلَى كُلِّ مُسْلِمٍ)) (جه/ ٢٢٤)

ஏனெனில் “வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்பதை நீ அறிந்துகொள்.” (47:19) என அல்லாஹ்வும், “கல்வியைத் தேடுவது ஒவ்வொரு முஸ்லிம் மீதும் கடமையாகும்” (இப்னுமாஜா-224) என நபி(ஸல்) அவர்களும் பொதுவாகவே கூறியுள்ளனர்.

4- **செலவு செய்யும் உரிமை:** தனது பொருளில் தான் நாடியதைத் தர்மம் செய்து கொள்வதற்கும், தனக்கும் தனது கணவன், பிள்ளைகள், தாய், தந்தையர்கள் இவர்களில் தான் விரும்பியவர்களுக்கு வீண், விரயம் இல்லாத அளவுக்கு செலவு செய்து கொள்ள உரிமை பெறுகிறாள். இவ்விஷயத்தில் இவர்களும் ஆண்களைப் போன்று தான்.

5- **விருப்பு, வெறுப்புக் கொள்ளும் உரிமை:** அவள் நல்ல பெண்களை விரும்பவும், அவளுக்கு கணவன் இருந்தால் கணவனின் அனுமதியுடன் அவர் களை சந்திக்கவும், அன்பளிப்புகள் வழங்கவும் செய்யலாம். அவர்களுக்குத் தபால்கள் அனுப்பி அவர்களின் நிலைமைகளைக் கேட்டுத் தெரிந்துகொள்வதும்,

கஷ்டகாலங்களில் அவர்களுக்கு ஆறுதல் கூறுவதும் கூடும். அல்லாஹ்வுக்காக கெட்ட பெண்களை வெறுத்து, அவர்களை விட்டும் ஒதுங்கிவிடுவதும் கூடும்.

6- **மரணசாசனம் செய்யும் உரிமை:** அவளின் சொத்தில் மூன்றில் ஒன்றை அவளது ஜீவிதகாலத்தில் மரண சாசனம் எழுதிக் கொள்வதற்கும் அதை எவ்வித ஆட்சேபணை செய்யாமல் செயல்படுத்துவதும் அவளது உரிமைகளில் உள்ள தாகும். ஏனெனில் மரணசாசனம் எழுதுவதென்பது பொதுவான மனித உரிமை களைச் சார்ந்ததாகும். எனவே இது ஆண்களுக்கு இருப்பது போன்று பெண் களுக்கும் இருக்கிறது. ஏனெனில் அல்லாஹ்விடம் நன்மையைப் பெறுவதை விட்டு யாரும் யாரையும் தடுக்க முடியாது. என்றாலும் மரணசாசனம் மூன்றில் ஒரு பகுதியை விட அதிகமாகாமலிருப்பது நிபந்தனையாகும்.இதில் ஆண்களும் பெண்களும் சமமே.

7- **ஆடை அணியும் உரிமை:** பட்டு, தங்கம் ஆகிய இவ்விரண்டில் தான் விரும்புவதை அணிந்து கொள்ள அவளுக்கு உரிமை இருக்கிறது. இவ்விரண்டும் ஆண்களுக்கு விலக்கப்பட்டதாகும். என்றாலும் ஒரு பெண் தனது கணவனுக்காக மட்டும் ஆடைகளைக் கழற்றி நிர்வாணமாக இருக்கலாம், அரை குறை ஆடை அணிந்து கொள்ளலாம், தலை, கழுத்து, மார்பு முதலியவற்றை திறந்து கொள்ளலாம்.

8- **அலங்காரம் செய்யும் உரிமை:** தன் கணவனுக்காக தன்னை அலங்கரித்துக் கொள்ள அவளுக்கு உரிமையுள்ளது. அந்த வகையில் அவள் சுர்மா இட்டுக் கொள்ளலாம். அவள் விரும்பினால் இரு கன்னங்களிலும் உதடுகளிலும் சிகப்புச் சாயம் இட்டுக் கொள்ளலாம். அழகான ஆபரணங்களையும் அணிந்து கொள்ளலாம். எனினும் முஸ்லிமல்லாத மற்றும் தவறான நடத்தையுள்ள பெண் களுக்கே உரிய ஆடைகளை அணியக் கூடாது. இவற்றை அவள் அணியக் கூடாது என்பது சந்தேகம் தவறுகளிலிருந்து விலகியிருப்பதற்காகவே.

9- **உண்ணப் பருகும் உரிமை:** நல்ல, சுவையான உணவுகளை உண்ணவும், அதுபோன்ற பானங்களை அருந்தவும் அவளுக்கு உரிமை உண்டு. உண்பதிலும் குடிப்பதிலும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் மத்தியில் எந்தப் பாகுபாடு மில்லை. உணவிலும் பானத்திலும் எது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டதோ அது ஆண்களுக்கும் அனுமதிக்கப்பட்டது தான். பெண்களுக்கும் அனுமதிக்கப் பட்டது தான். இவ்விரண்டில் எது விலக்கப்பட்டதோ அது ஆண்களுக்கும் விலக்கப்பட்டதே. பெண்களுக்கும் விலக்கப்பட்டதே.

﴿ وَكُلُوا وَاشْرَبُوا وَلَا تُسْرِفُوا إِنَّهُ لَا يُحِبُّ الْمُسْرِفِينَ ﴾ [ الأعراف:٣١ ]

அல்லாஹ் கூறுகிறான்: “உண்ணுங்கள், பருகுங்கள்; வீண்விரயம் செய்யாதீர்கள். நிச்சயமாக வீண்விரயம் செய்பவர்களை அல்லாஹ் நேசிப்பதில்லை.” (7:31) இங்கு இருபாலாரையும் நோக்கியே இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

10. **வாரிசு உரிமை:** அவள் வாரிசாக ஆவதற்கும் அவளுக்கு வாரிசுதாரர்கள் இருக்கவும் உரிமையுண்டு.

## கணவன் மீது மனைவிக்குரிய கடமைகள்

ஒரு பெண்ணுக்குரிய தனிப்பட்ட உரிமைகள் என்பது அவளது கணவன் அவளுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் ஆகும். இக்கடமைகள் தனது கணவனுக்கு அவள் செய்ய வேண்டிய கடமைகளுக்குப் பகரமாக இருக்கும். உதாரணமாக அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாற்றமில்லாத காரியங்களில் கணவனுக்கு அவள் கட்டுப்பட்டு நடப்பது, அவனுக்காக உணவு, பானங்கள் தயார் செய்து கொடுப்பது, அவனது படுக்கையைச் சீராக வைத்துக் கொள்வது, அவனது குழந்தைகளுக்குப் பாலூட்டுவது, அவர்களைப் பராமரிப்பது, அவனது பொருளையும் மானத்தையும் பாதுகாப்பது, தனது கற்பைப் பாதுகாத்துக் கொள்வது, அனுமதிக்கப்பட்ட வகைகளில் அவனுக்காக அலங்காரம் செய்து, தன்னை அழகுபடுத்திக்கொள்வது போன்றவையாகும்.

அதுபோல கணவன் தனது மனைவிக்குச் செய்ய வேண்டிய கட்டாயக் கடமைகள் இருக்கின்றன. ﴿وَلَهُنَّ مِثْلُ الَّذِي عَلَيْهِنَّ بِالْمَعْرُوفِ﴾ (البقرة: ٢٢٨)

அல்லாஹ் கூறுகிறான்: “பெண்களுக்குக் கடமைகள் இருப்பது போல அவர்களுக்கு உரிமைகளும் சிறந்த முறையில் உள்ளன.” (2:228)

மு∴மினான பெண் இவற்றை அறிந்து எவ்வித நாணமும் பயமுமின்றி இவ்வுரிமைகளைக் கேட்டுப் பெற வேண்டும் என்பதற்காக இவற்றைக் கூறுகிறோம். இவைகளில் சிலவற்றை அவள் மன்னித்து விட்டால் அன்றி கணவன் இவைகளை முழுமையாக மனைவிக்கு வழங்குவது கடமை. அவள் விட்டுக்கொடுப்பதும் கூடும்.

1- அவன் தனது வசதி, வசதியின்மையைப் பொறுத்து அவளுக்குச் செலவு செய்ய வேண்டும். இச்செலவில் உணவு, பானம், உடை, உறைவிடம் மருத்துவம், ஆகியவை அடங்கும்.

2- ஆண், பெண்ணை நிர்வகிக்க வேண்டியவனாக இருப்பதால் அவளது மானம், மரியாதை, உடல், பொருள், மார்க்கம் இவை அனைத்திலும் அவளை அவன் பாதுகாக்க வேண்டும். ஒன்றை நிர்வகித்தல் என்பது அதனைப் பாதுகாப்பதும் பராமரிப்பதும் ஆகும்.

3- அவளது மார்க்க விஷயங்களில் அவசியமானவற்றை அவளுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். அவனுக்கு இயலாவிடில் அல்லாஹ்வின் இல்லங்களிலும் கல்விக்கூடங்களிலும் நடைபெறுகின்ற பெண்களுக்குரிய மார்க்கக் கூட்டங் களுக்குச் சென்று வர அனுமதிக்க வேண்டும். ஆனால் அவ்விடங்கள் குழப்பத்தை விட்டும் பாதுகாப்பாக இருப்பதுடன் அவனுக்கோ அவளுக்கோ அதில் இடையூறு ஏற்படாமலிருப்பதும் அவசியமாகும்.

4- அவளிடம் அழகிய முறையில் நடந்து கொள்ள வேண்டும். அல்லாஹ் கூறுகிறான்: ﴿ وَعَاشِرُوهُنَّ بِالْمَعْرُوفِ ﴾ [ النساء:١١٩]

“அவர்களோடு நல்ல முறையில் வாழ்க்கை நடத்துங்கள்.” (4:119)

நல்ல முறையில் வாழ்க்கை நடத்துதல் என்பதில் உடலுறவில் அவளுக்குரிய உரிமையைக் குறைத்திடாமலிருப்பது; திட்டுவது, இழிவுபடுத்துவது, கேவலப் படுத்துவது போன்றவற்றால் அவளைத் துன்புறுத்தாமலிருப்பது ஆகியவை அடங்கும். இன்னும் அவள் தனது உறவினர்களைச் சந்தித்து வருவதால் குழப்பம் ஏற்படும் என அவன் பயப்படாதபோது அவளைத் தடுக்காமல் இருப்பதும், அவளால் முடியாத வேலைகளைச் செய்யும்படி சொல்லாமலிருப்பதும், சொல்லாலும் செயலாலும் அவளுடன் அழகியமுறையில் நடந்து கொள்வதும் அதில் அடங்கும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்:

عَنْ عَائِشَةَ قَالَتْ قَالَ رَسُولُ اللهِ ﷺ خَيْرُكُمْ خَيْرُكُمْ لِأَهْلِهِ وَأَنَا خَيْرُكُمْ لِأَهْلِي (ت/ ٣٨٩٥)

“தம் மனைவியரிடத்தில் சிறந்தவரே உங்களில் சிறந்தவர். உங்களில் நான் என் மனைவியரிடத்தில் சிறந்தவராக இருக்கின்றேன்.” (திர்மிதி-3895)

**பர்தா அணிதல்**

நிச்சயமாக இஸ்லாம், குடும்பம் வீழ்ந்து, சின்னாபின் னப்பட்டுப் போகாமல் அதைப் பாதுகாப்பதில் அக்கறை கொண்டுள்ளது. இதனால் அதைச் சுற்றி ஒழுக்கங்கள் மற்றும் நற்குணங்களாலான உறுதி வாய்ந்த வேலியை எழுப்பி யுள்ளது. காரணம் மனிதர்கள் நிம்மதியாகவும் சமுதாயம் தூய்மையாகவும் இருக்க வேண்டும் என்பதற்காக. அச்சமுதாயத்தில் காம உணர்வுதூண்டப்பட முடியாது. காமம் கிளறப்பட முடியாது. மேலும் இஸ்லாம் குழப்பத்தின் பால் இட்டுச் செல்லக் கூடியவற்றைத் தடுப்பதற்காக திரைகளை ஏற்படுத்தி யுள்ளது. ஆண், பெண் இருபாலாரும் தம் பார்வை களைத் தாழ்த்திக்கொள்ளுமாறும் ஏவியுள்ளது.

நிச்சயமாக அல்லாஹ் பெண்ணைக் கண்ணியப்படுத்துவதற்காகவும், இழிவி லிருந்து அவளின் மான மரியாதையை பாதுகாப்பதற்காகவும், குழப்பவாதிகள்,

தீய எண்ணம் உடையவர்களின் கெடுதியை விட்டும் அவளைத் தூரப்படுத்துவதற்காகவும், கண்ணியத்தின் விலைமதிப்பை அறியாதவர்களிடமிருந்து அவளைப் பாதுகாப்பதற்காகவும், விஷப் பார்வைகளுக்குக் காரணமான குழப்பத்தின் வாசலை அடைத்திடுவதற்காகவும், பெண்ணின் கண்ணியத்தையும் கற்பையும் பாதுகாத்துக் கொள்வதற்காகவுமே அல்லாஹ் பெண்களுக்குப் பர்தாவை மார்க்கமாக்கி உள்ளான்.

இஸ்லாமிய அறிஞர்கள் பெண்கள் தங்களின் இரு முன் கைகளையும் முகத்தையும் தவிர உள்ள எல்லாப் பாகங்களையும் மூடி மறைத்துக் கொள்ள வேண்டும். இன்னும் அன்னிய ஆண்களின் முன்னிலையில் தனது அழகையும் கவர்ச்சியையும் வெளிப்படுத்தக் கூடாது என ஏகமனதாக முடிவு செய்துள்ளனர். முகத்தையும் முன் கைகளையும் மறைக்க வேண்டுமா? வேண்டாமா? என்பதில் அறிஞர்கள் இரு பிரிவினராக பிரிந்துவிட்டனர். ஒவ்வொரு பிரிவினரிடத்திலும் தங்களது கருத்திற்கேற்ற ஆதாரங்கள் உள்ளன.

பர்தாவைப் பற்றியும் அதன் அவசியம் மற்றும் அதன் அளவு பற்றியும் ஏராளமான ஆதாரங்கள் வந்துள்ளன. ஒவ்வொரு பிரிவினரும் இந்த ஆதாரங்களில் ஒருபகுதியை வைத்து ஆதாரம் காட்டியுள்ளனர். தங்களின் கருத்திற்கு மாற்றமாகத் தோன்றக்கூடிய ஆதாரங்களைப் பல்வேறு விளக்கங்களைக் கூறி சரிக்கட்டியுள்ளனர்.

﴿ وَإِذَا سَأَلْتُمُوهُنَّ مَتَاعًا فَاسْأَلُوهُنَّ مِنْ وَرَاءِ حِجَابٍ ذَلِكُمْ أَطْهَرُ لِقُلُوبِكُمْ وَقُلُوبِهِنَّ ﴾ [ الأحزاب:٥٣]

அல்லாஹ் கூறுகிறான்: “(நபியின் மனைவியரான) அவர்களிடம் எதையேனும் நீங்கள் கேட்டால் திரைக்கு அப்பால் இருந்தே கேளுங்கள். இதுவே உங்களின் உள்ளங்களுக்கும் அவர்களின் உள்ளங்களுக்கும் தூய்மையானது.” (33:53)

﴿ يَا أَيُّهَا النَّبِيُّ قُلْ لِأَزْوَاجِكَ وَبَنَاتِكَ وَنِسَاءِ الْمُؤْمِنِينَ يُدْنِينَ عَلَيْهِنَّ مِنْ جَلَابِيبِهِنَّ ذَلِكَ أَدْنَى أَنْ يُعْرَفْنَ فَلَا يُؤْذَيْنَ وَكَانَ اللهُ غَفُورًا رَحِيمًا ﴾ [الأحزاب:٥٩]

“நபியே! உமது மனைவியருக்கும் உமது புதல்வி யருக்கும் (ஏனைய) நம்பிக்கை கொண்ட பெண்களுக்கும் முக்காடுகளைத் தொங்கவிடுமாறு கூறுவீராக. அவர்கள் (ஒழுக்கமுடைய பெண்கள் என்று) அறியப்படவும் தொல்லைப்படுத்தப்படாமல் இருக்கவும் இது ஏற்றது. அல்லாஹ் மிக மன்னிப்பவனாகவும் மிக்க அன்புடையவனாகவும் இருக்கிறான்.” (33:59)

﴿ وَقُلْ لِلْمُؤْمِنَاتِ يَغْضُضْنَ مِنْ أَبْصَارِهِنَّ وَيَحْفَظْنَ فُرُوجَهُنَّ وَلَا يُبْدِينَ زِينَتَهُنَّ إِلَّا مَا ظَهَرَ مِنْهَا وَلْيَضْرِبْنَ بِخُمُرِهِنَّ عَلَى جُيُوبِهِنَّ وَلَا يُبْدِينَ زِينَتَهُنَّ إِلَّا لِبُعُولَتِهِنَّ ... ﴾ [ النور:٣١]

“தமது பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறும் தமது கற்புகளைப் பாதுகாத்துக் கொள்ளுமாறும் நம்பிக்கை கொண்ட பெண்களுக்கு (நபியே!) நீர் கூறுவீராக! அவர்கள் தமது அலங்காரத்தில் வெளியே தெரிபவை தவிர மற்றவற்றை வெளிப்படுத்த வேண்டாம். தமது முக்காடுகளை தமது மார்பின் மேல் போட்டுக் கொள்ளட்டும். மேலும் அவர்கள் தங்களின் கணவரிடத் திலே... தவிர மற்றவர்களிடம் தமது அலங்காரத்தை வெளிப்படுத்த வேண்டாம்.” (24:31)

عن عَائِشَةَ قَالَتْ كُنَّ نِسَاءُ الْمُؤْمِنَاتِ يَشْهَدْنَ مَعَ رَسُولِ الله ﷺ صَلَاةَ الْفَجْرِ مُتَلَفِّعَاتٍ بِمُرُوطِهِنَّ ثُمَّ يَنْقَلِبْنَ إِلَى بُيُوتِهِنَّ حِينَ يَقْضِينَ الصَّلَاةَ لَا يَعْرِفُهُنَّ أَحَدٌ مِنْ الْغَلَسِ (خ/ ٥٧٨، م/ ٦٤٥)

நபியவர்களின் மனைவி ஆயிஷா (ரலி) கூறினர்கள்: “நம்பிக்கை கொண்ட பெண்கள் தம் ஆடையால் தம்மைப் போர்த்திக் கொண்டு நபி (ஸல்) அவர்களுடன் பஜர் தொழுகையில் கலந்துகொள்வார்கள். தொழுகையை முடித்ததும் தம் வீடுகளுக்குத் திரும்பிச் செல்வார்கள். இருட்டின் காரணமாக அவர்களை யாரும் அறிந்து கொள்ள முடியாது.” (புகாரி-578, முஸ்லிம்-645)

عَنْ عَائِشَةَ قَالَتْ كَانَ الرُّكْبَانُ يَمُرُّونَ بِنَا وَنَحْنُ مَعَ رَسُولِ الله ﷺ مُحْرِمَاتٌ فَإِذَا حَاذَوْا بِنَا سَدَلَتْ إِحْدَانَا جِلْبَابَهَا مِنْ رَأْسِهَا عَلَى وَجْهِهَا فَإِذَا جَاوَزُونَا كَشَفْنَاهُ (د/ ١٨٨٣، حم/ ٢٢٨٩٤)

மேலும் ஆயிஷா(ரலி)அவர்கள் கூறியதாக அறிவிக் கப்பட்டுள்ளது: “நாங்கள் இஹ்ராம் அணிந்தவர்களாக நபி(ஸல்)அவர்களுடன் இருந்தபோது வாகனத்தில் செல்வோர் எங்களைக் கடந்து செல்வார்கள். அவர்கள் எங்களுக்கு நேராக வருகிறபோது எங்களில் ஒவ்வொரு வரும் அவரது முக்காடை தலையிலிருந்து முகத்தின் மீது தொங்கவிட்டுக் கொள்வார்கள். அவர்கள் எங்களை கடந்து சென்று விட்டால் முகங்களைத் திறந்து கொள்வோம்.” (அபூதாவூத்-1833, அஹ்மத்-22894)

“முதன் முதலில் ஹிஜ்ரத் செய்த பெண்மணிகளுக்கு அல்லாஹ் அருள் புரிவானாக! “தமது முக்காடுகளை தமது மார்பின்மேல் போட்டுக் கொள்ளட்டும்.” (24:31) என்ற வசனத்தை அல்லாஹ் அருளியபோது தங்களின் துப்பட்டிகளைக் கிழித்துத் தங்கள் மார்பை மறைத்துக் கொண்டார்கள்” என்றும் ஆயிஷா(ரலி) கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது. (இதனை இமாம் புகாரி அவர்கள் தமது த.ஃ.லீக்கில் பதிவு செய்துள்ளார்கள். பாடம்: “தமது முக்காடுகளை தமது மார்பின் மேல் போட்டுக் கொள்ளட்டும்.” ஹதீஸ் எண்: 4759)

இவ்விஷயத்தில் ஆதாரங்கள் அதிகமாக உள்ளன. பர்தா விஷயத்தில் கருத்து வேறுபாடுகள் இருந்தும் ஒரு நோயாளி மருத்துவரிடம் முகத்தைத் திறந்து

கொள்வது போன்ற நிர்பந்தமான நேரங்களில் ஒரு பெண் தனது முகத்தைத் திறந்து கொள்லாம் என அறிஞர்கள் ஏகமனதான கருத்தைக் கொண்டுள்ளனர். அதுபோல குழப்பம் ஏற்படுமென்ற பயம் இருக்கிறபோது பெண்கள் தமது முகத்தை வெளிக்காட்டுவது கூடாது எனவும் எல்லா அறிஞர்களும் ஒருமித்த கருத்தைக் கொண்டுள்ளனர். இன்னும் சொல்வதானால் பெண்கள் தம் முகங் களைத் திறந்துகொள்ளலாம் எனச் சொல்லக் கூடியவர்களிடம் கூட குழப்பம் ஏற்படும் என்ற அச்சம் இருக்கும்போது தம் முகங்களை அவர்கள் மறைத்துக் கொள்வது அவசியமாகும் என்றே நிரூபணமாகியுள்ளது.

இந்தக் காலத்தில் குழப்பத்தைப் பற்றி எவ்வளவு கடுமையாக அஞ்ச வேண்டி யிருக்கிறது! குழப்பம் எல்லை மீறி, எங்கும் பரவியிருக்கிறது. முகங்களைத் திறந்து செல்கின்ற பெரும்பாலான பெண்கள் தம் முகங்களையும் கண்களையும் அலங்கரித்துச் செல்கின்றனர். இது தடை செயப்பட்டது என்பது கருத்து வேறுபாடில்லாத விஷயம்.

அந்நிய ஆண்களுடன் பெண்கள் கலந்துறவாடு வதையும் இஸ்லாம் தடைசெய்துள்ளது. இவை யாவும் கண்ணியம், பண்பாடு மற்றும் குடும்பத்தைப் பாதுகாப்பதற்காகும். இஸ்லாம் இவற்றைப் பாதுகாப்பதற்கும் குழப்பம் மற்றும் கவர்ச்சிகளின் வாசல்களை அடைப்பதற்கும் அக்கறை காட்டுகிறது. பெண்கள் வெளியே சென்று அந்நிய ஆடவருடன் கலந்துவிடுவதால், பர்தா அணியாமல் செல்வதால் இச்சைகள் தூண்டப்படுகின்றன, தவறுக்கான காரண காரியங்கள் எளிதாக்கப்படுவதோடு அவற்றைச் செய்வதும் இலேசாகிவிடுகின்றது.

﴿وَقَرْنَ فِي بُيُوتِكُنَّ وَلَا تَبَرَّجْنَ تَبَرُّجَ الْجَاهِلِيَّةِ الْأُولَى وَأَقِمْنَ الصَّلَاةَ وَآتِينَ الزَّكَاةَ وَأَطِعْنَ اللهَ وَرَسُولَهُ إِنَّمَا يُرِيدُ اللهُ لِيُذْهِبَ عَنْكُمُ الرِّجْسَ أَهْلَ الْبَيْتِ وَيُطَهِّرَكُمْ تَطْهِيرًا﴾ [ الأحزاب:٣٣]

அல்லாஹ் கூறுகிறான்: “(நபியின் மனைவியரே!) உங்கள் வீடுகளிலேயே தங்கியிருங்கள். முன்னர் அறியாமைக் காலத்தில் (பெண்கள்) வெளிப்படுத்தித் திரிந்தது போன்று திரியாதீர்கள்.” (33:33)

﴿وَإِذَا سَأَلْتُمُوهُنَّ مَتَاعًا فَاسْأَلُوهُنَّ مِنْ وَرَاءِ حِجَابٍ ذَلِكُمْ أَطْهَرُ لِقُلُوبِكُمْ وَقُلُوبِهِنَّ﴾ [ الأحزاب:٥٣]

“(நபியின் மனைவியரான) அவர்களிடம் எதையேனும் நீங்கள் கேட்டால் திரைக்கு அப்பால் இருந்தே கேளுங்கள். இதுவே உங்களின் உள்ளங்களுக்கும் அவர்களின் உள்ளங்களுக்கும் தூய்மையானது.”(33:53)

ஆண்களும் பெண்களும் கலந்து விடுவதை நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் கண்டிப்பாகத் தடைசெய்துள்ளார்கள். மேலும் அவ்வாறு கலந்துவிடுவதற்கு

காரணமான அனைத்தையும்- வணக்க வழிபாடுகள் நடைபெறும் இடங்களிலும் கூட தடுத்துள்ளார்கள்.

ஒரு பெண் சில சந்தர்ப்பங்களில் தனது அவசியத் தேவைகளை நிறைவு செய்து கொடுப்பவரில்லாதபோது தனது தேவைகளை நிறைவு செய்து கொள்வது அல்லது தனக்கும் தனது குடும்பத்தினருக்கும் வாழ்வாதாரத்தைத் தேடிக்கொள்வதற்காக விற்பது, வாங்குவது போன்ற அவசியத் தேவைகளுக்காக ஆண்களிருக்கும் இடத்திற்குப் போக வேண்டிய நிர்பந்தத்திற்கு ஆளாகி விடுகிறாள். இந்தச் சமயத்தில் அவள் மார்க்க வரம்புகளைப் பேணி தனது அலங்காரத்தை வெளிப்படுத்தாமல் இஸ்லாமிய முறைப்படி தன்னை மறைத்துக் கொண்டு வெளியேறி, ஆண்களை விட்டும் விலகி, அவர்களுடன் கலந்திடா தவாறு சென்று வருவதில் குற்றமில்லை.

ஒரு பெண் அந்நிய ஆடவருடன் தனித்திருப்பதை தடைசெய்திருப்பது குடும்பத்தையும் பண்பாட்டையும் பாதுகாப்பதற்கு இஸ்லாம் அமைத்துள்ள சிறந்த வழியாகும். ஒரு பெண் அவளுடைய கணவன் அல்லது அவள் மணம் முடித்துக் கொள்ள விலக்கப்பட்டவர் இல்லாதபோது அந்நிய ஆணுடன் அவள் தனித்திருப்பதைக் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கடுமையாக எச்சரித்துள் ளார்கள். ஏனெனில் நிச்சயமாக ஷைத்தான் உள்ளங்களையும் குணங்களையும் கெடுப்பதற்கு மிகவும் பேராசை உள்ளவனாக இருக்கின்றான்.

**மாதவிடாய், பிரசவ இரத்தத்தின் சட்டங்கள் மாதவிடாயின் காலமும் அதன் வரையறையும்:**

1- பெரும்பாலும் மாதவிடாய் வரக்கூடிய காலம் 12 வயது முதல் 50 வயது வரையாகும். சிலசமயம் பெண்ணின் நிலை, அவளின் சுற்றுப்புறச் சூழலைப் பொறுத்து அதற்கு முன்னரோ பின்னரோ அவளுக்கு மாதவிடாய் வந்து விடலாம்.

2- மாதவிடாயின் குறைந்த கால அளவு ஒரு நாள் ஆகும். அதன் கூடுதல் கால அளவு 15 நாட்கள்.

**கர்ப்பிணியின் உதிரப்போக்கு:**

ஒரு பெண் கர்ப்பமாகிவிட்டால் பெரும்பாலும் இரத்தம் நின்றுவிடும். எனினும் கர்ப்பமடைந்தவள் இரத்தத்தைக் கண்டால் அது குழந்தை பெறுவதற்கு ஓரிரு நாட்களுக்கு முன்பாக இருக்குமானால் அத்துடன் பிரசவ வலியும் இருந்தால் அது பிரசவ இரத்தமாகும். குழந்தை பெறுவதற்கு நீண்ட நாட்களுக்கு முன்னரோ அல்லது பிரசவ வலியின்றி குறைந்த காலத்திற்கு முன்னரோ இரத்தத்தைக் கண்டால் அது பிரசவ இரத்தமுமல்ல மாதவிடாயுமல்ல.

**விதிவிலக்கான மாதவிடாய்**

விதிவிலக்காக ஏற்படக்கூடிய மாதவிடாய் பலவகை யாகும்:

1- **அதிகமாகிவிடுவது அல்லது குறைந்துவிடுவது:** உதாரணமாக வழமையாக ஆறு நாட்கள் வரக்கூடிய ஒரு பெண்ணுக்கு அது நீடித்து ஏழாவது நாளும் வருவது. அல்லது வழமையாக ஏழு நாட்கள் வரக்கூடியவள் ஆறு நாட்களிலேயே தூய்மையாகிவிடுவது.

2- **முந்திவிடுவது அல்லது பிந்திவிடுவது:** உதாரணமாக வழக்கமாக மாதக் கடைசியில் மாதவிடாய் வரக் கூடியவள் மாத ஆரம்பத்திலேயே அதைக் கண்டுவிடு கிறாள். அல்லது மாத ஆரம்பத்தில் வருவது பழக்கமாக உள்ளவள் மாத இறுதியில் அதைக் காணுகிறாள். அவள் வழக்கமான தன்மையில் இரத்தத்தைக் காணு கிறபோது மாதவிடாய்க்காரியாகி விடுகிறாள். அது நின்று விடுகிறபோது சுத்தமாகி விடுகிறாள். அது வழக்கத்தை விட அதிகமானாலும் அல்லது குறைந்தாலும் அல்லது முந்தினாலும், பிந்தினாலும் சரியே.

3- **மஞ்சள் அல்லது கலங்கல் நிறம்**: அதாவது காயத்தி லிருந்து வரக்கூடிய சீழ் போன்று மஞ்சளாகவோ அல்லது மஞ்சளுக்கும் கருப்புக்கும் இடைப்பட்ட நிறமாகவோ இரத்தத்தைப் பார்க்கிறாள். அது மாதவிடாய் காலத்திலோ அல்லது சுத்தமாவதற்கு முன் மாதவிடாய்க் காலத்துடன் சேர்ந்தோ இருந்தால் அது மாதவிடாய் தான். அதற்கும் மாதவிடாய் சட்டங்கள் தான். சுத்தமான பிறகு இருந்தால் அது மாதவிடாய் அல்ல.

4- **மாதவிடாய் நின்று நின்று வருவது:** அதாவது ஒரு நாள் இரத்தத்தையும் ஒரு நாள் சுத்தத்தையும் காண்கிறாள் எனில் இதுபோன்றவற்றிற்கு இரண்டு நிலைகள் உள்ளன.

**முதல் நிலை:** ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் விட்டு விட்டு வரும் நிலை எல்லா நேரத்திலும் நிரந்தரமாக இருந்தால் அது நோயினால் ஏற்படக்கூடிய தொடர் உதிரப்போக்காகும். இப்படிப்பட்ட பெண்ணுக்கு தொடர் உதிரப்போக்கிற்குரிய சட்டம் தான்.

**இரண்டாம் நிலை:** மாதவிடாய் விட்டு விட்டு வரும் நிலை நிரந்தரமாக இல்லாமல் சில நேரங்களில் மாதவிடாய் வந்து பிறகு வழக்கமான சுத்த நிலை ஏற்படுதல். ஒரு நாளை விடக் குறைவாக இரத்தம் வந்து நின்று விட்டால் அது சுத்த நிலையல்ல. ஆனால் ஒரு நாளை விடக் குறைவாக இரத்தம் வந்து நின்று விட்டாலும் அது சுத்தமான நிலை என்பதை உறுதிப்படுத்தும் அம்சங்கள் இருந்தால் அதாவது அவளது வழக்கமான மாதவிடாய் நாட்களின் இறுதியில் இரத்தம் நின்று சுத்தம் ஏற்பட்டால் அல்லது இரத்தம் நிற்கும்போது வெண்

மையான திரவம் கர்ப்பப்பையிலிருந்து வெளியேறினால் அது சுத்தமான நிலையே.

**மாதவிடாயின் சட்டங்கள்**

1- **தொழுகை:** மாதவிடாய் ஏற்பட்ட பெண்ணுக்கு கடமையான, ந.்.பிலான தொழுகைகளைத் தொழுவது ஹராமாகும். தொழுதாலும் அது செல்லாது. ஆனால் தொழுகை நேரத்தில் முழுமையாக ஒரு ரக்அத் தொழுவதற்குரிய நேரம் அவளுக்குக் கிடைத்தால் அத்தொழுகையைத் தொழுவது அவள் மீது கடமையாகும். அவளுக்கு கிடைத்த நேரம் தொழுகையின் ஆரம்ப நேரமாக இருந்தாலும் சரி அல்லது கடைசி நேரமாக இருந்தாலும் சரி.

ஆரம்ப நேரத்திற்கு உதாரணம். ஒரு பெணுக்கு சூரியன் மறைந்த பின் ஒரு ரக்அத்துக்கான நேர அளவு கடந்ததும் மாதவிடாய் வந்துவிடுவதாகும். அவள் சுத்தாமான பின் மக்ரிப் தொழுகையை கழாச் செய்வது அவள் மீது கடமை யாகும். ஏனெனில் மாதவிடாய் வரும் முன்பே அவள் ஒரு ரக்அத்தை அதற்குரிய நேரத்தில் அடைந்துவிட்டாள்.

கடைசி நேரத்திற்கு உதாரணம். ஒரு பெண் சூரியன் உதயமாகு முன் ஒரு ரக்அத் தொழும் நேரத்தில் சுத்தமாகி விடுவதாகும். இவள் ஒரு ரக்அத்திற்குரிய நேரத்தை அடைந்துவிட்டதால் சுபுஹுத் தொழுகையை கழாச் செய்வது கட்டாயமாகும்.

சுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ், அல்லாஹு அக்பர் போன்ற திக்ரு களையும், சாப்பிடும்போதும் மற்ற நேரத்திலும் பிஸ்மில்லாஹ் கூறுவதும், ஃபிக்ஹு, ஹதீஸ்களைப் படிப்பதும், துஆச் செய்வதும், குர்ஆனைக் கேட்பதும் மாதவிடாய்ப் பெண்ணுக்கு ஹராமாகாது. மேலும் அவள் குர்ஆனைப் பார்த்தோ அல்லது நாவால் மொழியாமல் உள்ளத்தால் சிந்தித்து ஓதுவதிலோ குற்ற மில்லை. உதாரணமாக குர்ஆனையோ குர்ஆன் எழுதப்பட்ட பலகையையோ முன்னால் வைத்துக் கொண்டு மனதுக்குள் ஓதுவது போல.

மாதவிடாய்ப் பெண் தேவையுள்ள நேரம் தவிர மற்ற நேரங்களில் குர்ஆனை ஓதாமலிருப்பது மிக்க நல்லது. தேவையுள்ள நேரமென்பது அவள் மாணவி களுக்குக் கற்றுக்கொடுக்கின்ற ஆசிரியையாகவோ அல்லது தேர்வு நேரத்தில் தேர்வுக்காக பாடம் படிக்கவேண்டிய மாணவியாகவோ இருப்பது போன்றாகும். (மாதவிடாய்ப் பெண் குர்ஆனைத் தொடக் கூடாது, ஓதக்கூடாது என்பதில் அறிஞர்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன)

2- **நோன்பு:** ∴பர்லான, சுன்னத்தான நோன்பு நோற்பது ஹராமாகும். அப்படியே அவள் நோன்பு நோற்றால் அது கூடாது. எனினும் ∴பர்லான நோன்பை அவள் கழாச் செய்ய வேண்டும். ஒரு பெண் நோன்பு நோற்றிருக்கும் சமயம் மாதவிடாய் வந்துவிட்டால் அந்நேரம் சூரியன் மறைவதற்கு ஒரு வினாடிக்கு முன்பாக இருந்தாலும் நோன்பு முறிந்துவிடும். அது ∴பர்லான நோன்பாக இருந்தால் அதைக் கழாச் செய்வது கட்டாயமாகும்.

ஒரு பெண் சூரியன் மறையுமுன் மாதவிடாய் வருவதாக உணர்ந்தாள். ஆனாலும் சூரியன் மறைந்த பின்புதான் அது வெளியானது. இந்நேரத்தில் அவளின் நோன்பு பூரணமாகிவிடும். ஒரு மாதவிடாய்க்காரி பஜ்ர் உதயமாகி ஒரு வினாடிக்குப் பின் சுத்தமாகி நோன்பு நோற்றால் அவளின் நோன்பு செல்லாது. பஜ்ர் உதய மாவதற்கு சிறிது நேரத்திற்கு முன் அவள் சுத்தமாகி நோன்பு நோற்றால் அது நிறை வேறிவிடும். பஜ்ருக்குப் பிறகே அவள் குளித்தி ருந்தாலும் சரி.

3- **தவா∴ப்** (வலம் வருதல்): மாதவிடாய்க்காரி கஅபத்துல்லாவில் ∴பர்லான, ந∴பிலான வலம் வருவது ஹராமாகும். அப்படி வலம் வந்தால் அது கூடாது. ஸ∴பா, மர்வாவுக்கிடையே ஓடுவது, அர∴பாவில் தங்குவது, முஸ்தலி∴பா, மினாவில் இரவு தங்குதல், கல் எரிதல் போன்ற ஹஜ், உம்ராவின் ஏனைய செயல்கள அவளுக்கு ஹராமல்ல. இந்த அடிப்படையில் ஒரு பெண் சுத்தமான வளாக வலம் வந்து முடித்த பின்னாலோ அல்லது ஸ∴பா, மர்வாவிற்கிடையே ஓடிக் கொண்டிருக்கும் போதோ மாதவிடாய் வந்துவிட்டால் அதில் எந்த பிரச்சனையும் கிடையாது.

4- **பள்ளியில் தங்குதல்:** மாதவிடாய்க்காரி பள்ளியில் தங்கியிருப்பது ஹராமாகும்.

5- **உடலுறவு கொள்ளுதல்:** மாதவிடாயின்போது மனைவியிடம் கணவன் உடலுறவு கொள்வதும், அதற்காக அவள் சம்மதிப்பதும் ஹராமாகும். உடலுறவு தவிர தனது இச்சையைத் தணிக்கக்கூடிய முத்தமிடுதல், கட்டியணைத்தல், மர்ம உறுப்பு அல்லாததில் சுகம் அனுபவித்தல் போன்றவை அவனுக்கு அனுமதி யளிக்கப்பட்டுள்ளது.

6- **தலாக்:** மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது தனது மனைவியை கணவன் தலாக் சொல்வது ஹராமாகும். அவ்வாறு சொல்லிவிட்டால் அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் அவன் மாறுசெய்தவனாவான்- விலக்கப்பட்ட ஒன்றை (ஹராமை) செய்தவனாவான். இந்த நேரத்தில் அவளை அவன் திரும்ப அழைத்துக் கொண்டு அவள் சுத்தமாகும் வரை தன்னுடன் வைத்துக் கொள்வது

கடமையாகும். அதன் பிறகு அவன் விரும்பினால் அவளைத் தலாக் சொல்லலாம். ஆனாலும் அவளுக்கு இரண்டாம் முறை மாதவிடாய் ஏற்படும் வரை விட்டு வைப்பது மிகவும் நல்லது. அதன் பிறகு அவள் சுத்தமாகி விட்டால் அவன் விரும்பினால் அவளை தன்னுடன் வைத்துக் கொள்ளலாம், விரும்பினால் விவாகரத்தும் செய்யலாம்.

7- **குளிப்பது கடமை:** மாதவிடாய்க்காரி சுத்தமாகி விட்டால் உடலின் எல்லாப் பகுதியையும் சுத்தப்படுத்திக் குளிப்பது கடமையாகும். தலை முடியை அவிழ்த்து விடுவது அவசியமில்லை. ஆனால் தலை முடியின் அடிப்பாகத்திற்குத் தண்ணீர் சேராதென அஞ்சுமளவிற்கு அழுத்தமாக கட்டப்பட்டிருந்தாலே தவிர!

மாதவிடாய்க்காரி தொழுகைக்குரிய நேரத்திலேயே சுத்தமாகிவிட்டால் தொழுகையை அதற்குரிய நேரத்தில் அடைந்து கொள்வதற்காக விரைவாகக் குளிப்பதுகட்டாயமாகும். அவள் பயணத்திலிருக்கும்போது அவளிடம் தண்ணீர் இல்லையென்றால் அல்லது தண்ணீர் இருந்து அதைப் பயன்படுத்துவதால் இடையூறு ஏற்படும் எனப் பயந்தால் அல்லது அவள் நோயாளியாக இருந்து தண்ணீர் அவளுக்கு இடையூறளிக்கும் என்றால் தடை நீங்கும் வரை குளிப்பதற்குப் பகரமாக தயம்மும் செய்து கொள்ள வேண்டும். தடை நீங்கிய பின் குளித்துக் கொள்ள வேண்டும்.

## தொடர் உதிரப்போக்கு

தொடர் உதிரப்போக்கு என்பது ஒரு பெண்ணுக்கு கருப்பையிலிருந்து இரத்தம்- ஒரு போதும் நிற்காமல் அல்லது மாதத்தில் ஓரிரு நாட்கள் போன்ற குறைந்த கால அளவு நின்று- தொடர்ந்து வெளியேறுவதாகும். இந்த உதிரப் போக்கு பதினைந்து நாட்களுக்கும் கூடுதலாக இருந்தால் அதற்கும் தொடர் உதிரப்போக்கு என்றே சொல்லப்படுகின்றது. ஆனால் இவ்வாறு பதினைந்து நாட்களுக்கும் கூடுதலாக இரத்தம் வெளியேறுவது அவளின் வழக்கமாக இருந்தாலே தவிர.

## தொடர் உதிரப்போக்கு உடையவளின் நிலைகள்

தொடர் உதிரப்போக்கு உடையவளுக்கு மூன்று நிலைகள் உள்ளன:

1- இவ்வுதிரப்போக்கு வருமுன் தனக்கு இயற்கையாக வந்து கொண்டிருந்த மாதவிடாய் காலத்தை அவள் அறிந்திருத்தல். அக்காலம் வரும்போது அவள் மாதவிடாய்க்காரிதான். அக்காலங்களில் அவளுக்கு மாதவிடாயினுடைய சட்டங்களே. மற்ற நேரங்களில் அவள் தொடர் உதிரப்போக்குடையவள்.

உதாரணம்: ஒரு பெண்ணுக்கு ஒவ்வொரு மாத ஆரம் பத்திலும் ஆறு நாட்கள் மாதவிடாய் வருகின்றது. பிறகு அவளுக்கு தொடர் உதிரப்போக்கு ஏற்பட்டு

நிரந்தரமாகி விடுகிறது. இப்போது இவளுக்கு ஒவ்வொரு மாதத்திலும் ஆரம்பத் திலுள்ள ஆறு நாட்கள் மாதவிடாய் நாட்கள் ஆகும். மற்ற நாட்கள் தொடர் உதிரப்போக்குடைய நாட்களாகும்.

இதன்படி தொடர் உதிரப்போக்குடையவள் அவளது மாதவிடாய்க் காலத்தில் மாதவிடாய்க்காரியாக இருந்து விட்டு அதன் பின்னர் குளித்து, தொழுது கொள்ள வேண்டும். தொடர்ந்து வரக்கூடிய இரத்தத்தை அவள் பொருட்படுத்த வேண்டியதில்லை.

2- தொடர் உதிரப்போக்கு ஏற்படும் முன் மாதவிடாய் வழக்கம் அவளுக்கு இல்லாதிருத்தல். அதாவது அவள் முதன் முதலில் எப்போது இரத்தத்தைக் காண்கிறாளோ அப்போதிருந்தே அவளுக்கு தொடர் உதிரப்போக்கு தான். இப்படிப்பட்ட பெண் மாதவிடாய் இரத்தம் எது? தொடர் உதிரப்போக்கு எது? என்பதைப் பிரித்தறிந்து செயல்பட்டுக் கொள்ள வேண்டும். மாதவிடாய் இரத்தமாக இருந்தால் அது கருப்பாக அல்லது கட்டியாக அல்லது வாடை யுள்ளதாக இருக்கும். அந்த காலங்களில் மாதவிடாயின் சட்டங்களே அவளுக்கு. இதல்லாத தன்மையிலிருந்தால் அது தொடர் உதிரப் போக்கு என விளங்கிக் கொள்ள வேண்டும். அந்த காலங்களில் தொடர் உதிரப்போக்கின் சட்டங்களே அவளுக்கு.

உதாரணமாக, ஒரு பெண் முதன் முதலில் இரத் தத்தைப் பார்க்கும்போது அது தொடர்ந்து வருவதைக் காண்கிறாள். ஆனால் மாதவிடாய் இரத்தம் எது தொடர் உதிரப்போக்கு எது? என்பதைப் பிரித்தறிந்து கொள்வதற்கு வழி யிருக்கிறது. எவ்வாறெனில் மாதத்தில் பத்து நாட்கள் கருப்பாகவும், மீதி நாட்களில் சிகப்பாகவும் காண்கிறாள் அல்லது பத்து நாட்கள் கட்டியாகவும், மீதி நாட்களில் இலேசாகவும் காண்கிறாள். அல்லது பத்து நாட்கள் வாடையுடனும், மீதி நாட்களில் வாடை இல்லாமலும் காண்கிறாள். இவ்வாறிருந்தால் அவளின் மாதவிடாய் இரத்தம் முதல் உதாரணத்தில் கருப்பானதும், இரண்டாவது உதாரணத்தில் கட்டியானதும், மூன்றாவதில் வாடையுடையதாகவும் ஆகும். மற்ற தன்மையிலுள்ளது தொடர் உதிரப்போக்காகும்.

3- மாதவிடாய் வழக்கம் அவளுக்கு இல்லாமல் அவள் இரத்தத்தைப் பார்த்த ஆரம்ப காலத்திலிருந்தே உதிரப்போக்கு தொடர்ந்து வந்துகொண்டு இருக்கிறது. மேலும் மாதவிடாய் இரத்தம் எது? தொடர் உதிரப்போக்கு எது? என பிரித்தறிந்து கொள்ள முடியாத அளவுக்கு அவளின் இரத்தம் ஒரே தன்மையிலோ அல்லது குழப்பமான தன்மைகளிலிலோ இருக்கிறது. இப்படிப்பட்டவள் பெரும்பாலான பெண்களின் வழக்கத்தை அடிப்படையாகக் கொண்டு செயல்பட வேண்டும்.

இவளது மாதவிடாய்க் காலம் ஒவ்வொரு மாதத்திலும் ஆறு அல்லது ஏழு நாட்களாகும். இதன் ஆரம்பம் அவள் இரத்தத்தைப் பார்த்த ஆரம்ப நாளிலிருந்து துவங்குகிறது. மற்ற நாட்கள் தொடர் உதிரப்போக்குடைய நாட்களாகும்.

**தொடர் உதிரப்போக்கின் சட்டங்கள்**

தொடர் உதிரப்போக்கின் சட்டம் சுத்தத்தின் சட்டம் போன்று தான். தொடர் உதிரப்போக்குடைய பெண்களுக்கும் சுத்தமுடனுள்ள பெண்களுக்குமிடையே எந்த வித்தியாசமும் இல்லை பின்வரும் இரண்டு விஷயங்களைத் தவிர.

1- தொடர் உதிரப்போக்குடையவள் ஒவ்வொரு தொழுகைக்கும் உளுச் செய்வது அவசியமாகும்.

2- அவள் உளுச் செய்ய விரும்பினால் இரத்தத்தின் அடையாளத்தைக் கழுவிக்கொள்ள வேண்டும். இரத்தம் வெளியேறாமல் தடுப்பதற்காக பெண் ணுறுப்பின் மீது ஒரு பஞ்சை வைத்து அதன் மேல் ஒரு துண்டுத் துணியை கட்டிக் கொள்ள வேண்டும்.

**பிரசவ இரத்தமும், அதன் சட்டங்களும்**

பிரசவ இரத்தமென்பது குழந்தை பிறந்த காரணத்தால் கர்ப்பப்பையிலிருந்து வெளயேறுகின்ற இரத்தமாகும். இது பிரசவித்தவுடன் வரும். அல்லது அதற்குப் பிறகும் அல்லது பிரசவத்துக்கு இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு முன்னால் பிரசவ வலியுடன் வரும். இந்த இரத்தம் எப்போது நின்றுவிடுகிறதோ அப்போதே அவள் சுத்தமாகிவிடுகிறாள். நாற்பது நாட்களை விட அதிகமாகி விட்டால் நாற்பதிற்குப் பின்னர் குளித்துவிட வேண்டும். ஏனெனில் அதுதான் பிரசவ இரத்தத்திற்குரிய கூடுதலான கால அளவாகும். தொடர்ந்து இரத்தம் வந்து கொண்டிருந்தாலும் சரியே. எனினும் நாற்பது நாட்களை விட அதிகமாக வருவது மாதவிடாய் இரத்தமாக இருந்தால் அதிலிருந்து சுத்தமாகும் வரை மாதவிடாய்க்காரியாக இருந்துவிட்டு பிறகு குளித்துக் கொள்ளவேண்டும்.

மனிதத் தோற்றம் தெளிவாகும் முறையில் முழுக் குழந்தையாக அவள் பெற்றெடுத்தால் தான் அது பிரசவ இரத்தமாகக் கருதப்படும். மனிதனின் தோற்றம் தெளிவாக இல்லாத சிறிய சதைக்கட்டியைப் பெற்றெடுத்தால் அந்த இரத்தம் பிரசவ இரத்தமல்ல. மாறாக அது நரம்புத் தளர்ச்சியின் இரத்தமாகும். இவளுக்குரிய சட்டம் தொடர் உதிரப்போக்குடையவளின் சட்டமாகும். மனிதத் தோற்றம் தெளிவாவதற்குரிய குறைந்த கால அளவு எண்பது நாட்களாகும். அதிகபட்ச கால அளவு தொன்னூறு நாட்கள் ஆகும். பிரசவ இரத்தத்திற்குரிய சட்டங்கள் முன்னால் கூறப்பட்ட மாதவிடாய்க்குரிய சட்டங்கள் போன்று தான்.

**மாதவிடாய் வருவதைத் தடுத்தல்**

ஒரு பெண் இரண்டு நிபந்தனைகளுடன் மாதவிடாய் வருவதைத் தடுத்து நிறுத்தக் கூடியவற்றை பயன் படுத்துவது கூடும்.

1- தனக்கு இடையூறு ஏற்படுமெனப் பயப்படாமல் இருக்க வேண்டும். இடையூறைப் பயந்தால் கூடாது.

2- உடலுறவுக்கு இடைஞ்சலாக இருக்குமானால் கணவனிடம் அனுமதி பெற வேண்டும்.

மாதவிடாய் வரவழைக்கக்கூடியவற்றைப் பயன்படுத்துவது இரு நிபந்தனை களுடன் கூடும்.

1- கணவனின் அனுமதி.

2- கடமைகளை விட்டும் தப்புவதற்கான தந்திரமாக இல்லாமலிருக்க வேண்டும். உதாரணமாக தொழுகை, நோன்பு போன்றவற்றை விட்டுவிடு வதற்காக இதைப் பயன்படுத்துவது.

**கருத்தரித்தலைத் தடுத்தல்**

இது இரு வகைப்படும்.

1- நிரந்தரமாகத் தடைசெய்வது. இது கூடாததாகும்.

2- குறிப்பிட்ட காலம் வரை தற்காலிமாகத் தடை செய்வது. ஒரு பெண் அடிக்கடி கர்ப்பமாகக்கூடியவளாக இருந்து அது அவளுக்குச் சிரமமாக இருந்தால் அதனால் இரண்டாண்டுக்கு ஒரு முறையோ அல்லது ஒரு குறிப்பிட்ட காலத்திலோ கர்ப்பமாவதை விரும்புகிறாள் என்றால் தற்காலிமாகத் தடை செய்வது கூடும். இதற்கு தனது கணவனின் அனுமதியும், அதனால் அவளுக்கு இடையூறில்லாம லிருப்பதும் நிபந்தனையாகும்.

# مختصر السيرة النبوية

## நபிகள் நாயகத்தின் சுருக்கமான வரலாறு

**நபித்துவத்திற்கு முன் அரபியரின் நிலை**

சிலை வணக்கம்தான் அன்றைய அரபியர்களிடம் வியாபித்திருந்த மார்க்கமாக இருந்தது. நேரிய மார்க்கத்திற்கு முரண்பட்ட இந்தச் சிலை வணக்கத்தை அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொண்டதால் அவர்கள் வாழ்ந்த காலம் அறியாமைக் காலமென அழைக்கப்பட்டது. ஏக இறைவனாகிய அல்லாஹ்வை விடுத்து அவர்கள் வணங்கி வந்த தெய்வங்களில் பிரபலமானவை லாத், மனாத், உஸ்ஸா, ஹுபல் ஆகியவையாகும். ஆயினும் யூத, கிறிஸ்தவ மதத்தவர்களும், நெருப்பை வணங்குபவர்களும் அரபியர்களில் இருந்தனர். மேலும் இப்ராஹீம் (அலை)

அவர்களின் மார்க்கமாகிய ஓரிறைக் கொள்கையைக் கடைபிடித்து வந்த வெகு சிலரும் அவர்களில் இருந்தனர்.

பொருளாதார நிலையைப் பொறுத்தவரை கிராமவாசிகள் மேய்ச்சலைச் சார்ந்திருக்கக்கூடிய கால்நடை களின் வருவாயையே முழுக்க முழுக்க நம்பி வாழ்ந்து வந்தனர். நகரவாசிகளிடம் பொருளாதார வாழ்க்கையின் அடிப்படை வியாபாரமும் விவசாயமுமாக இருந்தது. இஸ்லாம் வருவதற்கு சிறிது முன்னர் அரபுத் தீபகற்பத்தில் மக்கா நகர் மிகப் பெரும் வியாபாரத் தலமாகத் திகழ்ந்து வந்தது. அங்கு பல்வேறு பகுதிகளில் வீடுகளின் அமைப்புகளும் பழக்க வழக்கங்களும் நாகரிகமான முறையில் இருந்தன.

சமூக வாழ்வைப் பொறுத்தவரை அநீதி- அக்கிரமம் பெருமளவில் பரவிக் கிடந்தது. அங்கு பலவீனர்களுக்கு எந்த உரிமையும் கிடையாது. பெண் குழந்தைகள் உயிருடன் புதைக்கப்பட்டனர். புனிதமானவை எனக் கருதப் பட்டவை அலட்சியப்படுத்தப்பட்டன. பலமுள்ளவர்கள் பலவீனர்களின் உரிமை களைச் சுரண்டித் தின்றனர். கணக்கின்றி பல மனைவியரை வைத்திருந்தனர். விபச்சாரம் பரவிக் கிடந்தது. அற்பக் காரணங்களுக்காக பல குலங்களிடையே போர்கள் நடந்து கொண்டிருந்தன. இதுவே இஸ்லாம் தோன்றுவதற்கு முன் அரபு நாட்டின் சூழ்நிலை குறித்த சுருக்கமான கண்ணோட்டமாகும்.

**பலியிடப்பட்ட இருவரின் மகன்**

குறைஷிகள் நபிகள் நாயகத்தின் பாட்டனார் அப்துல் முத்தலிபிடம் தங்களின் சந்ததியினரையும் செல்வத்தையும் குறித்து பெருமையடித்துக் கொண்டிருந்தனர். அப்போது அப்துல் முத்தலிப், தனக்கு பத்து ஆண்மக்களை அல்லாஹ் கொடுத்தால் அவர்களில் ஒருவரை தெய்வங்களுக்கு அறுத்துப் பலியிடுவதாக நேர்ச்சை செய்துகொண்டார். அவர் விரும்பியது நடந்தது. அவருக்கு பத்து ஆண் மக்கள் பிறந்தனர். அவர்களில் ஒருவர் தான் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் தகப்பனார் அப்துல்லாஹ்.

அப்துல் முத்தலிப் தனது நேர்ச்சையை நிறைவேற்ற நாடியபோது தனது பிள்ளைகளிடையே சீட்டுக் குலுக்கிப் போட்டார். அதில் அப்துல்லாஹ்வின் பெயர் வந்தது. அவரை அறுத்துப் பலியிட நாடியபோது இது மக்களிடம் தவறான முன்னுதாரணமாக ஆகிவிடக்கூடாதென மக்கள் அவரைத் தடுத்தனர். பிறகு அப்துல்லாஹ்வா அல்லது அவருக்கு ஈடாக பத்து ஒட்டகமா? எனச் சீட்டுக் குலுக்கி எடுக்க வேண்டுமென அனைவரும் முடிவு செய்தனர். அவ்வாறு சீட்டுக் குலுக்கிப் போட்டபோது அப்துல்லாஹ்வின் பெயரே அதில் வந்தது. அதனால் ஒட்டகங்களின் எண்ணிக்கையை இருமடங்காக்கினர். மீண்டும் சீட்டுக் குலுக்கிப்

போட்டதில் அப்துல்லாஹ்வின் பெயரே திரும்பவும் வந்தது. ஆகவே ஒட்டகங்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தலாயினர். இவ்வாறு தொடர்ந்து சீட்டுக் குலுக்கிப் போட்டதில் அப்துல்லாஹ்வின் பெயரே அதில் வரவும் ஒட்டகங்களின் எண்ணிக்கை நூறை எட்டியது. ஆப்போது தான் சீட்டும் ஒட்டகங்களின் பெயருக்கு வந்தது. அப்துல் முத்தலிப் தனது மகன் அப்துல்லாஹ்வுக்குப் பகரமாக அந்த ஒட்டகங்களை அறுத்தார்.

அப்துல் முத்தலிப் தமது பிள்ளைகளில் அப்துல்லாஹ் மீது மிகப் பிரியமானவராக இருந்தார். குறிப்பாக இந்த சம்பவத்திற்குப் பிறகு! அப்துல்லாஹ் பெரியவரானதும் அவரின் தகப்பனார் பனூஸஹ்ரா கோத்திரத்தில் வஹ்ப் என்பவரின் மகளான ஆமினா என்ற வாலிபப் பெண்ணைத் தேர்வு செய்து அவருக்கு மண முடித்து வைத்தார். ஆமினா கர்ப்பமானாள். அவள் கருவுற்ற மூன்றாம் மாதம் அப்துல்லாஹ் வியாபாரக் கூட்டத்துடன் சிரியா நாட்டுக்குப் புறப்பட்டுச் சென்றார். திரும்பி வரும் வழியில் நோய்வாய்ப்பட்டார். எனவே மதீனாவில் பனூநஜ்ஜார் கோத்திரத்தைச் சேர்ந்த தனது மாமன்மார்களிடத்தில் தங்கியிருந்தார். அங்கேயே அவருக்கு மரணம் ஏற்பட்டு அடக்கமும் செய்யப்பட்டார்.

ஆமினாவுக்கு கர்ப்ப காலம் முடிந்து ஒரு திங்கள் கிழமை அன்று நபிகள் நாயகம் (ஸல்) பிறந்தார்கள். ஆயினும் அவர்கள் இன்ன தேதியில், இன்ன மாதத்தில் பிறந்தார்கள் என்பதற்கு எந்த வரலாற்றுக் குறிப்பும் இல்லை. சில அறிவிப்பில் ரபீவுல் அவ்வல் 9 என்றும், சில அறிவிப்பில் 12 என்றும், இன்னும் சில அறிவிப்பில் ரமலான் என்றும் வந்துள்ளது. இன்னும் பல அறிவிப்புகளும் உள்ளன. ஆனாலும் நபிகள் நாயகத்தின் பிறப்பு கி.பி.570 (மற்றொரு அறிவிப் பின்படி 571) ஆம் ஆண்டு நடந்தது. அப்போது அது யானை ஆண்டாக இருந்தது.

**யானை வரலாறு**

அபீஸீனிய நாட்டு மன்னர் நஜ்ஜாஷியின் பிரதிநிதியாக யமனில் ஆட்சி செய்த அப்ரஹா என்பவன், அரேபியர்கள் மக்காவிலுள்ள கஅபத்துல்லாஹ்வை ஹஜ் செய்வதையும் அதனை அவர்கள் புனிதப்படுத்துவதையும், மிகவும் தூரமான பகுதிகளிலிருந்தெல்லாம் அங்கு வருவதையும் கண்டபோது ஸன்ஆ என்ற ஊரில் பெரிய சர்ச் ஒன்றைக் கட்டினான். ஹஜ்ஜுக்குச் செல்லும் அரபியரை அதன் பால் திருப்பிவிட வேண்டும் என்பதற்காக. இதைக் கேள்வியுற்றதும் அரபுக் குலங்களில் ஒன்றான பனூ கினானாவைச் சேர்ந்த ஒருவன் இரவில் அந்த சர்ச்சினுள் நுழைந்து அதன் சுவர்களில் மலத்தைத் தேய்த்து விட்டான். இதைக் கேள்வியுற்றதும் அப்ரஹா கொதித் தெழுந்தான். ஆறாயிரம் போர் வீரர்கள் கொண்ட மிகப் பெரும் படையைத் தயார்படுத்தினான். அப்படையில் ஒன்பது யானைகள்

இருந்தன. அவற்றில் மிகப் பெரிய யானையைத் தனக்காகத் தேர்ந் தெடுத்துக் கொண்டு கஅபதுல்லாஹ்வை இடிப்பதற்காக அப்படையுடன் புறப்பட்டான்.

மக்காவுக்கு அருகே வந்தடைந்ததும் தன் படையைத் தயார்படுத்தி மக்கா விற்குள் நுழைய ஆயத்தமானான். எனினும் அவன் யானை மக்காவை நோக்கிச் செல்லாமல் படுத்துவிட்டது. அவர்கள் யானையை வேறு திசைகளின் பக்கம் திருப்பினால் எழுந்து ஓட ஆரம்பிக்கின்றது. மக்காவை நோக்கித் திருப்பினால் படுத்துக்கொள்கின்றது. இந்நிலையில் அவர்கள் மீது “அபாபீல்” பறவைக் கூட்டங்களை அல்லாஹ் அனுப்பிவைத்தான். அவை நரக நெருப்பில் சூடேற்றப் பட்ட சிறு சிறு கற்களை அவர்கள் மீது எறிந்தன. ஒவ்வொரு பறவையும் கொண்டைக் கடலை அளவிலான மூன்று கற்களைச் சுமந்து வந்தது. ஒன்று அவற்றின் அலகிலும் மற்ற இரண்டு இரு கால்களிலும் இருந்தன. அக்கற்கள் ஒருவன் மீது விழுந்து விட்டால் அவனுடைய உறுப்புகள் துண்டு துண்டாகி சிதைந்து அவன் அழிந்தேபோவான். அவர்கள் பயந்து ஓடும்போது வழியிலேயே விழுந்து அழிந்தனர்.

அப்ராஹாவின் கதி என்னவெனில், அல்லாஹ் அவன் மீது ஒரு நோயை அனுப்பினான். அதன் காரணமாக அவனது விரல்கள் அழுகி விழுந்தன. ஸன்ஆவை அடைவதற்குள் அந்நோய் அவன் உடல் முழுதும் பரவி அங்கேயே செத்து மடிந்தான். குறைஷிகளோ அப்படையைக் கண்டு தம் உயிர்களுக்கு அஞ்சி பள்ளத்தாக்குகளில் சிதறிச் சென்று மலைகளில் ஏறி தம்மைக் காத்துக் கொண்டனர். பிறகு யானைப் படையினருக்கு நேர வேண்டியது நேர்ந்த பிறகு குறைஷிகள் அச்சமற்றவர்களாக வீடு திரும்பினர். இந்நிகழச்சி நபிகள் நாயகம் பிறப்பதற்கு ஐம்பது நாட்களுக்கு முன்பு நடைபெற்றது.

**நபிகள் நாயகத்துக்குப் பாலூட்டுதல்**

நபிகள் நாயகம் பிறந்தபோது அவரது பெரிய தந்தை அபூலஹபுடைய அடிமைப் பெண் ஸுவைபா என்பவள் நபிகளாருக்குப் பாலூட்டினாள். அதற்கு முன் நபிகள் நாயகத்தின் சிறிய தந்தை- அப்துல் முத்தலிபுடைய மகன் ஹம்ஸா வுக்கும் பாலூட்டி இருந்தாள். இதனால் ஹம்ஸா நபிகள் நாயகத்துக்குப் பால்குடி சகோதரர் ஆவார்.

அரபியர்களிடம் ஒரு வழக்கம் இருந்தது. ஆரோக் கியமான உடல் வளர்ச்சிக் குரிய காரணிகள் தங்கள் குழந்தைகளுக்கு முழுமையாகக் கிடைக்க வேண்டும் என்பதற்காக அவர்கள் தங்களின் குழந்தைகளுக்குப் பாலூட்டி வளர்க்கும்படி கிராமவாசிகளிடம் அனுப்பி வைப்பார்கள். அந்த அடிப்படையில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வேறொரு செவிலித்தாயிடம் ஒப்படைக் கப்பட்டார்கள். எவ்வா

றெனில் நபிகள் நாயகம் பிறந்த சமயம் பனூஸ.்.த் கோத்திரத்தைச் சேர்ந்த கிராமத்துப் பெண்களின் ஒரு பிரிவினர் பாலூட்டி வளர்ப்பதற்காக குழந்தை களைத் தேடி மக்காவுக்கு வந்தனர். அப்பெண்கள் வீடுவீடாகச் சுற்றித் திரிந்தனர். அவர்கள் அனைவருமே நபிகள் நாயகம்(ஸல்)அவர்களைப் புறக்கணித்தனர். காரணம் நபியவர்கள் அநாதையாகவும் ஏழையாகவும் இருந்ததே!

நபிகள் நாயகத்தைப் புறக்கணித்த அத்தகைய பெண்களில் ஹலீமத்துஸ் ஸ.்.திய்யா என்ற பெண்ணும் ஒருவராக இருந்தார். எனினும் அதிகமான வீடுகளை அவர் சுற்றியலைந்தும் வசதியான குடும்பத்தைச் சேர்ந்த ஒரு குழந்தை அருக்குக் கிடைக்கவில்லை. அப்படியொரு குழந்தை கிடைத்தால் தன்னுடன் எடுத்துச் சென்று அந்த வகையில் கிடைக்கும் கூலியைக் கொண்டு வாழ்க்கையில் குறிப்பாக அந்த பஞ்ச ஆண்டில், தன்னை எதிர்கொள்ளும் கஷ்டத்தையும் வறுமையையும் சமாளித்துக் கொள்வார். எனவே ஹலீமா அநாதைக் குழந்தையையும் அற்பக் கூலியையும் பொருந்திக் கொண்டு ஆமீனாவின் வீட்டிற்குத் திரும்பி வந்தார்.

மெலிந்த, மெதுவாகச் செல்லக்கூடிய பெண் கழுதையில் பயணமாகி ஹலீமா தன் கணவருடன் மக்காவுக்கு வந்திருந்தார். திரும்பிச் செல்லும் வழியில் ஹலீமா நபிகள் நாயகம்(ஸல்)அவர்களை தன் மடியில் வைத்திருக்கும்போது அக்கழுதை வேகமாக ஓட ஆரம்பித்தது. எல்லா வாகனங்களையும் பின்னால் தள்ளிவிட்டது. வழியில் செல்லும் பயணக் கூட்டத்தினர் மிகவும் ஆச்சரியப்படலானார்கள்.

மேலும் ஹலீமா கூறியதாவது: “அவரது மார்பகத்தில் கொஞ்சம்கூட பால் சுரக்காமல் பால் குடிக்கும் அவரது குழந்தை கடுமையான பசியின் காரணமாக எப்போதும் அழுதுகொண்டிருக்கும். ஆயினும் நபிகள் நாயகம்(ஸல்)அவர்களுக்கு அவர் பாலூட்டியபோது அவரது மார்பில் அதிகம் பால் சுரந்தது.” மேலும் ஸ.்.து கிளையாரின் பகுதியிலிருந்த வறண்டு போயிருந்த தனது பூமியைப் பற்றியும் கூறினார்: “இக்குழந்தைக்குப் பாலூட்டும் பாக்கியம் பெற்றதும் அவருடைய பூமியும் கால்நடைகளும் பலன் தந்தன. அவரது நிலையே முற்றிலும் மாறியது. அவரது கஷ்டமும் வறுமையும் மாறி மகிழ்ச்சியும் செழிப்பும் மலர்ந்தது.”

நபிகள் நாயகம் (ஸல்) ஹலீமாவின் பராமரிப்பில் இரண்டாண்டுகளைக் கழித்தார்கள். அவர்களின் மீது ஹலீமா முழுமையான ஆர்வம் கொண்டிருந்தார். இக்குழந்தையைச் சூழ்ந்திருக்கக்கூடிய வழக்கத்திற்கு மாற்றமான விஷயங் களையும் நிலைமைகளையும் நன்கு உணர்ந்திருந்தார். இந்த இரு ஆண்டாண்டு களுக்குப் பிறகு குழந்தையை மக்காவில் இருந்த அவரது தாய், பாட்டனா ரிடத்தில் கொண்டு வந்தார். எனினும் அக்குழந்தையின் பரகத்தால் தனது

நிலையில் ஏற்பட்ட மாற்றத்தைக் கண்ட ஹலீமாஇரண்டாம் முறையும் அக்குழந் தையை தன்னுடன் வைத்துக் கொள்ள இணங்குமாறு ஆமினாவை வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார். ஆமினாவும் சம்மதிக்கவே ஹலீமா அநாதைக் குழந்தை யுடன் ஸ.்.து கிளையாரிடம் மீண்டும் திரும்பி வந்தார். மகிழ்ச்சி அவரைச் சூழ்ந்து கொண்டது. பாக்கியம் அவரை வளைத்துக் கொண்டது.

**நெஞ்சு பிளக்கப்படுதல்**

நபிகள் நாயகம் (ஸல்)அவர்கள் நான்கு வயதை நெருங்கி விட்டபோது ஒரு நாள் ஹலீமாவின் மகனான தமது பால்குடிச் சகோதரருடன் கூடாரங்களை விட்டும் தூரமாக விளையாடிக்கொண்டிருந்தார்கள். ஹலீமாவின் மகன் ஓடி வந்தார். அவரது முகத்தில் திடுக்கத்தின் அடையாளம் தெரிந்தது. தன்னுடைய தாயிடம் தன் குறைஷிச் சகோதரரைக் காண வரும்படிக் கேட்டுக் கொண்டார்.

நடந்த விஷயம் என்னவென்று தாய் அவரிடம் கேட்கவும் அதற்கு அவர், “வெண்மையான ஆடையில் இரு மனிதர்களைக் கண்டேன். அவ்விருவரும் எங்களிடமிருந்து அவரைப் பிடித்து அவரைப் படுக்க வைத்து அவரின் நெஞ்சைப் பிளந்தனர்”... என்று செய்தியைப் பூரணமாக முடிப்பதற்கு முன் ஹலீமா நபிகள் நாயகத்திடம் விரைந்து சென்றார். அப்போது அந்த இடத்திலேயே அவர்கள் அசையாமல் நிற்பதைக் கண்டார். அவர்களது முகத்தில் மஞ்சள் நிறம் படிந்திருந்தது. அவர்களின் நிறம் பயத்தால் மாறியிருந்தது. என்ன நடந்தது என்று அவர்களிடம் கைசேதத்துடன் கேட்டார்.

அதற்கவர்கள் தாம் நலமுடன் இருப்பதாகவும் தம்மிடம் வெண்மையான ஆடையில் இரு மனிதர்கள் வந்து தம்மைப் பிடித்து தமது நெஞ்சைப் பிளந்து இதயத்தை வெளியே எடுத்து அதிலிருந்து ஒரு கருப்புத் துண்டை அகற்றி அதை எறிந்து விட்டார்கள். பிறகு இதயத்தை குளிர்ந்த நீரால் கழுவி உள்ளே வைத்து விட்டு நெஞ்சின் மேல் கையால் தடவினார்கள். அதன் பிறகு அவ்விருவரும் அவ்விடத்தை விட்டுச் சென்று மறைந்து விட்டனர் எனவும் நடந்ததைக் கூறினார்கள். ஹலீமா பிளந்த இடத்தைத் தடவிப் பார்த்தார். எந்த அடையா ளத்தையும் காணவில்லை. பிறகு நபிகள் நாயகம்(ஸல்)அவர்களைக் கூடாரத் திற்குக் கூட்டி வந்தார்.

அடுத்த நாள் காலையில் நபியவர்களை அவர்களின் தாயாரிடம் திரும்பக் கொண்டு சென்றார். ஹலீமா குழந்தையைத் திரும்பக் கொண்டு வந்தது ஆமினாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. அது திரும்பக் கொண்டு வருவதற்குரிய நேரமல்ல. அது மட்டுமல்ல ஹலீமாவுக்கு அக்குழந்தையின் மீது ஆர்வமும்

இருந்ததே! எனவே திரும்பக் கொண்டு வந்த காரணத்தைக் ஆமினா அவரிடம் கேட்டார். அதற்கு ஹலீமா நெஞ்சு பிளக்கப்பட்ட நிகழ்ச்சியைக் கூறினார்.

ஆமினா தன் அநாதைக் குழந்தையுடன் பனூ நஜ்ஜார் கோத்திரத்தைச் சேர்ந்த தன் மாமன்மார்களை சந்தித்து வருவதற்காக மதீனாவுக்குச் சென்றார். அங்கு சில நாட்கள் தங்கியிருந்து விட்டு திரும்பும் வழியில் அப்வா.ஃ. என்னு மிடத்தில் ஆமினா மரணமடைந்தார். அங்கேயே அடக்கமும் செய்யப்பட்டார்.

இதோ! நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் தமது ஆறாம் வயதில் தாயையும் இழந்து விடுகிறார்கள். இவற்றுக் கெல்லாம் ஈடான அரவணைப்பையும் ஆதரவையும் நபியவர்களுக்கு அளிப்பது பாட்டனார் அப்துல் முத்தலிபின் கடமையாக ஆனது. அப்துல் முத்தலிப் நபிகள் நாயகம் (ஸல்)அவர்களைப் பேணிப் பராமரித்து வந்தார். அவர்கள் மீது அன்பு செலுத்தி வந்தார். நபிகள் நாயகம்(ஸல்)அவர்களுக்கு எட்டு வயது இருக்கும்போது அவர்களின் பாட்டனார் அப்துல் முத்தலிபும் மரணமடைந்தார். அதன் பிறகு நபியவர்களை அவர்களின் பெரிய தகப்பனார் அபூதாலிப் தமது பொறுப்பில் எடுத்துக் கொண்டார். அவருக்கு குழந்தைகள் அதிகமாக இருந்தும் பொருளாதாரம் குறைவாக இருந்தும் இவ்வாறு ஏற்றுக் கொண்டார். அவரும் அவரது மனைவியும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைத் தங்களின் பிள்ளைகளில் ஒருவராகவே நடத்தி வந்தனர். அநாதையான அக்குழந்தை பெரிய வயதை அடையும் வரை தம் பெரிய தகப்பனாருடனேயே வாழ்ந்து வந்தது.

இத்தகைய சூழ்நிலையில் தான் நபியவர்களது ஆரம்ப கால வாழ்க்கை துவங்கியது. உண்மை, நம்பிக்கை, நாணயம் ஆகிய நற்பண்புகளின் மீது வளர்ந்து வந்தார்கள். உண்மையாளர், நம்பிக்கைக்குரியவர் என்பது அவர்களை அறிமுகப்படுத்தும் சிறப்புப் பட்டப்பெயராய் ஆனது. நம்பிக்கைக்குரியவர் அல்லது உண்மையாளர் வந்துவிட்டாரெனக் கூறப்பட்டால் நிச்சயமாக அது நபிகள் நாயகம் தான் என்று அறியப்பட்டது. சிறிது பெரியவராக அவர்கள் வளர்ந்த பின்பு தமது வாழ்கை விவகாரங்களிலும் சம்பாத்தியத்திலும் தமது சொந்தக் காலில் நிற்க ஆரம்பித்தார்கள். அந்த வகையில் தமது உழைப்பு மற்றும் சம்பாத்தியத்தின் பயணத்தைத் தொடங்கினார்கள். குறைஷிகளில் ஒருவரிடம் அற்பமான கூலிக்கு ஆடுகள் மேய்க்கும் வேலையைச் செய்தார்கள்.

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் ஷாம் தேசத்திற்குச் செல்லும் ஒரு வியாபாரக் கூட்டத்தில் பங்கேற்றார்கள். அவ்வியாபாரத்தில் குவைலதின் மகள் கதீஜா அதிகமான செல்வத்தை முதலீடு செய்திருந்தார். விதவையான அவர் பெரும் செல்வச் சீமாட்டி! அந்தப் பயணத்தில் கதீஜாவின் பொருள்களுக்கு அவருடைய

அடிமையும் அவரின் காரியங்களை நிர்வகிப்பவருமான மைஸரா என்பவர் பொறுப்பாளராக இருந்தார். நபிகள் நாயகம்(ஸல்)அவர்களின் பாக்கியத்தாலும் அவர்களின் நாணயத்தாலும் கதீஜாவுக்கு இதற்கு முன்னர் கிடைக்காத அளவுக்கு மிகப்பெரும் இலாபம் கிடைத்தது.

இப்பெரும் லாபத்திற்குரிய காரணத்தை தனது அடிமை மைஸராவிடம் கதீஜா கேட்டார். அதற்கவர், “இவ்வியாபாரத்தில் கொடுக்கல் வாங்கலுடைய பொறுப்பை அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மத் ஏற்றிருந்தார். மக்கள் அவரை நோக்கி பெரும் பெரும் கூட்டமாக வந்தனர். மேலும் இப்பெரும் இலாபம் எவ்வித அநியா யமின்றிக் கிடைத்தது” எனத் தெரிவித்தார். தனது அடிமை மைஸரா சொல்வதை கதீஜா மிகக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். அவரும் அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மதைப் பற்றி சில விஷயங்களை அறிந்திருந்தார்.

இப்போது அவரின் மீது அவருக்கு அதிகமான பிரியம் ஏற்பட்டு அவரைத் திருமணம் செய்துகொள்ளவும் விரும்பினார். இவ்விஷயத்தில் முஹம்மதுடைய விருப்பத்தைத் தெரிந்து வருவதற்காகத் தன்னுடைய உறவினர்களில் ஒரு பெண்ணை தூது அனுப்பினார். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இருபத்தைந்து வயதை எட்டியிருந்தார்கள். கதீஜாவை மணந்து கொள்ளக் கேட்டு நபியவர்களிடம் அந்தப் பெண் தூது வந்தபோது அவர்கள் அதை ஏற்றுக் கொண்டார்கள். திருமணம் முடிந்தது. அவ்விருவரும் ஒருவரைக் கொண்டு ஒருவர் பாக்கியம் அடைந்தனர்.

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கதீஜாவின் சொத்துக் காரியங்களை நிர்வாகம் செய்ய ஆரம்பித்தார்கள். அதில் தமது கவனத்தையும் சக்தியையும் செலுத்தினார்கள். சில வருடங்கள் கழிந்தன. கதீஜா தொடர்ந்து கருவுற்று ஸைனப், ருகைய்யா, உம்முகுல்ஸூம், ஃபாத்திமா ஆகிய பெண்மக்களையும் காசிம், அப்துல்லாஹ் என இரு ஆண் மக்களையும் பெற்றெடுத்தார்கள். காசிம், அப்துல்லாஹ் ஆகிய இருவரும் சிறுவயதிலேயே இறந்துவிட்டார்கள்.

**புளூல் உடன்படிக்கை**

இந்த உடன்படிக்கை ஏற்பட்டதற்குரிய காரணம் வருமாறு: யமனிலுள்ள ஸுபைதா கோத்திரத்தைச் சேர்ந்த ஒருவர் தமது வியாபாரச் சரக்குகளுடன் மக்கா வந்தார். அவரிடமிருந்து அவற்றை ஆஸ் பின் வாயில் என்பவர் வாங்கினார். இவர் மக்காவில் மதிப்பிற்குரியவராகவும் பெரும் அந்தஸ்துடைய வராகவும் இருந்தார். இவர், வியாபாரிக்குச் சேர வேண்டிய உரிமையைக் கொடுக்கவில்லை. ஸுபைதா கோத்திரத்தைச் சேர்ந்த அந்த வியாபாரிக்கு நியாயம் கிடைக்கக் குரல் கொடுப்பதற்கும் அவருடைய உரிமையை பெற்றுத்

தருவதற்கும் அங்கு யாரும் இல்லை. அதனால் அவர் ஒரு மலையின் மீது ஏறி தனக்கு இழைக்கப்பட்ட அநீதி குறித்து உரத்துச் சொன்னார். இதனைக் கேட்டதும் மக்காவிலுள்ள பல்வேறு கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு குழுவினர் எழுந்தனர். அநீதி யிழைக்கப்பட்டோருக்கு அவர்களது உரிமைகளை மீட்டுத் தர வேண்டும் என அவர்கள் அனைவரும் ஏகமனதான முடிவுக்கு வந்தனர். மேலும் மக்காவில் யாருக்கேனும் அநீதியிழைக்கப்படக் கண்டால் அவர் மக்காவைச் சேர்ந்தவராக இருந்தாலும் சரி அல்லது வெளியிலிருந்து மக்கா வுக்கு வந்தவர்களில் ஒருவராக இருந்தாலும் சரி அவருக்காகக் களமிறங்கி அவரது உரிமையை மீட்டுத் தருவோம் என அவர்கள் அனைவரும் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டனர். இந்த உன்படிக்கைக்கு குறைஷிகள் புளூல் உடன்படிக்கை எனக் குறிப்பிட்டனர். இந்த உடன்படிக்கையில் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களும் பங்கேற்றனர். அப்போது அவர்களது வயது இருபது.

**கஅபாவைக் கட்டுதல்**

நபிகள் நாயகம்(ஸல்) அவர்களுக்கு 33 வயது இருக்கும்போது கஅபாவைப் புதுப்பித்து அதனைத் திரும்பவும் கட்ட வேண்டும் என்று குறைஷிகள் விரும் பினர். காரணம் கஅபாவின் கட்டடம் மிகப் பழமையாக இருந்ததால் அதன் சுவர்கள் சிதிலமடைந்து, இடிந்து கீழே விழும் நிலையில் இருந்தது. மேலும் மக்காவில் மிகப் பெரும் வெள்ளப் பிரளயம் ஏற்பட்டு அது கஅபத்துல்லா வுக்குள் புகுந்ததாலும் கஅபா இடிந்துவிடும் நிலைக்கு ஆளானது. எனவே கஅபாவின் கண்ணியம் கருதி அதனைப் புதுப்பிக்க வேண்டிய அவசியம் குறைஷிகளுக்கு ஏற்பட்டது. கஅபாவைக் கட்டுவதற்கு நல்ல- தூய்மையான பணத்தையே செலவு செய்ய வேண்டும். தவறான வழி சம்பாத்தியத்தை அதில் சேர்க்கக் கூடாது என்று அனைவரும் ஏகோபித்த முடிவுக்கு வந்தனர்.

பிறகு கட்டுமானம் தொடங்கி ஹஜருல் அஸ்வத் எனும் கருப்புக் கல்லை உரிய இடத்தில் வைக்க வேண்டிய கட்டம் வந்தபோது அந்தக் கல்லை அதன் இடத்தில் வைப்பதற்குரிய சிறப்பை யாருக்குக் கொடுப்பது என்பதில் குறைஷி களுக்கிடையே கருத்து வேறுபாடு தோன்றியது. இந்த சர்ச்சை நான்கு அல்லது ஐந்து நாட்கள் வரை நீடித்தது. மேலும் அவர்களுக்குள் கடும் போர் மூளும் அளவுக்கு இந்த வாக்குவாதம் கடுமையானது. பிறகு அவர்கள் அனைவரும் ஏகமனதான ஒரு முடிவுக்கு வந்தனர். அதாவது நாளை காலையில் இந்தப் புனிதப் பள்ளிவாசலில் யார் முதன் முதலில் நுழைகிறாரோ அவரை தமக் கிடையே நடுவராக ஆக்கிக் கொள்வது. ஆனால் பள்ளிவாசலில் முதன் முதலில் நுழைபவர் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று

அல்லாஹ் நாடியிருந்தான். நபியவர்கள் முதன் முதலாகப் பள்ளிவாசலில் நுழைவதை குறைஷிகள் கண்டபோது “இதோ நம்பிக்கைக்குரியவர் வந்து விட்டார்! இதோ முஹம்மத் வந்துவிட்டார்! இவரை நடுவராக ஏற்றுக் கொள் வோம்” என்று ஆரவாரம் செய்தனர். நபியவர்கள் அவர்களிடம் வந்தபோது குறைஷிகள் தங்கள் முடிவை அவர்களிடம் தெரிவித்தனர். பிறகு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு போர்வையைக் கொண்டு வருமாறு கேட்டார்கள். அதன் நடுவில் ஹஜருல் அஸ்வத் எனும் கல்லை வைத்தார்கள். சண்டையிட்டுக் கொண்ட கோத்திரங்களின் தலைவர்களை அழைத்து அந்தப் போர்வையின் ஓரங்களைப் பிடிக்கச் சொல்லி கல்லைத் தூக்குமாறு கூறினார்கள். அதற்குரிய இடத்திற்கு அதை அவர்கள் கொண்டு சென்றதும் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தம் கையால் அந்தக் கல்லை எடுத்து அதன் இடத்தில் வைத்தார்கள். இது ஓர் விவேகமான தீர்வாகும். மக்கள் இதனைப் பொருந்திக் கொண்டனர்.

கஅபாவைப் புதுப்பிப்பதற்குரிய பணம் குறைஷிகளிடம் பற்றாக்குறையானது. எனவே கஅபாவின் வடக்குப் பகுதியில் சுமார் ஆறு முழம் கொண்ட ஒரு பகுதியை கஅபாவை விட்டும் அகற்றினர். அதுதான் தற்போது (அரை வட்டம் வடிவிலுள்ள) ஹிஜ்ர் இஸ்மாயில் என்றும் கத்தீம் என்றும் அழைக்கப்படுகிறது. பிறகு கஅபாவைக் கட்டி முடித்த பிறகு அது செவ்வக வடிவில் அமைந்தது. கஅபாவின் வாயிலை தரையை விட்டும் உயர்த்தினர். காரணம் அவர்கள் விரும்புபவர்கள் மட்டுமே அதில் நுழைய வேண்டும் என்பதுதான். கட்டுமானம் 15 முழம் வரை உயர்ந்ததும் அதன் முகட்டை ஆறு தூண்களின் மீது அமைத்தனர்.

**நபித்துவம்**

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் தமது நாற்பதாம் வயதை நெருங்கியபோது மக்காவுக்குப் பக்கத்திலுள்ள ஒரு மலையில் ஹிரா என்னும் குகையில் அதிக நாட்களைத் தனிமையில் கழித்தார்கள். அங்கேயே பல இரவு பகல்கள் தங்கி இறைவழிபாட்டில் ஈடுபட்டார்கள். அவர்கள் தமது நாற்பதாம் வயதை அடைந்ததும் ரமலான் மாதம் 21-ம் இரவில் ஹிரா குகையில் தங்கியிருந்த போது அவர்களிடம் ஜீப்ரீல்(அலை) வந்து “நீர் ஓதுவீராக” எனக் கூறினார்கள். அதற்கு நபிகள் நாயகம்(ஸல்) “எனக்கு ஓதத்தெரியாது” எனக் கூறினார்கள். ஜிப்ரீல்(அலை) இரண்டாம் முறையும் மூன்றாம் முறையும் “ஓதுவீராக” எனக் கூறினார்கள். மூன்றாம் முறை “படைத்த உம் இறைவனின் திருப்பெயர் கொண்டு ஓதுவீராக! கருக் கட்டியிலிருந்து அவன் மனிதனைப் படைத்தான். ஓதுவீராக! உம் இறைவன் எத்தகைய மாபெரும் அருட்கொடையாளன் எனில் அவனே

எழுதுகோலின் மூலம் கற்றுக்கொடுத்தான். மனிதனுக்கு அவன் அறியாதவற்றை யெல்லாம் கற்றுக்கொடுத்தான்" (96:1-5) எனக் கூறினார்கள். பின்னர் அவர்கள் சென்றுவிட்டார்கள்.

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் ஹிரா குகையில் தங்கியிருக்க முடியவில்லை. உள்ளம் நடுங்கியவர்களாக வீட்டிற்குத் திரும்பி கதீஜாவிடம் வந்தார்கள். "என்னைப் போர்த்துங்கள்! என்னைப் போர்த்துங்கள்!" எனக் கூறினார்கள். வீட்டிலுள்ளோர் நபியவர்களைப் போர்த்தினார்கள். இறுதியில் பயம் அவர்களை விட்டும் நீங்கியது. பின்னர் தமக்கு ஏற்பட்டதை கதீஜாவிடம் கூறி தமக்கு ஏதும் நேர்ந்துவிடுமோ என தாம் பயந்து போய்விட்டதாகவும் கூறினார்கள். அப்போது கதீஜா(ரலி) "அப்படியெல்லாம் ஒன்றும் ஆகாது. அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ் ஒருபோதும் உங்களை இழிவுபடுத்த மாட்டான். ஏனென்றால் நீங்கள் சொந்த பந்தங்களுடன் இணைந்து வாழ்கிறீர்கள். ஆதரவற்றோரை அரவணைக்கிறீர்கள். வறியவர்களுக்காக உழைக்கிறீர்கள். விருந்தினரை உபசரிக்கிறீர்கள். சோதனைகளில் ஆட்பட்டோருக்காக உதவு கிறீர்கள்" எனக் கூறினார்கள்.

சில நாட்களுக்குப் பிறகு நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் தமது இறைவணக்க வழிபாட்டைத் தொடர் வதற்காக மீண்டும் ஹிரா குகைக்குத் திரும்பினார்கள். தமது வழிபாடு முடிந்ததும் மக்காவுக்குத் திரும்பிச் செல்வதற்காக ஹிராவி லிருந்து இறங்கி வந்தார்கள். பதனுல்வாதி என்னும் இடத்தில் சென்று கொண் டிருக்கும் போது ஜிப்ரீல்(அலை) அவர்கள் வானத்திற்கும் பூமிக்கும் இடையே ஒரு சிம்மாசனத்தில் அமர்ந்தவர்களாகத் தோன்றினார்கள். பிறகு "போர்த்திக் கொண்டு படுத்திருப்பவரே! எழுந்து எச்சரிக்கை செய்வீராக! உம் இறைவனைப் பெருமைப் படுத்துவீராக! உம்முடைய ஆடைகளைத் தூய்மையாக்குவீராக! அசுத்தத்திலிருந்து விலகியிருப்பீராக!" (74:1-5) என்ற வசனங்கள் இறங்கின. அதன் பின் வஹி தொடர்ந்து வந்து கொண்டிருந்தது.

நபி(ஸல்)அவர்கள் தமது அழைப்புப் பணியைத் தொடங்கியபோது சிறப்பிற் குரிய அவர்களது மனைவி ஈமானின் அழைப்பை ஏற்றுக் கொண்டார்கள். அல்லாஹ்வை ஏகன் என்றும் தம் கணவர் நபி என்றும் சான்று பகர்ந்தார்கள். இவர்கள் தான் இஸ்லாத்தை முதன் முதலில் ஏற்றுக் கொண்டவராவார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது உற்ற நண்பர் அபூபக்கரிடம் இந்த சத்தியத்தைத் தெரிவித்தபோது அவரும் எவ்விதத் தடுமாற்றமும் இன்றி ஏற்றுக் கொண்டார்கள்.

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் தமது தாயாருக்கும் பாட்டனாருக்கும் பின்னர் தம்மைப் பொறுப்பேற்று வளர்த்த தம் பெரிய தந்தை அபூதாலிபின் உதவிக்குப் பகரமாக அவருடைய மக்களில் அலீ என்பவரை எடுத்து வளர்த்துவரலா னார்கள். அவருக்காக செலவு செய்தார்கள். இந்த நிலையில் அலீயின் உள்ளம் தெளி வடைந்து நபிகள் நாயகம் மீது நம்பிக்கை கொண்டார். இதன் பின்னர் இவர்களைத் தொடர்ந்து கதீஜாவின் அடிமை ஸைத் பின் ஹாரிஸாவும் நம்பிக்கை கொண்டார்.

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் இஸ்லாமியப் பிரச்சாரத்தை இரகசியமாகவே தொடர்ந்து செய்து வந்தார்கள். இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்கள் அதை இரகசியமாக வைத்துக் கொண்டனர். ஏனெனில் அவர்களில் ஒருவரது விவகாரம் வெளியே தெரிந்து விட்டால் அவர் இஸ்லாத்தை விட்டுவிட வேண்டுமென் பதற்காக குறைஷிகள் இழைக்கும் கொடுமையான வேதனைகளுக்கு அவர் பலியாக வேண்டியது வரும்! அந்த நேரத்தில் நபித்தோழர்கள் தொழுகை யையும் மற்ற வழிபாடுகளையும் நிறைவேற்ற நாடினால் இணைவைப்பவர் களுக்குத் தெரியாமல் மக்காவுக்கு வெளியே உள்ள பள்ளத்தாக்குகளுக்குச் சென்றுவிடுவார்கள்.

**பகிரங்கப் பிரச்சாரம்**

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் தனித்தனி நபர்களை அழைப்பதில் மூன்று ஆண்டுகளைக் கழித்த பின்னர் “உமக்கு கட்டளையிடப்பட்டிருப்பதை பகிரங்மாக அறிவிப்பீராக! இணைவைப்பவர்களைப் புறக்கணிப்பீராக!”(15:94) எனும் வசனம் இறங்கியது. உடனே ஒரு நாள் நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் ஸ∴பா குன்றின் மீது நின்றுகொண்டு மக்காவாசிகளை அழைத்தார்கள். அவர்கள் முன் அதிக மானோர் ஒன்று கூடினார்கள். நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் பெரிய தகப்பனார் அபூலஹபும் அங்கு இருந்தான். அவன்தான் குறைஷிகளிலேயே அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கடுமையான விரோதி.

மக்கள் நபிகள் நாயகம்(ஸல்)அவர்களிடம் ஒன்று திரண்டதும், “இம்மலைக்குப் பின்னால் எதிரிகள் உங்களை அழிக்க எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என நான் உங்களிடம் கூறினால் என்னை நீங்கள் நம்புவீர்களா?” என்று கேட்டார்கள். அதற்கவர்கள், “ஆம்! உண்மையையும் நம்பிக்கையையும் தவிர வேறு எதையுமே நாங்கள் உங்களிடம் அறிந்ததில்லை” எனக் கூறினார்கள். அப்போது நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள், “நிச்சயமாக நான் கடுமையான வேதனை குறித்து உங்களை எச்சரிக்கிறேன்” எனக் கூறினார்கள். பின்பு அவர்களை அல்லாஹ்வின்

பக்கமும் சிலைவணக்கங்களை விட்டுவிடுமாறும் அழைக்க ஆரம்பித்தார்கள். அப்போது அக்கூட்டத்திலிருந்த அபூலஹப் கொதித்தெழுந்தான். "உனக்கு நாசம் உண்டாகட்டும்! இதற்காகவா எங்களை ஒன்று கூட்டினாய்?" எனக் கேட்டான். இதன் பிறகு அல்லாஹ் பின்வரும் வசனங்களை இறக்கி வைத்தான்:

"அபூலஹபின் இரு கைகளும் அழிந்தன! அவனும் அழிந்தான்! அவனது செல்வமும் அவன் செய்தவையும் அவனைக் காக்கவில்லை. கொழுந்துவிட் டெரியும் நெருப்பில் அவனும் விறகு சுமப்பவளான அவனது மனைவியும் கருகுவார்கள். அவள் கழுத்தில் முறுக்கேறிய ஈச்சமரக் கயிறு உள்ளது." (111:15)

நபிகள் நாயகம்(ஸல்)தொடர்ந்து அழைப்புப் பணியை மேற்கொண்டார்கள். மக்கள் கூடுமிடங்களிலெல்லாம் பகிரங்கமாகப் பிரச்சாரம் செய்து அவர்களை இஸ்லாத்தின் பால் அழைத்துக் கொண்டிருந்தார்கள். கஅபத்துல்லாஹ்வில் தொழுது வந்தார்கள். மக்கள் கூடும் இடங்களுக்கும் இணைவைப்போரின் வியாபாரத் தலங்களுக்கும் சென்று அவர்களை இஸ்லாத்தின் பக்கம் அழைத் தார்கள். இதனால் அவர்கள் அதிகமான துன்பங்களுக்கு ஆளாக நேர்ந்தது. இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டோருக்கும் இறைநிராகரிப்பாளர்கள் கொடுத்து வந்த தொல்லைகள் அதிகமாயின. யாஸிர்(ரலி), சுமையா(ரலி) மற்றும் அவர்களின் மகன் அம்மார்(ரலி) ஆகியோருக்கு ஏற்பட்ட சோதனைகள் இதற்கு உதாரணமாகும். ஆம்! அம்மார் (ரலி) யின் தாய் தந்தையர் இருவரும் வேதனையின் கொடுமையால் உயிர்த்தியாகிகளாக உயிரிழந்தார்கள். இஸ்லாத்தில் முதன் முதலாக உயிர்த்தியாகம் செய்த பெண்மணி சுமையா (ரலி) அவர்கள் தான்.

அதுபோல பிலால்(ரலி) அவர்களுக்கும் அபூஜஹ்ல், உமையா பின் கல.்.ப் ஆகிய இருவரால் துன்பம் ஏற்பட்டது. காரணம் பிலால்(ரலி) அபூபக்கர்(ரலி) அவர்கள் மூலமாக இஸ்லாத்தை ஏற்றிருந்தார்கள். அவர்களின் எஜமான் உமையா பின் கல.்.ப், இதை அறிந்ததும் பிலால் இஸ்லாத்தை விட்டு விட வேண்டுமென்பதற்காக எல்லா வகையான வேதனைகளையும் பிரயோகித்துப் பார்த்தான். ஆயினும் பிலால் மறுத்து விட்டார்கள். தமது மார்க்கத்தையே உறுதியாகப் பற்றிப் பிடித்துக் கொண்டார்கள்.

பிலால் அவர்களை உமையா சங்கிலியால் கட்டி மக்காவிற்கு வெளியே கொண்டு வந்தான். அனல் பறக்கும் சுடுமணலில் படுக்க வைத்து அவர்களின் நெஞ்சில் மிகப் பெரும் பாறாங்கல்லை வைத்து அவனும் அவனைச் சாந்த வர்களும் சாட்டையால் மாறி மாறி பிலாலை அடித்தனர். பிலால்(ரலி) அவர்கள் அஹத்! அஹத் (ஏகன்! ஏகன்!) என்றே திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டி

ருந்தார்கள். இந்நிலையில் பிலாலை அபூபக்கர்(ரலி) அவர்கள் கடந்து செல்லும் போது உமையாவிடமிருந்து அவர்களை விலைக்கு வாங்கி அடிமைத் தளையி லிருந்து அவர்களை அல்லாஹ்வின் பாதையில் விடுவிடுத்தார்கள்.

இத்தகைய கொடுமைகள் நிகழ்ந்தபோது தான் முஸ்லிம்கள், தாங்கள் இஸ்லாத்தைத் தழுவியதைப் பகிரங்கப்படுத்த வேண்டாமென நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடுத்தது அறிவார்ந்த செயலாக ஆனது! இது போலத்தான் நபிகள் நாயகம் (ஸல்) முஸ்லிம்களைச் சந்தித்து உரையாடுவதும் இரகசிய மாகவே இருந்தது! ஏனெனில் அவர்களைச் சந்திப்பது, உரையாடுவது பகிரங்கமாக நடந்திருந்தால் நபியவர்களை- முஸ்லிம்களுக்கு நற்போதனை அளிக்கவிடாமலும் நல்வழிகாட்டவிடாமலும் இணைவைப்பாளர்கள் நிச்சயம் தடுத்திருப்பார்கள்! ஒருக்கால் அந்தச் சூழ்நிலை இரு சாராருக்கும் மோதலை உருவாக்கும் அளவுக்குச் சென்றிடலாம். அப்படி ஒரு மோதல் உருவானால் ஒட்டுமொத்தமாக முஸ்லிம்களை அழித்தொழிப்பதற்கே அது வழிவகுத் திடலாம். ஏனெனில் அந்த அளவு முஸ்லிம்களின் எண்ணிக்கை அப்போது குறைவாக இருந்தது. அவர்கள் நிராயுதபாணிகளாகவும் இருந்தனர். எனவே தான் மறைவாகச் செயல்படுவது விவேகமாக இருந்தது. ஆனால் நபிகள் நாயகம் (ஸல்)அவர்களைப் பொறுத்தவரை குறைஷி நிராகரிப்பாளர்களின் தொல்லைகள் தமக்கு இருந்தபோதிலும் தம் பிரச்சாரத்தையும் வணக்க வழிபாட்டையும் இணை வைப்பவர்களுக்கு மத்தியில் பகிரங்கமாகவே செய்து வந்தார்கள்.

**ஹம்ஸா இஸ்லாத்தைத் தழுவுதல்**

ஒரு நாள் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கஅபா பள்ளிவாசலில் அமர்ந்தி ருக்கும்போது இணைவைப்பவர்களின் தலைவனும் இஸ்லாத்தின் விரோதி யுமான அபூஜஹ்ல் நபியவர்களைக் கடந்து சென்றான். அப்போது அவன் நபியவர்களைத் திட்டினான்; அவர்களை மனம் நோகச் செய்தான். அவர்களிடம் வரம்பு மீறி நடந்து கொண்டான். ஆனாலும் நபியவர்கள் அவனுக்கு எந்தப் பதிலும் கொடுக்கவில்லை. அவனிடம் எதுவும் பேசவுமில்லை. ஆனால் இங்கு நடந்ததை ஒரு பெண்மணி பார்த்துவிட்டாள். அதன் பிறகு சிறிது நேரத்தில், மக்காவுக்கு வெளியே வேட்டைக்குச் சென்றிருந்த நபியவர்களின் சிறிய தந்தை ஹம்ஸா(ரலி)அங்கு வந்தார். அவரிடம் அந்தப் பெண்மணி அபூஜஹ்ல் செய்த தையும் நபிகளாரை அவன் திட்டியதையும் எடுத்துச் சொன்னாள். இதனைக் கேட்ட ஹம்ஸா(ரலி) கடும் சினம் கொண்டு அபூஜஹ்லைத் தேடிச் சென்றார். அங்கே அபூஜஹ்ல் சிலருடன் அமர்ந்திருப்பதைக் கண்டு, அவனுடைய தலையில் வில்லால் ஓங்கி அடித்தார். அவனைப் பெரிய அளவில் காயப்

படுத்தினார். மேலும் "நான் முஹம்மதுடைய மார்க்கத்தில் இணைந்திருக்கும் போது நீ அவரைத் திட்டுவாயா?" என்று கேட்டார். இதுதான் ஹம்ஸா(ரலி) இஸ்லாத்தை ஏற்பதற்குக் காரணமாக அமைந்தது. இவர் இஸ்லாத்தை ஏற்றதில் முஸ்லிம்களுக்குக் கண்ணியமும் பலமும் கிடைத்தது. மக்காவாசிகளிடம் இவருக்கு நல்ல மரியாதையும் அந்தஸ்தும் இருந்ததே அதன் காரணமாகும்.

**உமர் இஸ்லாத்தைத் தழுவுதல்**

பிறகு உமர் பின் கத்தாப்(ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றதனால் முஸ்லிம்களுக்கு கண்ணியமும் பலமும் இன்னும் அதிகமாயின. இது நடந்தது ஹம்ஸா(ரலி) இஸ்லாத்தை ஏற்று மூன்று நாட்களுக்குப் பிறகாகும். ஒரு நாள் உமர், நபிகள் நாயகத்தைக் கொலை செய்யும் நோக்கத்துடன் புறப்பட்டார். அப்போது வழியில் ஒருவர் அவரை சந்தித்து, "உமரே! எங்கே செல்கின்றீர்" என்று கேட்டார். அதற்கு உமர், "முஹம்மதைக் கொலை செய்யப் போகிறேன்" என்றார். அதற்கு அந்த மனிதர், "நீர் முஹம்மதைக் கொன்று விட்டால் பனூ ஹாஷிம் கோத்திரத்தார்களிடமிருந்தும் பனூஸஹ்ரா கோத்திரத் தார்களிட மிருந்தும் நீர் எப்படித் தப்ப முடியும்?" என்று கேட்டார். அதற்கு உமர், "நீரும் மதம் மாறி விட்டதாகவே உம்மைக் காண்கிறேன். மேலும் இதுவரை நீர் பின்பற்றி வந்த மார்க்கத்தைக் கைவிட்டு விட்டதாகவே கருதுகிறேன்." என்றார். அதற்கு அந்த மனிதர், "உமரே! இதைவிட ஆச்சரியமான விஷயத்தை நான் உமக்குக் கூறட்டுமா? உமது சகோதரியும், அவருடைய கணவரும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு விட்டனர். நீர் பின்பற்றி வந்த உமது மார்க்கத்தை அவர்கள் கைவிட்டுவிட்டனர்" என்று கூறினார். உடனே உமர் கோபத்துடன் புறப்பட்டு அவ்விருவரிடம் வந்தார்.

அங்கு அவர்களிடம் கப்பாப் பின் அரத்(ரலி) என்பார் இருந்தார். அவர் தம்மிட முள்ள ஒரு ஏட்டிலிருந்து தாஹா அத்தியாயத்தை அவ்விருவருக்கும் ஓதிக் காட்டிக் கொண்டிருந்தார். உமர் வந்ததை கப்பாப் உணர்ந்தபோது வீட்டிற்குள் ஓடி ஒழிந்து கொண்டார். உமருடைய சகோதரி பாத்திமா அந்த ஏட்டை மறைத்துக் கொண்டார். உமர் அந்த வீட்டின் அருகில் வந்தபோது கப்பாப் ஏதோ ஓதுவதை செவியேற்றிருந்தார். இப்போது உமர் வீட்டினுள் அவ்விருவர்களிடம் வந்ததும் "நீங்கள் இருவரும் ஏதோ ஓதியதுபோல் என் காதில் விழுந்ததே! அது விஷயம் என்ன?" என்று கேட்டார். அதற்கு அவ்விருவரும் "எதுவுமில் லையே! எங்களுக்குள் நாங்கள் பேசிக்கொண்டிருந் தோம் அவ்வளவுதான்." என்று கூறினார்கள். உடனே உமர், "நீங்கள் இருவரும் மதம் மாறிவிட்டீர்கள்; உங்கள் மதத்தை நீங்கள் கைவிட்டுவிட்டீர்கள் என்றே கருதுகிறேன்" என்றார்.

அதற்கு அவருடய சகோதரியின் கணவர், “உமரே! சத்தியம், உமது மதத்தில் இல்லாமல் வேறு மதத்தில் இருந்தால் என்ன செய்வீர்கள்?” என்றார். உடனே உமர் அவர் மீது பாய்ந்து அவரை ஓங்கி உதைத்தார். உமரின் சகோதரி வந்து உமரைத் தமது கணவரை விட்டும் தள்ளினார். உமர் தமது கையால் அவளை அடித்து அவளது முகத்தைக் காயப்படுத்தினார். அவள் கோபத்துடன் “அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ்” (வணக்கத்திற் குரியவன் அல்லாஹுவைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மது அவனுடைய தூதரா வார்கள் என்றும் நான் சாட்சி சொல்கிறேன்) என்று கூறினாள்.

தமது சகோதரிக்கு நேர்ந்த இரத்தக் காயத்தை உமர் பார்த்தபோது, மிகவும் வருந்தினார்; வெட்கப்பட்டார். மேலும் “உங்களிடமுள்ள அந்த வேதத்தை எனக்குப் படிக்கத் தாருங்கள்” என்று கேட்டார். அதற்கு அவருடைய சகோதரி “நீங்கள் அசுத்தமானவர், தூய்மையானவர்களைத் தவிர வேறு யாரும் இந்த வேதத்தைக் தொடமாட்டார். எனவே நீங்கள் சென்று குளித்துவிட்டு வாருங்கள்” என்று கூறிவிட்டாள். உடனே உமர் எழுந்து குளித்துவிட்டு வந்து அந்த வேதத்தை எடுத்து ஓதலானார். “பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்” என்று ஓதிவிட்டு “என்னே அழகான, தூய்மையான பெயர்கள்!” என்றார். பிறகு தாஹா அத்தியாயத்தை ஓதினார். அதில் “திண்ணமாக நான் தான் அல்லாஹ். என்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. எனவே என்னை வணங்கு வீராக. என்னை நினைவுகூரும் பொருட்டு தொழுகையை நிலைநாட்டுவீராக” (20:14) என்ற வசனம் வரை ஓதினார். பிறகு “என்னே அழகான, சங்கைக்குரிய வார்த்தை இது! முஹம்மது எங்கே இருக்கிறார்கள் என்று எனக்குக் காண் பித்துக் கொடுங்கள்” என்றார்.

உமர் கூறிய இந்த வார்த்தைகளை கப்பாப் கேட்டதும் ஒழிந்திருந்த அவர் வெளியே வந்தார். உமரே! மகிழ்ச்சியடையும். நபிகளாரின் பிரார்த்தனையின் பலன் உமக்குக் கிடைத்துவிட்டதாகவே நான் கருதுகிறேன். ஏனெனில் அவர்கள் “இறைவா! கத்தாபின் மகன் உமர் மூலமாக அல்லது ஹிஷாமின் மகன் அபூஜஹ்ல் மூலமாக இஸ்லாத்திற்கு கண்ணியமும் சிறப்பும் வழங்குவாயாக!” என்று பிரார்த்தித்தார்கள்.

பிறகு உமர் தமது வாளை எடுத்துக் கொண்டு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் இருந்த வீட்டை நோக்கி நடந்தார். அங்கு சென்று கதவைத் தட்டினார். அங்கே ஒரு மனிதர் எழுந்து கதவின் இடைவெளி மூலம் பார்த்தபோது வாளை ஏந்திக் கொண்டு உமர் நிற்பதைக் கண்டார். உமர் வந்த செய்தியை அங்குள்ள

மக்களிடம் அவர் தெரிவித்ததும் எல்லோரும் குழம்பிப் போனார்கள். நபி(ஸல்) அவர்களோ வீட்டின் உள்பகுதியில் இருந்தார்கள். “உங்களுக்கு என்ன நேர்ந்தது?” என ஹம்ஸா(ரலி) அவர்கள் தோழர்களிடம் கேட்டார்கள். அதற்கு தோழர்கள் “உமர் வந்திருக்கிறார்” என்று கூறினர். “அவருக்காகக் கதவைத் திறங்கள். அவர் நன்மையை நாடி வந்திருந்தால் நாமும் அவருக்கு நன்மையே செய்வோம். அவர் தீமையை நாடி வந்திருந்தால் அவருடைய வாளாலேயே அவரைத் தீர்த்துக்கட்டி விடுவோம்” என்று ஹம்ஸா(ரலி) கூறினார்கள். பிறகு உமர் உள்ளே சென்று பகிரங்கமாக இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார். அந்த வீட்டிலுள்ளவர்கள் அல்லாஹு அக்பர் என்று தக்பீர் முழங்கினார்கள். அதனைக் கஅபாவில் உள்ளவர்களும் செவியேற்றனர்.

சுஹைப் அர்ரூமி(ரலி) அவர்கள் கூறியதாவது: உமர் இஸ்லாத்தைத் தழுவி யதும் இஸ்லாம் மேலோங்கியது. மேலும் இஸ்லாத்தின் பக்கம் பகிரங்கமாக அழைப்பு விடுக்கப்பட்டது. நாங்கள் (எவ்வித அச்சமும் இன்றி) கஅபாவைச் சுற்றிலும் பல குழுக்களாக அமர்ந்திருப்போம். கஅபாவை தா∴பும் செய்வோம். அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறியதாவது: உமர் இஸ்லாத்தை ஏற்றதிலிருந்து நாங்கள் மதிப்பிற்குரியவர்களாகவே திகழ்ந்து வந்தோம்.

**இணைவைப்போர் நபிகளாருக்கு ஆசை வார்த்தை கூறுதல்**

ஏராளமானோர் இஸ்லாத்தில் இணைந்து கொண்டிருப்பதை சிலைவணங் கிகள் பார்த்தபோது, இன்னும் இஸ்லாத்தை விட்டும் மக்களைத் தடுப்பதற்காக அவர்கள் மேற்கொண்ட அனைத்து முயற்சிகளும் பலனளிக்காததை அவர்கள் கண்டபோது இஸ்லாத்தைப் பரப்பவிடாமல், அதன் பக்கம் மக்களை அழைக்க விடாமல் நபிகள் நாயகத்தைத் தடுப்பதற்காக வேறொரு வழியைத் தேட முயன்றனர். அந்த வகையில் மக்கத்துத் தலைவர்களில் ஒருவரான உத்பா பின் ரபீஆ என்பவன் நபிகள் நாயகத்திடம் வந்தான். அவர்கள் தன்னந்தனியாக ஹரம் ஷரீ∴ப் எனும் புனிதப் பள்ளிவாசலில் அமர்ந்திருந்தார்கள். அவன் கூறினான்: “எனது சகோதரனின் மகனே! திண்ணமாக நீர் உமது கூட்டத்தார் களிடம் மிகப் பெரும் விஷயத்தைக் கொண்டுவந்துள்ளீர். அதன் மூலம் அவர்களின் ஒற்றுமையைக் குலைத்துவிட்டீர். அவர்களின் கடவுள்களையும் மதத்தையும் குறை கூறிவிட்டீர். இறந்துபோய்விட்ட அவர்களின் முன்னோர்களை இறைநிராகரிப்பாளர்களாக ஆக்கிவிட்டீர். எனவே கேளும்! நான் உமக்கு சில விஷயங்களை எடுத்து வைக்கின்றேன்; அவற்றை சற்று சிந்தித்துப் பாரும். அவற்றில் சிலவற்றை நீர் ஏற்றுக் கொள்ளலாம்.” அதற்கு நபிகள் நாயகம்

(ஸல்) அவர்கள் "அபுல்வலீதே! (இது உத்பாவின் புனைப் பெயர்) கூறும்; நான் கேட்கிறேன்." என்றார்கள்.

அப்போது உத்பா கூறினான்: "எனது சகோதரனின் மகனே! நீர் கொண்டு வந்திருக்கின்ற இந்த கொள்கைக்குப் பகரமாக உமக்கு பெரும் செல்வம் வேண்டுமெனில் நாங்கள் எங்களுடைய செல்வங்களை உம்மிடம் கொண்டு வந்து கொட்டுகிறோம். நீர் எங்களில் பெரும் செல்வந்தராகிவிடலாம். அல்லது உமக்குப் பதவியும் அந்தஸ்தும் வேண்டுமெனில் உம்மை எங்களுக்கு தலைவராக நியமிக்கிறோம். உம்மிடம் ஆலோசனை செய்யாமல் நாங்கள் எந்த முடிவையும் எடுக்க மாட்டோம். அல்லது நீர் மன்னராக வேண்டுமென்று விரும்பினால் உம்மை எங்களுக்கு மன்னராக ஆக்குகிறோம். அல்லது உம் மிடம் ஜின் ஏதும் வருகிறது என்றால்- அதனைத் தடுக்க உம்மால் முடியவில்லை எனில் உமக்காக நாம் மருத்துவர்களை வரவழைக்கிறோம். நீர் குணமடையும் வரை உமக்காக எங்கள் செல்வங்கள் அனைத்தையும் செலவு செய்கிறோம்." இவ்வாறு அவன் கூறி முடித்ததும் இதனைக் கேட்டுக் கொண்டிருந்த நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள், "அபுல்வலீதே! கூறி முடித்துவிட்டாயா?" என்றார்கள். அவன் "ஆம்" என்றான். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள், "இப்போது நான் கூறுகிறேன் கேளும்" என்றார்கள். அவன் கேட்கிறேன்" என்றான். நபியவர்கள் பின்வரும் திருக்குர்ஆன் வசனங்களை ஓதினார்கள்.

بسم الله الرحمن الرحيم ﴿حم، تَنْزِيلٌ مِنَ الرَّحْمَنِ الرَّحِيمِ ، كِتَابٌ فُصِّلَتْ آيَاتُهُ قُرْآنًا عَرَبِيًّا لِقَوْمٍ يَعْلَمُونَ ، بَشِيرًا وَنَذِيرًا فَأَعْرَضَ أَكْثَرُهُمْ فَهُمْ لَا يَسْمَعُونَ﴾ [فصِّلت]

"அளவற்ற அருளானனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் (துவங்குகிறேன்). ஹா மீம், அளவற்ற அருளானனும் நிகரற்ற அன்புடையோ(னுமாகி இறைவ) னிடமிருந்து (இது) அருளப்படதாகும். இது எத்தகைய வேதமெனில் இதன் வசனங்கள் நன்கு விவரிக்கப் பட்டிருக்கின்றன. அறிந்துகொள்ளும் மக்களுக்கு அரபு மொழியில் அமைந்த குர்ஆனாகவும் இது இருக்கின்றது. நற்செய்து கூறக்கூடியதாகவும் எச்சரிக்கை செய்யக்கூடியதாகவும் இது இருக்கின்றது.(ஆனால்)அவர்களில் பெரும்பாலோர் இதனைப் புறக்கணித்து விட்டனர். அவர்கள் செவிமடுப்பதில்லை."(41:1-4) பின்னர் அவர்கள் தொடர்ந்து ஓதிக் கொண்டே சென்றார்கள். உத்பா தனது இரண்டுகைகளையும் தம் முதுகுக்குப் பின்னால் தரையில் ஊன்றிக் கொண்டு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஓதுவதை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தான். நபியவர்கள் ஸஜ்தா வசனத்தை அடைந்ததும் ஸஜ்தா செய்தார்கள். பிறகு "அபுல்வலீதே! நீர்

செவியேற்க வேண்டியதைச் செவியேற்றுவிட்டாய். பிறகு உம் விருப்பம்!” என்று கூறிவிட்டார்கள்.

பிறகு உத்பா எழுந்து தன் தோழர்களிடம் வந்தான். அவனைப் பார்த்ததும் அவர்கள் ஒருவருக் கொருவர் பேசிக்கொண்டார்கள்: “அல்லாஹ்வின் மீது ஆணையாக! அபுல்வலீத் எந்த முகத்துடன் இங்கிருந்து சென்றாரோ அந்த முகத்துடன் இப்போது திரும்பி வரவில்லை” என்று! உத்பா அவர்களிடம் வந்து அமர்ந்தபோது, “என்ன செய்தி அபுல்வலீதே!” என்று அவர்கள் கேட்டார்கள். அதற்கு அவன், “அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் இதுவரை செவி யேற்காத ஒரு வார்த்தையைச் செவியேற்றுள்ளேன். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அது சூனியமில்லை! அது கவிதையுமல்ல, ஜோதிடமுமல்ல! குறைஷி சமுதாயமே! நான் சொல்வதைக் கேளுங்கள். அந்த மனிதரை (முஹம்மதை) அவரது நிலையிலேயே விட்டுவிடுங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் அவரிடமிருந்து செவியேற்ற வார்த்தைக்கு எதிர்காலத்தில் மகத்தான செய்தி ஏற்படப் போகிறது! நீங்கள் அல்லாத வேறு அரேபியர்கள் அவரைக் கொலை செய்து விட்டால் நீங்கள் செய்ய வேண்டிய வேலை மற்ற வர்கள் மூலம் நிறைவேறிவிட்டதாகக் கருதுங்கள். ஆனால் அவர் அரேபியரை வென்றுவிட்டால் அவருடைய ஆட்சிதான் உங்கள் ஆட்சியாக இருக்கும். அவருடைய கண்ணியம்தான் உங்களுடைய கண்ணியமாக இருக்கும். பிறகு அவர் மூலம் மக்களிலேயே அதிகம் நற்பாக்கியம் உடையவர்களாக நீங்கள் ஆகுவீர்கள்” என்று கூறினான். இதைக் கேட்ட அவர்கள், “அபுல்வலீதே! உமக்கும் அவர் தமது நாவால் சூனியம் செய்துவிட்டார்” என்று கூறினார்கள். உடனே உத்பா, “இது அவரைப் பற்றிய எனது கருத்தாகும். உங்களுக்கு என்ன தோன்றுகிதோ அதை நீங்கள் செய்யுங்கள்” என்று கூறினான்.

**அபீஸீனியாவுக்கு ஹிஜ்ரத் செய்தல்**

இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டவர்களை குறிப்பாக பலவீனர்களை இணை வைப்பவர்கள் தொடர்ந்து துன்புறுத்திக் கொண்டிருந்ததனால் நபித்தோழர்கள் தம் மார்க்கத்தைக் காத்துக்கொள்வதற்காக அபீசீனியாவை நோக்கி ஹிஜ்ரத் மேற்கொண்டு, அங்குள்ள மன்னர் நஜ்ஜாஷியிடம் செல்வதற்கு அனுமதிக்குமாறு நபிகள் நாயகம்(ஸல்) அவர்களிடம் கேட்டுக் கொண்டார்கள். குறிப்பாக அவரிடம் மட்டுமே அவர்களுக்குப் பாதுகாப்பு கிடைக்கும் என்பதால். ஏனெனில் பெரும் பாலான முஸ்லிம்கள் தமக்கும் தம் குடும்பத்தினருக்கும் குறைஷிகளால் தீங்கு ஏற்படுமோ எனப் பயந்துகொண்டிருந்தனர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும்

அபீஸீனியா செல்வதற்கு அனுமதித்தார்கள். இது நடந்தது நபித்துவத்தின் ஐந்தாம் ஆண்டில்.

சுமார் எழுபது முஸ்லிம்கள் தம் குடும்பத்துடன் அபீஸீனியாவுக்கு ஹிஜ்ரத் செய்தனர். இவர்களில் உஸ்மான்(ரலி) அவர்களும் அவர்களின் மனைவியான நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் மகள் ருகைய்யா(ரலி) அவர்களும் இருந்தனர். அந்த முஸ்லிம்கள் அபீசீனியாவில் தங்கியிருக்கும் சூழ்நிலை யையும் இணைவைப்பவர்கள் குலைத்திட முயற்சி செய்தார்கள். அபீசீனிய மன்னருக்கு அன்பளிப்புகள் அனுப்பி வைத்து தங்களது நாட்டிலிருந்து ஓடி வந்த முஸ்லிம்களைத் தங்களிடம் திருப்பி ஒப்படைக்குமாறு கேட்டுக் கொண் டார்கள். மேலும் முஸ்லிம்கள் ஈஸா(அலை) அவர்களையும் அவர்களின் தாயாரையும் திட்டுகிறார்கள் என்றும் புகார் கூறினார்கள்.

இதுபற்றி நஜ்ஜாஷி மன்னர் முஸ்லிம்களிடம் விளக்கம் கேட்டபோது அதற்க வர்கள் ஈஸா(அலை) அவர்களைப் பற்றி இஸ்லாம் கூறுவதை அவருக்குத் தெளிவுபடுத்தி உண்மையை விளக்கிக் கூறினார்கள். திருக்குர்ஆனில் உள்ள “மர்யம்” என்ற அத்தியாயத்தை ஓதிக்காட்டினார்கள். பிறகு மன்னர் அவர்களுக்குப் பாதுகாப்பு வழங்கினார். குரைஷிகளிடம் அவர்களைத் திருப்பி ஒப்படைக்க மறுத்து விட்டார்.

இதே ஆண்டு ரமலானில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கஅபாவிற்குச் சென்றார்கள். அங்கு குறைஷிகளின் பெரும் கூட்டமொன்று இருந்தது. அங்கு நின்று கொண்டு நஜ்ம் அத்தியாயத்தை ஓத ஆரம்பித்தார்கள். இந்த இறைநிரா கரிப்பாளர்கள் இதற்கு முன் அல்லாஹ்வின் வார்த்தையைச் செவியேற்றது கிடையாது. காரணம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடமிருந்து எதையும் செவியேற்காதீர்கள் என்று தொடர்ந்து அவர்கள் பரஸ்பரம் கூறிக்கொண் டிருந்தார்கள். இப்போது நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் திடீரென இந்த அத்தியாயத்தை ஓதிக்காட்டியபோது- ஈர்ப்பு சக்தியுள்ள இத்தெய்வீக வாக்கு அவர்களின் செவிகளைத் தட்டியபோது அவர்களில் ஒவ்வொருவரும் அதை செவிதாழ்த்திக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அதல்லாத வேறெதுவும் அவர்களின் உள்ளத்தில் ஊசலாடவில்லை. இறுதியாக “அல்லாஹ்வுக்கே சிரம்பணியுங்கள்! அவனையே வணங்குங்கள்!” (53:62) என்ற வசனத்தை ஓதி நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஸுஜூது செய்தபோது அவர்கள் அனைவரும் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் ஸஜ்தாவில் விழுந்தார்கள்.

இவ்வழைப்புப் பணியை எதிர்க்கும் வழியில் குரைஷிகள் பல்வேறு வழிமுறை களைப் பின்பற்றினர், துன்பம் கொடுத்தனர், கொடுமைகள் இழைத்தனர், ஆசை

வார்த்தைகளைக் காட்டினர், அச்சுறுத்தினர். ஆயினும் இவையனைத்தும் இஸ்லாத்தை உறுதியாகப் பற்றிப் பிடிப்பதற்கும் மு.ஃ.மின்கள் அதிகமாவதற்குமே வழிவகுத்தன. இப்போது குறைஷிகளின் உள்ளத்தில் புதியதொரு திட்டம் பளிச்சிட்டது! அதுதான் முஸ்லிம்களையும் பனூஹாஷிம் கிளையினரையும் ஒட்டுமொத்தமாக சமூகப்பகிஷ்காரம் செய்ய வேண்டும்; அவர்களிடம் கொடுக்கல் வாங்கல், திருமணம், உதவி போன்ற எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளக் கூடாது என்று ஒரு ஏட்டில் எழுதி அதில் அவர்கள் அனைவரும் கையெழுத்திட்டு கஅபா ஆலயத்தின் உள்ளே தொங்க விட வேண்டும் என்பது!

எனவே முஸ்லிம்கள் மக்காவிற்கு வெளியே ஒரு கணவாய்ப் பகுதிக்கு செல்ல வேண்டிய நிர்பந்தத்திற்கு உள்ளானார்கள். அதற்கு அபூதாலிப் கணவாய் என்று பெயர். அங்கு முஸ்லிம்கள் மிகக் கடுமையான கஷ்டத்திற்கு ஆளானார்கள். பசியையும் பல்வேறு கஷ்டங்களையும் அனுபவித்தனர். அவர்களில் வசதியுள் ளவர்கள் தங்களின் பெரும் செல்வத்தை செலவிட்டனர். கதீஜா(ரலி) அவர்கள் தம் செல்வம் அனைத்தையும் செலவு செய்தார்கள். முஸ்லிம்களுக்கு மத்தியில் நோய் நொடிகள் பரவியது. பெரும்பாலோர் அழிந்துவிடும் நிலைக்கு ஆளாயினர். எனினும் அவர்கள் நிலை குலையாமல் உறுதியோடும் பொறுமையோடும் இருந்தார்கள். அவர்களில் எவரும் தன் மார்க்கத்திலிருந்து பின்வாங்கவில்லை.

இப்புறக்கணிப்பு மூன்றாண்டுகள் நீடித்தது. பின்னர் குரைஷிகளில் பனூஹா ஷிம்களுடன் உறவுமுறைத் தொடர்பு வைத்திருந்த சில முக்கியப் பிரமுகர்கள் அந்த ஏட்டிலுள்ள ஒப்பந்தத்தை முறித்தார்கள். அதை மக்களிடையே பகிரங்கப் படுத்தினார்கள். அவர்கள் அந்த ஏட்டை வெளியே எடுத்தபோது அதைக் கரையான்கள் அரித்திருந்ததைக் கண்டார்கள். அதில் “இறைவா! உனது திருநாமத்தைக் கொண்டு ஆரம்பிக்கிறேன்” என்ற வாசகத்தைத் தவிர வேறு எதுவும் எஞ்சியிருக்கவில்லை. நெருக்கடி நீங்கி முஸ்லிம்களும் பனூஹாஷிம் களும் மக்காவுக்குத் திரும்பினர்.

ஆனாலும் குறைஷிகள் அநீதியான தமது நிலைப்பாட்டிலேயே பிடிவாதமாக இருந்தனர். அதாவது முஸ்லிம்களை எதிர்ப்பது, இஸ்லாத்திற்கு எதிராகப் போர் தொடுப்பது, நபிகள் நாயகத்தை சந்திக்க விடாமல் மக்களைத் தடுப்பது அல்லது திருக்குர்ஆனைச் செவியேற்கவிடாமல் தடுப்பது என்ற நிலையிலேயே நீடித்தனர். முஸ்லிம்களைச் சந்திக்க வரும் அரபிகள் அனைவரையும் அவர்கள் எச்சரிக்கை செய்து வந்தனர். இது குறித்து து.ஃ.பைல் பின் அம்ர் அத்தவ்ஸி என்பவர் அறிவிப் பதாவது:

ஒரு நாள் அவர் மக்கா வந்தார். அப்போது குறைஷிகள் சிலர் அவரிடம் சென்றனர். து.ஃ.பைல் தமது சமுதாயத்தில் செல்வாக்கு மிக்க தலைவராகத் திகழ்ந்தார். அவரிடம் சென்ற குறைஷிகள் நபிகள் நாயகம் குறித்து அவரை எச்சரிக்க ஆரம்பித்தனர். நபியவர்களின் அருகில்கூட செல்லக்கூடாது, அவர்களது பேச்சைக் கேட்கக்கூடாது என்று அச்சுறுத்த ஆரம்பித்தனர். மேலும் நபிகளாரின் பேச்சு சூனியத்தைப் போன்றது! அது ஒரு மனிதனை அவரது தந்தையை விட்டும், அவரது சகோதரரை விட்டும், அவரது மனைவியைவிட்டும் பிரித்து வைத்துவிடும் என்றும் அவர்கள் வாதிட்டனர்.

துஃ.பல் மேலும் கூறுவதாவது: “குறைஷிகள் இவ்வாறு என்னிடம் கூறிக் கொண்டே இருந்தார்கள். இறுதியில் நபிகள் நாயகத்திடமிருந்து எதையும் செவியேற்கக்கூடாது, அவர்களிடம் பேசக்கூடாது என்ற முடிவுக்கு நான் வந்தேன். எந்த அளவுக்கு எனில் அவர்களது வார்த்தைகளில் எதுவும் என் காதில் விழுந்து விடுமோ என அஞ்சி என் காதுகளில் பஞ்சை வைத்து திணித்துக் கொண்டேன்.”

தொடர்ந்து அவர் கூறுகிறார்: “பிறகு நான் பள்ளிவாசலுக்குச் சென்றேன். அங்கு நபிகள் நாயகம் கஅபாவில் தொழுது கொண்டிருந்தார்கள். நான் அவர்களுக்கு அருகே போய் நின்றேன். அல்லாஹ் என்னை அவர்களுடைய வார்த்தைகளில் சிலதை செவியேற்கச் செய்துவிட்டான். நான் அழகிய வார்த்தையைச் செவிமடுத்தேன். பிறகு நான் எனக்குள் இவ்வாறு கூறிக்கொண்டேன். அதாவது “நாம் புத்திசாலிதானே! நாம் ஒரு கவிஞன் ஆயிற்றே! நல்லது எது? கெட்டது எது? என்பது நமக்குத் தெரியாத ஒன்றல்லவே. பிறகு இந்த மனிதர் கூறுவதை நாம் செவியேற்பதை விட்டும் நம்மை எது தடுக்க முடியும்? அவர் கூறுவது நல்லதாக இருந்தால் ஏற்றுக் கொள்வோம், கெட்டதாக இருந்தால் விட்டுவிடுவோம் அவ்வளவுதானே!”

பிறகு நபிகள் நாயகம் (தொழுது முடித்து) வீடு திரும்பும் வரை காத்தி ருந்தேன். அவர்கள் வீடு திரும்பும்போது நான் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றேன். இறுதியில் நபிகள் நாயகம்(ஸல்) தமது வீட்டில் நுழைந்ததும் நானும் நுழைந்தேன். பிறகு அவர்களிடம் கூறினேன்: “முஹம்மதே! உம்மைப் பற்றி உம் சமூகத்தவர்கள் என்னிடம் இன்னின்னவாறு கூறினார்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உமது விஷயத்தைப் பற்றி அவர்கள் என்னை அச்சுறுத்திக் கொண்டே இருந்தனர். எந்த அளவுக்கெனில் உம் பேச்சைக் கேட்கக்கூடாது என்பதற்காக நான் என் காதில் பஞ்சை வைத்து அடைத்துக் கொண்டேன். ஆனால் அல்லாஹ் அதனை எனக்குக் கேட்கச் செய்துவிட்டான். நான் அழகிய வார்த்தையையே செவியேற்றேன். எனவே உம் கொள்கையை எம்மிடம் எடுத்துக்

கூறும்" என்று கூறினேன். அப்போது அவர்கள் இஸ்லாத்தை எனக்கு எடுத்துச் சொன்னார்கள்; குர்ஆனையும் ஓதிக்காட்டினார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அதை விட அழகான ஒரு வார்த்தையை, அதை விட நீதமான ஒரு விஷயத்தை நான் ஒருபோதும் கேட்டதில்லை. உடனே நான் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டேன். சத்தியத்தின் சாட்சியை நான் மொழிந் தேன்.

அதன் பிறகு துஃபல் தம் மக்களிடம் திரும்பிச் சென்று அவர்களை இஸ்லாத்தின் பக்கம் அழைத்தார்; இஸ்லாத்தை அவர்களுக்கு விளக்கிச் சொன்னார். அவரது குடும்பத்தார்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டனர். இஸ்லாம் அவரது கோத்திரத்தார்களிடம் பரவியது.

**துயர ஆண்டு**

நபிகள் நாயகத்தின் பெரிய தந்தை அபூதாலிபின் உடலின் பல பகுதிகளிலும் நோய் பரவியது. படுக்கையிலேயே அவர் முடங்கிவிட்டார். பின்னர் சிறிது நேரத்திற்குள் மரணவேளையை அவர் நெருங்கிவிட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் அவரின் தலைமாட்டில் இருந்தார்கள். அவர் மரணத்திற்கு முன்பு "லாஇலாஹ இல்லல்லாஹ்" என்ற கலிமாவை மொழிந்துவிடுமாறு அபூதாலிபிடம் வேண்டிக் கொண்டிருந்தார்கள். ஆனால் அவருக்குப் பக்கத்திலிருந்த அவரது தீய நண்பர்கள்- அபூஜஹ்ல் அவர்களுக்குத் தலைமை வகித்திருந்தான்- அவரைத் தடுத்துக்கொண்டிருந்தார்கள். உம் தந்தையர் மற்றும் பாட்டன் மார்களின் மார்க்கத்தை விட்டுவிடப் போகிறீரா? அப்துல் முத்தலிபின் மார்க்கத்தை புறக்கணிக்கப் போகிறீரா? எனவும் கூறிக்கொண்டிருந்தார்கள். பிறகு அவர் இணைவைப்பிலேயே மரணமடைந்தார். இஸ்லாத்தை ஏற்காத நிலையிலேயே அவரை இறந்ததற்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் துயரம் இரு மடங்காக அதிகரித்தது.

அபூதாலிப் மரணமடைந்து சுமார் இரண்டு மாதங்களில் கதீஜாவும் மரண மடைந்தார். அதன்பேரில் நபிகள் நாயகம்(ஸல்) கடுமையாகத் துயரப்பட்டார்கள். பெரிய தகப்பனார் அபூதாலிபும் தமது மனைவி கதீஜாவும் மரணமடைந்த பின் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களுக்கு அவர்களுடைய கூட்டத்தினர் கொடுத்து வந்த துன்பம் கடுமையானது!

நபிகள் நாயகத்தின் பிரச்சாரத்தை ஏற்றுக்கொண்டவர்களில் பெரும்பாலோர் பலவீனர்களும் அடிமைகளும் ஆவர். வழக்கமாக அவர்கள்தான் மக்கள் எல்லோரையும் விட இறைத்தூதர்களின் பிரச்சாரத்தை விரைந்து எற்றுக் கொள்ளக்கூடியவர்கள். ஏனெனில் மற்றவர்களைப் பின்பற்றக் கூடியவர்களாக இருப்பது அவர்களுக்கு ஒன்றும் சிரமமானது கிடையாது. ஆனால் பெரியோர்கள்,

அதிகாரமுடையவர்கள் மற்றும் செல்வாக்கு உடையவர்கள் ஆகியோரைப் பொறுத்தவரை அவர்களிடம் உள்ள பெருமையும் பொறாமையும் பதவியும் செல்வாக்கும் அவர்களை- மற்றவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதை விட்டும், மற்றவர்களை பின்பற்றக்கூடியவர்களாக ஆகுவதை விட்டும் - தடுக்கிறது.

**சத்தியப் பிரச்சாரத்தை எதிர்ப்பதற்கு இணைவைப்பவர்கள் மேற்கொண்ட வழிமுறைகள்**

இணைவைப்பாளர்கள் இஸ்லாமியப் பிரச்சாரத்தை எதிர்ப்பதற்குப் பல வழி களைக் கையாண்டார்கள். இஸ்லாம் பரவுவதைத் தடுப்பதற்குப் பல்வேறு வழிமுறைகளை மேற்கொண்டார்கள். இஸ்லாத்தில் இணைவதை விட்டும் மக்களைத் தடுத்து நிறுத்துவதற்காக பல வழிகளில் முயற்சி செய்தார்கள். அத்தகைய வழிகளில் சில வருமாறு:

1. எச்சரித்தல்: குறைஷித் தலைவர்களில் ஒரு குழு நபிகள் நாயகத்தின் பெரிய தந்தை அபூதாலிபிடம் சென்று “முஹம்மது எங்களுக்குத் துன்பம் கொடுக் கிறார். எங்கள் கடவுள்களைப் பற்றி இழித்துரைக்கிறார். எனவே அவ்வாறு செய்ய வேண்டாமென அவரை நீங்கள் தடுக்க வேண்டும்” என்று கேட்டுக் கொண்டார்கள். உடனே அபூதாலிப் ஆள் அனுப்பி நபிகள் நாயகத்தை அழைத்துவரச் செய்தார். நபிகள் நாயகம்(ஸல்) அவர்களிடம் அபூதாலிப், “என் சகோதரரின் மகனே! நீர் மக்களுக்குத் துன்பம் கொடுப்பதாகவும், அவர்க ளுடைய தெய்வங்களை இழித்துரைப்பதாகவும் அவர்கள் கூறுகிறார்கள். எனவே இதிலிருந்து நீர் விலகிக்கொள்வீராக!” என்று கூறினார். அதற்கு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் சூரியனைச் சுட்டிக்காட்டி, “அதிலிருந்து ஒரு சுடரை எடுத்து வந்து நீங்கள் என்னிடம் தந்தாலும் இந்தப் பிரச்சாரத்தை என்னால் விட்டுவிட முடியாது” என்று திட்டவட்டமாகக் கூறிவிட்டார்கள். பிறகு அபூதாலிப் தம் மக்களிடம் “என் சகோதரனின் மகனார் பொய் சொல்ல மாட்டார். எனவே அவரை அவரது நிலையிலேயே விட்டுவிடுங்கள்” என்று கூறினார்.

2. அவதூறுகளைக் கூறுதல்: இணைவைப்போர் நபிகள் நாயகத்தைப் பைத்தியக்காரர் என்றும் சூனியக்காரர் என்றும் அல்லது சூனியம் செய்யப் பட்டவர் என்றும், பொய்யர், கட்டுக் கதைகளைக் கூறுபவர் என்றெல்லாம் சிலைவணங்கிகள் அவதூறுகளைக் கூறிவந்தனர்.

3. கேலி, கிண்டல் மற்றும் பரிகாசம் செய்தல்: இணைவைப்பவர்கள் நபிகள் நாயகத்தையும் அவர்களுடைய தோழர்களையும் அடிக்கடி பரிகாசம் செய்து வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் இணைவைப்பவர்களைக் கடந்து செல்லும் போதெல்லாம் அவர்கள், நபியவர்களைக் கேலி செய்வார்கள், பரிகாசம்

செய்வார்கள்; அவர்களைப் பற்றி ஏதாவது குற்றம் குறை சொல்லிக் கொண்டே இருப்பார்கள். பலவீனமான நிலையில் இருந்த நபித்தோழர்களுடன் நபிகள் நாயகத்தைக் கண்டால், இவர்களெல்லம் அவருடைய நண்பர்களாம்; அவரைப் பின்பற்றக்கூடியவர்களாம்” என்று ஏளனமாகப் பேசுவார்கள்.

4. நபிகளாரின் போதனைகளைக் களங்கப்படுத்துதல், ஐயங்களைத் தூண்டுதல், பொய்யான வதந்திகளைப் பரப்புதல்: சிலைவணங்கிகள் “திண்ண மாக இந்தக் குர்ஆன் புனைக்கதைகளும், முன்னோர்களின் கட்டுக் கதைகளும் தான்” என்று வாதிட்டு வந்தார்கள். “இவருக்குக் கற்றுக் கொடுப்பவரும் ஒரு மனிதர் தான்” என்றும் அவர்கள் வாதிட்டார்கள்.

5. நபிகளாரைத் துன்புறுத்துதல்: மேற்கூறப்பட்ட வழிமுறைகள் யாவும் நபிகள் நாயகத்தையும் அவர்களுடைய தோழர்களையும் தமது மார்க் கத்தைப் பிரச்சாரம் செய்வதை விட்டும் தடுப்பதில் எந்தப் பலனையும் தராதபோது உடல் ரீதியாக வரம்பு மீறும் வழிமுறையைக் கையாண்டனர். அத்தகைய ஒரு நிகழ்ச்சிதான் இது:

ஒரு நாள் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருக்கும் போது உக்பா பின் அபீமுயீத் என்பவன் வந்து நபியவர்களுடைய கழுத்தில் ஒரு துண்டைப் போட்டு கடுமையாக இறுக்கினான். உடனே அபுபக்கர்(ரலி) அவர்கள் அங்கு வந்து நபியவர்களை அவனிடமிருந்து காப்பாற்றினார்கள். மேலும் “ஒரு மனிதர் ‘அல்லாஹ்தான் என்னுடைய இறைவன்’ என்று கூறுகிறார் என்பதற்காகவா அவரைக் கொல்லப் பார்க்கிறீர்கள்? அவரோ உங்களுடைய இறைவனிடமிருந்து தெளிவான சான்றுகளைக் கொண்டுவந்திருக்கிறாரே!” என்று கூறினார்கள்.

மற்றொரு நாள் நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் கஅபா ஆலயத்தில் தொழுது கொண்டிருந்தபோது அபூஜஹ்லும் அவனுடைய ஆட்களும் அங்கு அமர்ந்தி ருந்தனர். அப்போது அபூஜஹ்ல், “இன்ன குடும்பத்தாரின் ஒட்டகக் குடலைக் கொண்டு வந்து முஹம்மது ஸுஜூது செய்யும்போது அவரது முதுகில் போடுவதற்கு உங்களில் யார் தயார்?” என்று கேட்டான். உடனே அவர்களின் ஒருவன் விரைந்து சென்று ஓட்டக் குடலைக் கொண்டு வந்து நபியவர்கள் ஸஜ்தா செய்யும்போது அவர்களுடைய இரு தோள் புஜங்களுக்கிடையில் அதைப் போட்டுவிட்டு தம் சகாக்களைப் பார்த்து, “சிரியுங்கள்” என்றான். அவர்கள் ஒருவர் மீது ஒருவர் விழுந்து சிரிக்கலானார்கள். நபிகள் நாயகம்(ஸல்) தமது தலையை உயர்த்த முடியாமல் ஸஜ்தாவிலேயே இருந்தார்கள். இறுதியில்

அவர்களின் மகள் ∴பாத்திமா(ரலி) வந்து அவர்களின் முதுகில் போடப்பட்டிருந்த அந்த அசுத்தத்தை எடுத்து விசி எறிந்தார்கள்.

ஒரு முறை அபூஜஹ்ல் கூறினான்: "முஹம்மத் தொழுவதை நான் பார்த்தால் அவரது கழுத்தில் மிதித்து அழுத்தி அவரது முகத்தில் மண் ஒட்டச் செய்வேன் என்று!" அதன்படி நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருக்கும் போது அவர்களின் அருகில் வந்தான். அவர்களின் கழுத்தில் மிதிக்க வேண்டும் என்று எண்ணியதும் திடீரெனப் பின்வாங்கினான். மக்கள் அபூஜஹ்லைப் பார்த்து, "அபுல்ஹிகமே! (இது தான் அவனது இயற்பெயர்.) உமக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டனர். அதற்கு அவன், "எனக்கும் அவருக்கும் இடையே நெருப்பினால் ஆன அகழ் இருந்ததைக் கண்டேன்" என்று கூறினான்.

6. நபித்தோழர்களைத் துன்புறுத்துதல்: இவ்வாறே குறைஷிகள் நபித்தோழர்களையும் துன்புறுத்தலானார்கள். பலவீனர்களான சில அடிமைகளைக் கட்டி, கடுமையான வெயிலில் வீசி எறிவார்கள். இன்னும் பல வகையான தண்டனைகளையும் அவர்களுக்குக் கொடுப்பார்கள்.

அம்மார் (ரலி) அவர்களையும் அவர்களது பெற்றோரையும் விதவிதமாகத் துன்புறுத்தினார்கள். அம்மாருடைய தாயரைக் கொன்றார்கள். அவருடைய தந்தையும் கொடுமையான துன்புறுத்து தலுக்கு இலக்காகி உயிரிழந்தார். கப்பாப் பின் அரத்(ரலி) அவர்களை முடியைப் பிடித்து இழுத்து அவரது கழுத்தைப் பின்புறமாக ஓங்கி ஒடிப்பார்கள். கொதிக்கின்ற பாறையில் அவரைப் படுக்க வைத்து அவர் மீது கனமான கல்லைத் தூக்கி வைப்பார்கள். இவ்வாறே உமர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றபோது அவர்களையும் வரம்பு மீறித் துன்புறுத்தினார்கள். அவர்களைக் கொலை செய்யவும் முயற்சி செய்தார்கள்.

**தாயி∴பில் நபிகள் நாயகம்**

முஸ்லிம்களுக்கு குரைஷிகள் தொடர்ந்து துன்பம் கொடுத்துக் கொண்டும் அநீதி, அக்கிரமம் இழைத்துக் கொண்டும் வந்தனர். அதனால் தாயி∴ப் செல்வது பற்றி சிந்திக்கலானார்கள். அங்குள்ள மக்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டக் கூடுமென யோசித்தார்கள். தாயி∴புக்குப் பயணம் மேற்கொள்வது எளிதான காரியமல்ல. காரணம் தாயி∴பைச் சுற்றிலும் உயரமான மலைகள் இருந்ததால் பாதை கஷ்டமானதாக இருந்தது. நபியவர்கள் தாயிபுக்கு பயணமானார்கள்.

ஆயினும் தாயி∴ப் மக்கள் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களை மிகவும் மோசமான முறையில் வரவேற்று அவர்களின் அழைப்பையும் நிராகரித்தனர். அவர்களின் பேச்சை செவியேற்காமல் அவர்களை விரட்டியடித்தனர். அவர்

களுக்கு எதிராக சிறுவர்களைத் தூண்டிவிட்டனர். அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கல்லால் எறிந்து அவர்களின் இரு கணுக்கால்களில் இரத்தம் வரும் அளவுக்கு காயப்படுத்தினார்கள். அவர்கள் கவலையுற்றவர் களாக வந்த வழியே மக்காவை நோக்கித் திரும்பினார்கள்.

அப்போது நபியவர்களிடம் ஜிப்ரீல்(அலை) வந்தார். அவருடன் மலைகளுக்குப் பொருப்பாளரான மலக்கும் இருந்தார். நபியவர்களை ஜிப்ரீல் அழைத்து, “நீங்கள் விரும்பியதை ஆணையிடுவதற்காக மலைகளுக்குரிய மலக்கை அல்லாஹ் உம்மிடம் அனுப்பிவைத்துள்ளான்” எனக் கூறினார். அப்போது மலைகளுக் குரியவானவர், “முஹம்மதே! நீர் விரும்பினால் மக்காவைச் சூழ்ந்துள்ள இரு மலைகளை இவர்களின் மீது புறட்டிவிடுகிறேன்” என்றார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்), “வேண்டாம்! அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்காமல் அவனை மட்டுமே வணங்கக்கூடிய சந்ததிகளை இவர்களிலிருந்து அல்லாஹ் தோற்றுவிப்பான் என நான் நம்புகிறேன்” எனக் கூறினார்கள்.

**சந்திரன் பிளந்த நிகழச்சி**

இணைவைப்பவர்கள் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களோடு தர்க்கம் செய்து வந்த விஷயங்களில் ஒன்று அற்புதங்களைக் காண்பிக்குமாறு நபியவர்களிடம் அவர்கள் வேண்டிக் கொண்டது. இக்கோரிக்கை பல முறை அவர்களிடமிருந்து வந்தது. ஒரு முறை சந்திரனை இரு கூறாகப் பிளந்து காட்டும்படி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வேண்டினார்கள். அவ்வாறே நபியவர்கள் தம் இறைவனிடம் வேண்டிக் கொண்டு சந்திரனை இரு கூறாகப் பிளந்து காட்டி னார்கள். குறைஷிகள் அந்த அற்புதத்தை நீண்ட நேரம் கண்டார்கள். எனினும் அவர்கள் அதை நம்பவில்லை. “முஹம்மத் எங்களுக்கு சூனியம் செய்துவிட்டார்” எனக் கூறினார்கள். அப்போது ஒரு மனிதர், “இவர் உங்களுக்கு சூனியம் செய்து விட்டாலும் அனைத்து மக்களுக்கும் அவரால் சூனியம் செய்ய முடியாது. எனவே இதன் உண்மை நிலையை அறிந்து கொள்வதற்காக பயணக் கூட்டத்தினரை எதிர்பாருங்கள்” எனக் கூறினார். பின்னர் பயணிகள் வந்தபோது அவர்களிடம் இது பற்றிக் கேட்டனர். அதற்கவர்கள் “ஆம்! நாங்களும் அதைக் கண்டோம்” எனக் கூறினர். ஆயினும் குரைஷிகள் இதன் பின்னரும் நிராகரிப்பிலேயே பிடிவாதமாக இருந்தனர்.

**இஸ்ரா, மிஃராஜ்**

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தாயி·.ப் சென்று திரும்பிய பிறகு அங்கு அவர்களுக்கு ஏற்பட்ட துன்பங்கள், பிறகு அபூதாலிபின் மரணம், அதைத் தொடர்ந்து கதீஜா(ரலி) யின் மரணம், அதன் பின்னர் குறைஷிகளின் கடும்

தொல்லைகள் ஆகியவற்றிற்குப் பிறகு அவர்களின் உள்ளத்தில் கவலைகள் அதிகமாகி விட்டன. அப்போது இறைவனிடமிருந்து சங்கைக்குரிய இந்நபிக்கு ஆறுதல் வந்தது. ஒரு நாள் இரவு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தூங்கிக் கொண்டிருந்தபோது ஜிப்ரீல் (அலை) அவர்கள் 'புராக்' எனும் வாகனத்தைக் கொண்டு வந்தார்கள். அது இரண்டு இறக்கைகள் கொண்ட மின்னல் போன்று விரைந்து செல்லக்கூடிய குதிரை போன்ற ஒரு பிராணியாகும். ஜிப்ரீல் (அலை) அதன் மீது அவர்களை ஏற்றி பாலஸ்தீனத்திலுள்ள 'பைத்துல் முகத்தஸ்' எனும் பள்ளிவாசலுக்கு கொண்டு சென்றார்கள். பிறகு அங்கிருந்து அவர்களை வானத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு அவர்கள் தம் இறைவனின் மாபெரும் அத்தாட்சிகளைக் கண்டார்கள். வானில் வைத்தே ஐவேளைத் தொழுகைகள் கடமையாக்கப்பட்டன. அதே இரவில் அவர்கள் தெளிந்த உள்ளத் துடனும் அழுத்தமான உறுதியுடனும் மக்காவிற்குத் திரும்பி வந்தார்கள். இது விஷயமாகத் தான் அல்லாஹ் பின் வருமாறு கூறுகின்றான்.

"மஸ்ஜிதுல் ஹராமிலிருந்து சுற்றுப்புறத்தை பாக்கியமிக்கதாக நாம் ஆக்கிய மஸ்ஜிதுல் அக்ஸா வரை ஓர் இரவில் தனது அடியாரை அழைத்துச் சென்றவன் தூயவன்!(எதற்காகவெனில்) நமது சான்றுகளை அவருக்குக் காட்டுவதற்காக. திண்ணமாக அவன் செவியுறுபவனும் பார்ப்பவனுமாவான்." (17:1)

நபியவர்கள் மறுநாள் காலையில் கஅபா ஆலயத்திற்குச் சென்று நடந்ததை மக்களிடம் கூறினார்கள். அப்போது நிராகரிப்பாளர்கள் அவர்களைப் பொய்யர் என்று கடுமையாகத் தூற்றினர். கேலியும் கிண்டலும் செய்தனர். பின்பு அங்கு அமர்ந்திருந்த சிலர் பைத்துல் முகத்தஸ் எப்படி இருந்தது என்பதைக் கூறும்படிக் கேட்டனர். இவ்வாறு அவர்கள் கேட்டதன் நோக்கம் சொல்ல முடியாத நிலைக்கு நபிகள் நாயகம்(ஸல்) அவர்களை ஆக்கவேண்டுமென்பதே! நபிகள் நாயகம் (ஸல்)அவர்கள் அதன் ஒவ்வொரு பகுதி பற்றி விரிவாகக் கூற ஆரம்பித்தார்கள். நிராகரிப்பாளர்கள் இப்படிக் கேட்டதோடு நின்றுவிட வில்லை மாறாக வேறொரு ஆதாரமும் எங்களுக்கு வேண்டுமெனக் கூறினார்கள்.

அதற்கு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் "வழியில் மக்காவை நோக்கி வந்து கொண்டிருந்த ஒரு வியாபாரக் கூட்டத்தைச் சந்தித்தேன்" என்று கூறினார்கள். அவர்களின் தன்மைகளையும் அவர்களின் ஒட்டகங்களின் எண்ணிக்கையையும் அவர்கள் வந்த நேரத்தையும் அவர்களிடம் தெரிவித்தார்கள். நபிகள் நாயகம் (ஸல்) உண்மையையே கூறினார்கள். ஆனால் நிராகரிப்பாளர்களோ தமது இறைநிராகரிப்பு, பிடிவாதம், நம்ப மறுப்பது ஆகிவற்றிலேயே மூழ்கி வழிதவறிச் சென்று கொண்டிருந்தார்கள். மிஃராஜ் சென்று வந்த காலையில் ஜீப்ரீல்(அலை)

வந்து நபிகள் நாயகத்திற்கு ஐவேளைத் தொழுகைகளின் முறைகளையும் அதற்குரிய நேரங்களையும் கற்றுக் கொடுத்தார்கள். அதற்கு முன்னர் தொழுகை காலையிலும் மாலையிலும் இரண்டு ரக்அத்தாக இருந்தது.

குறைஷிகள் சத்தியத்தை வெறுப்பதில் உறுதியாக இருந்து கொண்டிருந்த இந்த நேரத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவுக்கு வரக்கூடிய மக்களிடம் சத்தியத்தை எடுத்துச் சொல்வதில் உறுதியாக இருந்தார்கள். மக்களை அவர்களுடைய கூடாரங்களிலும் அவர்கள் வந்து தங்கியிருக்கக் கூடிய இடங்களிலும் சந்தித்து அவர்களுக்கு இஸ்லாத்தை விளக்கிக் கூறிக் கொண்டிருந்தார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பெரிய தகப்பனார் அபூலஹபோ நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பின்தொடர்ந்து சென்று அவர்களைக் குறித்தும் அவர்களின் பிரச்சாரம் குறித்தும் மக்களை எச்சரித்து வந்தான். ஒரு தடவை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்து வந்த ஒரு கூட்டத்தாரிடம் சென்று அவர்களை இஸ்லாத்தின் பால் அழைத்தார்கள். அதை அவர்கள் கவனமாகக் கேட்டார்கள். அவர்களை ஈமான் கொண்டு அவர்களைப் பின்பற்றுவதென முடிவு செய்தார்கள்.

ஒரு நபி அனுப்பப்பட இருக்கிறார் என்றும் அவர் வரும் காலம் நெருங்கி விட்டது என்றும் யூதர்கள் வழியாக மதீனாவாசிகள் கேட்டிருந்தார்கள். நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் அவர்களை இஸ்லாத்தின் பால் அழைத்ததும் யூதர்கள் கூறிய நபி இவர்தான் என்பதை அறிந்து கொண்டு விரைந்து வந்து இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள். இது விஷயத்தில் யூதர்கள் தங்களை முந்திவிடக் கூடா தெனவும் கூறிக் கொண்டார்கள். அவர்கள் மொத்தம் ஆறு பேர். மறு ஆண்டு 12 ஆண்கள் வந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஒன்று சேர்ந்தனர். அவர்களுக்கு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் இஸ்லாத்தைக் கற்றுக் கொடுத் தார்கள்.

அவர்கள் மதீனாவுக்கு திரும்பிச் சென்றபோது அவர்களுக்கு குர்ஆனைக் கற்றுக் கொடுப்பதற்காகவும் மார்க்கச் சட்டங்களை விளக்கிக் கூறுவதற்காகவும் நபியவர்கள் முஸ்அப் இப்னு உமைர் எனும் தோழரை அவர்களுடன் அனுப்பி வைத்தார்கள். முஸ்அப் இப்னு உமைரால் மதீனாவாசிகளுக்கு நல்லதொரு பலனை ஏற்படுத்த முடிந்தது. ஓராண்டிற்குப் பின் அவர் மக்கா திரும்பி வந்தபோது அவருடன் 72 ஆண்களும் இரண்டு பெண்களும் இருந்தனர். அவர்களை நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஒன்று கூட்டினார்கள். அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் அவர்களின் மார்க்கத்திற்கு உதவிபுரிவதற்கும் அவர்களின்

கட்டளையை ஏற்று நடப்பதற்கும் உறுதிப்பிரமாணம் செய்து கொண்டார்கள். அதன் பின்னர் அவர்கள் மதீனா திரும்பினர்.

**அழைப்புப் பணியின் புதிய கேந்திரம்**

சத்தியத்திற்கும் சத்தியவாதிகளுக்கும் புகலிடமாகவும் பாதுகாப்புக் கேந்திர மாகவும் மதீனா ஆகிவிட்டது. மதீனாவை நோக்கி முஸ்லிம்களின் ஹிஜ்ரத் பயணம் தொடங்கியது. எனினும் குறைஷிகள் முஸ்லிம்களை ஹிஜ்ரத் செய்ய விடாமல் தடுக்க உறுதி கொண்டனர். ஹிஜ்ரத் செய்பவர்களில் சிலர் பலவகையான துன்பங்களையும் துயரங்களையும் சந்தித்தனர். முஸ்லிம்கள் குரைஷிகளுக்குப் பயந்து ரகசியமாக ஹிஜ்ரத் செய்து கொண்டிருந்தனர். அபூபக்கர்(ரலி) அவர்கள் ஹிஜ்ரத் செல்வதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர் களிடம் அனுமதி கேட்டார்கள். அதற்கவர்கள் "அவசரப்படாதீர்கள்! அல்லாஹ் உங்களுக்கு ஒரு பயணத் தோழரை ஏற்படுத்தலாம்" எனக் கூறினார்கள்.

இறுதியாக பெரும்பாலான முஸ்லிம்கள் ஹிஜ்ரத் செய்து விட்டனர். முஸ்லிம்கள் ஹிஜ்ரத் செய்து மதினாவில் ஒன்று சேர்வதை பார்த்ததும் குறைஷிகள் கொதித் தெழுந்தார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அந்தஸ்தும் அவர்களின் பிரச்சாரமும் மேலோங்கி வருவது குறித்து அஞ்சி னார்கள். இது விஷயமாக அவர்கள் ஆலோசனை நடத்தி நபிகள் நாயகத்தைக் கொன்றுவிடத் தீர்மானித்தார்கள். அபூஜஹ்ல் கூறினான்: "எனது கருத்து என்ன வெனில், நம்மிலுள்ள எல்லாக் கோத்திரத்திலிருந்தும் திடகாத்திரமான ஒரு வாலிபனைத் தேர்வு செய்து அவர்களிடம் வாளைக் கொடுக்க வேண்டும். அவர்கள் அனைவரும் முஹம்மதைச் சுற்றி வளைத்து எல்லோரும் சேர்ந்து ஒரே வெட்டாக அவரை வெட்டிவிட வேண்டும். இவ்வாறு செய்வதால் அவரின் கொலைக் குற்றம் எல்லா கோத்திரத்திலும் பிரிந்து சென்றுவிடும். அதன் பிறகு பனூஹாஷிம்களால் எல்லோரையும் பகைத்துக் கொள்ள முடியாது" என்று கூறினான். இந்த சதித்திட்டத்தை அல்லாஹ் சங்கைக்குரிய தனது நபிக்கு தெரிவித்தான்.

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் அபூபக்கருடன் ஹிஜ்ரத்துச் செய்ய முடிவு செய்தார்கள். அந்த இரவில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அலீயிடம், தம்முடைய இடத்தில் உறங்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். இதன் நோக்கம் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தமது வீட்டிலேயே இருக்கிறார்கள் என மக்கள் எண்ணிக் கொள்ள வேண்டும் என்பதே. மேலும் அலீயிடம் உமக்கு எந்தத் துன்பமும் நேராது எனவும் தெரிவித்தார்கள். சதிகாரர்கள் வந்து வீட்டை முற்றுகையிட்டார்கள். படுக்கையிலிருந்த அலீயைப் பார்த்து விட்டு அவர்

முஹம்மது தான் என எண்ணிக் கொண்டார்கள்.அவரைத் தீர்த்துக்கட்ட வேண்டும் என்பதற்காக அவர் எப்போது வெளியே வருவார் என்பதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் வீட்டை முற்றுகையிட்டிருக்கும் நிலையிலேயே நபிகள் நாயகம் (ஸல்) மண்ணை அள்ளி அவர்களின் தலையில் தூவிவிட்டு வீட்டை விட்டுப் புறப்பட்டுச் சென்றார்கள். அல்லாஹ் அவர்களின் பார்வையைப் பறித்து விட்டான். ஆகவே அவர்கள் நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் புறப்பட்டுச் சென்றதை உணரவில்லை.

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் நேராக அபூபக்கரிடம் சென்றார்கள். பிறகு இருவரும் சேர்ந்து சுமார் ஐந்து மைல் தூரம் சென்று ஸவ்ர் எனும் குகையில் ஒளிந்து கொண்டனர். குறைஷி இளைஞர்கள் காலை வரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். காலையில் அலீ, நபிகள் நாயகத்தின் படுக்கையிலிருந்து எழுந்ததும் குறைஷிகளிடம் பிடிபட்டார். அவரிடம் முஹம்மத் எங்கே? எனக் கேட்டார்கள். அதற்கவர் எதுவுமே கூறவில்லை. அதனால் அவர்கள் அவரை அடித்து இழுத்துச் சென்றார்கள். ஆனால் எந்தப் பலனுமில்லை. பின்னர் குறைஷிகள் எல்லா பாகங்களிலும் தேடுவதற்கு ஆள் அனுப்பினார்கள். நபிகள் நாயகத்தை உயிருடனோ பிணமாகவோ கொண்டு வருபவருக்கு நூறு ஒட்டகங்கள் பரிசாகத் தரப்படுமென அறிவித்தார்கள்.

நபிகள் நாயகம்(ஸல்)அவர்களைத் தேடிப் புறப்பட்ட எதிரிகள் நபியும் அவர்களது தோழரும் ஒளிந்திருந்த அந்த குகை வாசலுக்கே வந்துவிட்டார்கள். எந்த அளவுக்கு எனில் அவர்களில் ஒருவன் கீழே குனிந்து தன் பாதங்கள் வழியாகப் பார்த்து விட்டால் அவர்கள் இருவரையும் கண்டுகொள்வான். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு ஏதும் நேர்ந்துவிடுமோ என அபூபக்கர் பெரிதும் கவலை கொண்டார். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் “அபூபக்கரே! நாம் இருவர்தான் இருக்கிறோம் என எண்ணிக்கொண்டீரா? அல்லாஹ்வுடன் சேர்ந்து நாம் மூவரல்லவா? எனவே நீர் கவலைப்படாதீர்! நிச்சயமாக அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்!” எனக் கூறினார்கள். ஆனால் அக்கூட்டத்தினர் அவ்விரு வரையும் பார்க்கவில்லை. இருவரும் குகையில் மூன்று நாட்கள் தங்கியிருந்து விட்டு பிறகு மதீனாவை நோக்கி நடந்தனர். பயணம் நீண்ட பயணமாக இருந்தது. வெயில் தீயாகக் கொளுத்தியது.

இரண்டாம் நாள் மாலையில் அவ்விருவரும் ஒரு கூடாரம் அருகே சென்றனர். அதில் உம்மு மஅபத் எனச் சொல்லப்படும் ஒரு பெண்ணைக் கண்டனர். அவரிடம் உணவும் தண்ணீரும் கேட்டனர். அவரிடம் எதுவுமே இல்லை. மெலிந்த ஒரே ஒரு ஆட்டைத் தவிர! அதன் பலவீனம் அதை மேய்ச்சலுக்குச் செல்ல முடியாதவாறு

தடுத்திருந்தது. அதனிடம் துளிகூடப் பால் இல்லை. நபிகள் நாயகம்(ஸல்) அதன் அருகில் சென்று அதன் பால் மடியைத் தடவி பால் கறந்து ஒரு பெரிய பாத்திரத்தை நிரப்பினார்கள். அதைப் பார்த்து விட்டு உம்மு ம.்.பத் திகைத்துப் போய் நின்று கொண்டிருந்தார். பிறகு அனைவரும் தாகம் தீர அருந்தினர். பிறகு இரண்டாம் முறையும் பால் கறந்து பாத்திரத்தை நிறைத்து, அதை உம்மு மஅபதிடம் கொடுத்து விட்டு நடையைத் தொடர்ந்தனர்.

மதீனாவாசிகள் ஒவ்வொரு நாளும் மதீனாவிற்கு வெளியே நின்று கொண்டு நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் வந்து சேர்வதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். நபியவர்களும் அபூபக்ரும் மதீனா சென்றடைந்த நாளன்று அவர்களை வாழ்த்துச் சொல்லி மகிழ்வோடு வரவேற்றனர். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் மதீனாவின் மேட்டுப் பகுதியிலுள்ள குபா என்னுமிடத்தில் இறங்கினார்கள். அங்கு நான்கு நாட்கள் தங்கியிருந்தார்கள். அங்கு குபா பள்ளிவாசலை நிர்மாணித்தார்கள். இஸ்லாத்தில் முதன் முதலில் கட்டப்பட்ட பள்ளிவாசல் இது தான்.

ஐந்தாம் நாள் மதீனாவுக்குப் புறப்பட்டார்கள். அன்ஸாரிகளில் பெரும்பாலோர் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களை அழைத்துச் சென்று அவர்களுக்கு விருந்து உபசரிப்பதன் சிறப்பைத் தாங்களே பெற முயற்சித்தார்கள். அதனால் போட்டி போட்டுக் கொண்டு அவர்களுடைய ஒட்டகத்தின் கடிவாளத்தைப் பிடித்தார்கள். அப்போது நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் அவர்களுக்கு நன்றி கூறி “ஒட்டகத்தை விட்டுவிடுங்கள்! நிச்சயமாக அது இறைவனால் ஆணையிடப்பட்டுள்ளது” எனக் கூறினார்கள். அல்லாஹ் ஏவிய இடத்தை அடைந்ததும் அந்த ஒட்டகம் படுத்துக் கொண்டது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதிலிருந்து இறங்கவில்லை. உடனே அது எழுந்து சிறிது தூரம் நடந்தது. பிறகு திரும்பி வந்து மீண்டும் அதன் முதல் இடத்திலேயே படுத்துக் கொண்டது. அதன் பிறகு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதிலிருந்து இறங்கினார்கள். அது தான் மஸ்ஜிதுன் நபவி- நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கட்டிய பள்ளிவாசல் உள்ள இடமாகும். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் அபூஅய்யூப் அல்-அன்சாரி வீட்டில் தங்கினார்கள். அலீ (ரலி) அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பின் மூன்று நாட்கள் மக்காவில் தங்கிவிட்டு பிறகு மதீனா புறப்பட்டார்கள். குபாவில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் வந்து சேர்ந்து கொண்டார்கள்.

**மதீனாவில் நபிகள் நாயகம்**

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஒட்டகம் படுத்த இடத்தை அதற்குரியவர் களிடமிருந்து விலைக்கு வாங்கிய பின் அந்த இடத்தில் பள்ளிவாசலைக் கட்டி னார்கள். முஹாஜிர்களுக்கும் அன்ஸாரிகளுக்குமிடையே நபிகள் நாயகம்

(ஸல்) அவர்கள் சகோதர பந்தத்தை ஏற்படுத்தினார்கள். (மக்காவைத் துறந்து மதீனா வந்தவர்கள் முஹாஜிர்கள். முஹாஜிர்களுக்கு உதவி செய்த மதீனா வாசிகள் அன்ஸாரிகள்) அதாவது முஹாஜிர் ஒவ்வொருவரையும் அன்ஸார் களில் ஒவ்வொருவருக்கும் சகோதரர்களாக்கி அவர்களின் சொத்துக்களில் பங்கு தாரர்களாக்கினார்கள். முஹாஜிர்களும் அன்ஸாரிகளும் ஒன்றாகவே செயல்படத் தொடங்கினர். அவர்களிடையே சகோதரத்துவ பந்தம் அதிகரித்தது.

மதீனாவில் இஸ்லாம் பரவ ஆரப்பித்தது. சில யூதர்களும் இஸ்லாத்தை ஏற்றனர். இவ்வாறு இஸ்லாத்தை ஏற்ற யூதர்களில் அப்துல்லாஹ் பின் ஸலாம் (ரலி) அவர்களும் ஒருவர். இவர் யூதர்களின் பாதிரிமார்களில் ஒருவராகவும் அவர்களின் பெருந்தலைவர்களில் முக்கியமானவராகவும் திகழ்ந்தார்.

முஸ்லிம்கள் மக்காவை விட்டு ஹிஜ்ரத் செய்த பிறகும் கூட மக்காவின் இறைநிராகரிப்பாளர்கள் முஸ்லிம்களை எதிர்ப்பதை கைவிடவில்லை. எவ்வா றெனில் குறைஷிகளுக்கு மதீனாவிலுள்ள யூதர்களுடன் தொடர்பிருந்தது. எனவே அந்த யூதர்களும் குறைஷிகளின் வழியில் முஸ்லிம்களிடையே பிரிவினையையும் குழப்பங்களையும் தோற்றுவிக்க முயற்சித்தார்கள். குறைஷி களும் முஸ்லிம்களை அச்சுறுத்திக் கொண்டும் அவர்களை தீர்த்துக்கட்டி விடுவோம் என்று எச்சரித்துக் கொண்டுமிருந்தனர். இவ்வாறாக முஸ்லிம்களுக்கு மதீனாவின் உள்ளேயும் வெளியேயும் ஆபத்துக்கள் சூழ்ந்திருந்தன. தற்காப்பு ஆயுதங்கள் இல்லாமல் நபித்தோழர்கள் இரவைக் கழிக்க முடியாத அளவுக்கு நிலமை சென்று விட்டிருந்தது.

இந்த ஆபத்தான காலகட்டத்தில் தான் அல்லாஹ் போர் செய்வதற்கு அனுமதி யளித்தான். நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் எதிரிகளின் நடவடிக்கைகளைத் தெரிந்து கொள்வதற்காகவும் எதிரிகளின் வியாபாரக் கூட்டத்தினர் மீது தங்களின் பிடியை இறுக்கிக் கொள்வதற்காக அவர்களை வழிமறிப்பதற்காகவும் சிறு சிறு படைகளை அனுப்ப ஆரம்பித்தார்கள். இதன் நோக்கம் முஸ்லிம்களின் வலிமையை அவர்களுக்கு உணர்த்த வேண்டும். அதனால் அவர்கள் முஸ்லிம் களுடன் இணக்கமாகி முஸ்லிம்களை இஸ்லாத்தின்படி செயல்படுவதற்கும் இஸ்லாத்தைப் பரப்புவதற்கும் சுதந்திரமாக விட்டு விட வேண்டும் என்பதுதான். அதுபோல சில கூட்டத்தாருடன் நேச உடன்படிக்கையும் செய்து கொண்டார்கள்.

**பத்ரு போர்**

மாக்காவின் இணைவைப்பாளர்கள் முஸ்லிம்களுக்கு கடும் நெருக்கடி கொடுத்தார்கள். அவர்களுக்குத் தொல்லைகளையும் துன்பங்களையும் தந்தார்கள். இறுதியில் தங்களின் தாயகமான மக்காவை விட்டு ஹிஜ்ரத்

செய்யும்படி அவர்களை நிர்பந்தப்படுத்தினார்கள். எனவே முஸ்லிம்கள் தங்கள் பிறந்த நாட்டைத் துறந்து தங்கள் செல்வங்களையும், குடும்பத்தினரையும் விட்டு விட்டு வெளியேறினர். அதன் பிறகு அவர்களின் உடமைகள் அனைத்தும் இணைவைப்பாளர்களின் கைகளில் சிக்கின.

ஒரு நாள் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஷாம் தேசத்திலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்த குறைஷிகளின் வியாபாரக் கூட்டம் ஒன்றை வழிமறிக்க முடிவு செய்து 313 பேருடன் புறப்பட்டுச் சென்றார்கள். அவர்களுடன் இரண்டு குதிரைகளும் 70 ஒட்டகங்களும் மட்டுமே இருந்தன. குறைஷிகளின் அந்த வியாபாரக் கூட்டத்திடம் ஆயிரம் ஒட்டகங்கள் இருந்தன. அக்கூட்டத்தினரை அபூசு.ஃ.ப்யான் வழிநடத்தி வந்தார். அவருடன் 40 பேர் இருந்தனர். ஆயினும் முஸ்லிம்கள் புறப்பட்டு வருவதை அறிந்த அபூசு.ஃ.ப்யான் மக்காவிற்குச் செய்தி அனுப்பி உதவி தேடினார். மேலும் தனது வழியை மாற்றி வேறு வழியில் சென்றார். முஸ்லிம்களால் அவர்களை வெல்ல முடியவில்லை.

குறைஷிகளோ ஆயிரம் படைவீரர்களுடன் புறப்பட்டு வந்தனர். எனினும் அவர்களிடம் அபூசு.ஃ.ப்யானிடமிருந்து ஒரு தூதர் வந்து வியாபாரக்கூட்டம் தப்பித்து விட்டதைத் தெரிவித்து மக்காவிற்கே திரும்பிச் செல்லும்படி வேண்டினார். ஆனால் அவ்வாறு திரும்பிச் செல்ல அபூஜஹ்ல் மறுத்து விட்டான். குறைஷிகளின் படை தொடர்ந்து பயணமாகி பத்ரு மைதானத்தை அடைந்தது.

குறைஷிகள் புறப்பட்டு வருவதை அறிந்த நபிகள் நாயகம்(ஸல்) தமது தோழர்களிடம் கலந்தாலோசித்தார்கள். அனைவரும் இறைநிராகரிப்பாளர்களோடு போர் செய்ய சம்மதம் தெரிவித்தனர். ஹஜ்ரி இரண்டாம் ஆம் ஆண்டு ரமலான் மாதத்தில் ஒரு நாள் காலை இரு படைகளும் நேருக்கு நேர் சந்தித்து கடும் போர் செய்தனர். முஸ்லிம்களின் வெற்றியுடன் போர் முடிந்தது. முஸ்லிம்களில் 14 பேர் உயிர்த்தியாகம் செய்தனர். இணைவைப்பவர்களில் 70 பேர் கொல்லப்பட்டனர். 70 பேர் சிறை பிடிக்கப்பட்டனர்.

இந்தப் போர் நடந்து கொண்டிருக்கும்போதே நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மகளும் உஸ்மான்(ரலி) அவர்களின் மனைவியுமான ருகைய்யா (மதீனாவில்) மரணமடைந்தார்கள். உஸ்மான்(ரலி) அவர்களை நோயாளியாக இருந்த அவர்களது மனைவிருகையாவுடன் இருக்குமாறு நபியவர்கள் கேட்டுக் கொண்டதால் உஸ்மான்(ரலி) அவர்கள் போருக்கு வராமல் தமது மனைவியுடன் மதினாவிலேயே தங்கிவிட்டார்கள். இப்போருக்குப் பிறகு உஸ்மான் (ரலி) அவர்களுக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது இரண்டாவது மகள் உம்மு குல்ஸூமை மணமுடித்துக் கொடுத்தார்கள். நபிகள் நாயகத்தினுடைய

இரு பெண் மக்களை மணந்து கொண்டதால் உஸ்மான்(ரலி) அவர்கள் “துன் நூரைன்” -இரண்டு பிரகாசம் உடையவர்- என்ற சிறப்புப் பெயர் பெற்றார்கள்.

பத்ருப்போர் முடிந்த பின்னர் முஸ்லிம்கள் அல்லாஹ்வின் உதவி குறித்து மகிழ்சியடைந்தவர்களாக மதீனாவுக்குத் திரும்பினர். கைதிகளையும் தங்களுடன் அழைத்து வந்தனர். போரில் கிடைத்த பொருட்களும் இருந்தன. கைதிகளைப் பொறுத்த வரை சிலர் பிணைத் தொகை கொடுத்து விடுதலை பெற்றார்கள். வேறு சிலர் பிணைத் தொகையின்றி விடுதலை பெற்றார்கள். மற்றும் சிலரோ முஸ்லிம் பிள்ளைகளில் பத்து பேருக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்து அதையே நஷ்டயீடாகத் தந்து விடுதலை பெற்றார்கள்.

இந்தப் போரில் இணைவைப்பவர்களின் பெருந்தலைவர்கள், இஸ்லாத்தின் விரோதிகள் பெரும்பாலோர் கொல்லப்பட்டனர். அவர்களில் முக்கியமானோர் அபூஜஹ்ல், உமைய்யா பின் கலப், உத்பா, ஷைபா போன்றவர்கள் ஆவர்.

**நபிகள் நாயகத்தைக் கொலை செய்ய முயற்சி**

பத்ருப் போரில் குறைஷிகள் தோற்ற பிறகு உமைர் பின் வஹ்ப் என்பவர் ஸ.்.ப்வான் பின் உமையா என்பவரிடம் வந்து அமர்ந்தார். உமைர் என்பவர் குறைஷி ஷைத்தான்களில் ஒரு ஷைத்தானாகத் திகழ்ந்தார். மேலும் அவர் நபி(ஸல்)அவர்களுக்கும் அவர்களின் தோழர்களுக்கும் கடுமையாகத் தொல்லை கொடுத்து வந்தவர்களில் ஒருவருாகவும் இருந்தார். வஹ்ப் எனும் பெயருடைய இவருடைய மகன் முஸ்லிம்களின் வசம் சிக்கிக் கொண்ட- பத்ருப்போரில் சிறைப் பிடிக்கப்பட்ட கைதிகளில்- ஒரு கைதியாக இருந்தான்.

ஸ.்.ப்வான், தங்கள் தரப்பில் கொல்லப்பட்டவர்களைப் பற்றிக் கூறும்போது “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவர்களெல்லாம் மரணமடைந்த பிறகு நாம் உயிர் வாழ்வதில் எந்த நன்மையும் இல்லை” என்று கூறினார். அதற்கு உமைர், “ஆம்! நீர் உண்மையே கூறினீர். அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனக்குக் கடனும் குடும்பமும் இல்லாதிருந்தால் முஹம்மது இருக்கும் இடம் தேடிச் சென்று அவரைக் கொலை செய்திருப்பேன். ஆனால் எனக்குக் கடன் இருக்கிறதே! அதனை நிறைவேற்ற சக்திதான் இல்லை! எனக்குக் குடும்பம் இருக்கிறதே! என் மறைவுக்குப் பிறகு அவர்கள் வீணாகிவிடுவார்களோ என்ற அச்சமும் இருக்கிறதே” என்று கூறினார்.

உமைர் இவ்வாறு கூறியதை ஸ.்.ப்வான் நல்ல சந்தர்ப்பமாகக் கருதி “உம்முடைய கடனுக்கு நான் பொறுப்பு! அக்கடனை நான் நிறைவேற்றுகிறேன். உம்முடைய குடும்பம் என்னுடைய குடும்பம் மாதிரி. அவர்களின் ஆயுள் உள்ள வரை நான் அவர்களுக்கு உதவியாக இருப்பேன்” என்று கூறினார்.

உடனே உமைர் அவரிடம், “அப்படியானால் என் விஷயத்தையும் உன் விஷயத்தையும் நீ இரகசியமாக வைத்துக் கொள்” என்று கூறினார். அதற்கு அவன் “அவ்வாறே செய்கிறேன்” என்றார்.

பிறகு உமைர் தமது வாளை எடுத்து அதில் விஷத்தைத் தடவிக் கொண்டு மக்காவிலிருந்து புறப்பட்டு மதீனா வந்தடைந்தார். அப்போது அங்கு உமர்(ரலி) அவர்கள் சில முஸ்லிம்களுடன் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது உமைரைப் பார்த்துவிட்டார்கள். அவர் இடுப்பில் உறைவாளுடன் பள்ளிவாசலின் வாயிலில் தனது ஒட்டகத்தைக் படுக்க வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். உடனே உமர்(ரலி) அவர்கள், “இதோ அல்லாஹ்வுடைய எதிரி உமைர் பின் வஹ்ப்! இவன் தீய நோக்கத்துடன்தான் இங்கு வந்திருக்க வேண்டும்.” என்று கூறினார்கள்.

பிறகு உமர்(ரலி)நபிகள் நாயகம்(ஸல்)அவர்களிடம் சென்று, அல்லாஹ்வின் தூதரே! இதோ அல்லாஹ்வுடைய எதிரி உமைர் பின் வஹ்ப்! இடுப்பில் உறை வாளுடன் வந்துள்ளான்” என்று கூறினார்கள். அதற்கு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள், “அவரை என்னிடம் கொண்டு வாரும்” என்று கூறினார்கள். உமர்(ரலி) அவர்கள் அவரை நபிகள் நாயகத்திடம் அழைத்துச் சென்றார்கள். உமர்(ரலி) அவர்களின் பிடியிலிருந்த உமைரை நபி(ஸல்) அவர்கள் பார்த்தபோது, “உமரே! அவரை விட்டுவிடும்” என்று கேட்டுக் கொண்டு “நெருங்கி வாரும்” என்று உமைரை நோக்கிச் சொன்னார்கள். உமைர் நெருங்கி வந்தபோது, “உமைரே! நீர் வந்த நோக்கம் என்ன?” என்று நபி(ஸல்)அவர்கள் கேட்டார்கள். அதற்கு அவர், “உங்கள் வசம் உள்ள ஒரு கைதியின் விஷயமாக வந்துள்ளேன். அவரிடம் நல்லமுறையில் நடந்து கொள்ளுங்கள்” என்றார். “உமது கழுத்தில் வாள் தொங்குகிறதே! என்ன விஷயம்?” என்று நபி(ஸல்)அவர்கள் கேட்டார்கள். அதற்கு உமைர், “பல வாட்களுக்கு மத்தியில் இந்த வாளை அல்லாஹ் நாசமாக்குவானாக! இது எந்தப் பலனும் அளிக்கவில்லையே?” என்றார். நபி (ஸல்) அவர்கள் “உண்மையைச் சொல்! நீ வந்திருக்கும் நோக்கம் என்ன?” என்று கேட்டார்கள். அவர், “நான் இந்த கைதி விஷயமாகத்தான் வந்துள்ளேன்” என்று திரும்பவும் கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: “இல்லை! நீயும் ஸ∴ப்வான் பின் உமையாவும் அமர்ந்து பத்ருப் போரில் கொல்லப்பட்ட வர்களைப் பற்றி பேசிக் கொண்டிருந்தீர்கள். பிறகு நீர், “எனக்குக் கடனும் குடும்பமும் இல்லாதிருந்தால் நான் புறப்பட்டுச் சென்று முஹம்மதைக் கொன்றிருப்பேன்” என்று கூறினாய். உடனே ஸ∴ப்வான் உமது கடனுக்கும் உம் குடும்பத்திற்கும் பொறுப்பேற்றுக் கொண்டார். அதற்குப் பகரமாக நீர் என்னைக்

கொல்ல வேண்டும் என்ற அடிப்படையில்! ஆனால் அல்லாஹ் உமக்கும் உமது நோக்கத்திற்கும் தடையாக இருக்கின்றான் அப்படித்தானே!" இதனைக் கேட்டதும் உமைர், "நீங்கள் அல்லாஹ்வுடைய தூதர் என்று நான் சாட்சி சொல்கிறேன். அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் எங்களிடம் கொண்டு வந்த வானத்துச் செய்தி யையும், உங்களுக்கு அருளப்படுகின்ற வஹி எனும் இறையருட் செய்தியையும் நாங்கள் பொய்ப்படுத்தி வந்தோம். இந்த சதித்திட்டம் இருக்கிறதே இதைப் பற்றி நாங்கள் பேசும்போது என்னையும் ஸ.்.ப்வானையும் தவிர வேறு யாரும் அங்கிருக்கவில்லை. அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ்வைத் தவிர வேறும் யாரும் இந்த விஷயத்தை உங்களுக்கு அறிவித்திருக்க முடியாது என்றே அறிகிறேன். எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே எனக்கு இஸ்லாத்தின் பக்கம் வழிகாட்டினான்; அவனே என்னை இந்த நல்வழிக்குக் கொண்டு வந்தான்" என்று கூறிவிட்டு, சத்தியத்தின் சாட்சியத்தை மொழிந்தார்.

அதன் பிறகு நபியவர்கள் (தம் தோழர்களிடம்), "உங்கள் சகோதரருக்கு இறைமார்க்கம் தொடர்பாக தெளிவான விளக்கம் அளியுங்கள். அவருக்குக் குர்ஆனை கற்றுக் கொடுங்கள். அவரது கைதியை விடுதலை செய்யுங்கள்" என்று கூறினார்கள். அவர்களும் அவ்வாறே செய்தனர். பிறகு உமைர் "அல்லாஹ்வின் தூதரே! நான் இஸ்லாத்திற்கெதிராக போர் புரிவதற்காக கடும் முயற்சி செய்து வந்தேன்; இறைமார்க்கத்தில் இருப்போரைக் கடுமையாகத் துன்புறுத்தி வந்தேன். எனவே நான் மக்கா செல்ல என்னை நீங்கள் அனுமதிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்: நான் அங்கு சென்று அங்குள்ளவர்களை அல்லாஹ்வின் பக்கமும், அல்லாஹ்வின் தூரின் பக்கமும், இஸ்லாத்தின் பக்கமும் அழைப்பேன். அல்லாஹ் அவர்களுக்கு நேர்வழிகாட்டக்கூடும்" என்றார். நபி(ஸல்)அவர்கள் அவரை மக்கா செல்ல அனுமதித்தார்கள். அவர் மக்கா வந்தடைந்தார்.

உமைர் மதீனாவிலிருந்து மக்கா புறப்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில் ஸ.்.ப்வான், மக்களிடம் "மகிழ்ச்சி கொண்டாடுங்கள்! பத்ருடைய நிகழ்வை உங்களுக்கு மறக்கச் செய்யும் அளவுக்கு ஒரு நிகழ்வு நடக்கப்போகிறது!" என்று கூறினார். மேலும் அவர் உமைரைப் பற்றி (மதீனாவிலிருந்து வரும்) பயணிகளிடம் விசாரிக்கலானான். இறுதியில் ஒரு பயணி வந்து, உமைர் இஸ்லாத்தை ஏற்ற செய்தியைக் கூறியதும் இனி உமைரிடம் தாம் பேசப் போவ தில்லை என்றும் அவருக்கு எந்த உதவியும் செய்யப் போவதில்லை என்றும் சத்தியம் செய்தார். உமைர் மக்கா வந்தடைந்ததும் அங்கு தங்கியிருந்து

மக்களை இஸ்லாத்தின் பக்கம் அழைத்தார். அவர் மூலம் ஏராளமானோர் இஸ்லாத்தை ஏற்றனர்.

**மற்றொரு சந்தர்ப்பத்தில்**

மற்றொரு சந்தர்ப்பத்தில் நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் ஒரு பயணத்திலிருந்து தம் தோழர்களுடன் திரும்பிக் கொண்டிருந்தபோது எல்லோரும் ஒரு பள்ளத்தாக்கில் தங்கினார்கள். மக்கள் எல்லோரும் மரத்தடியில் இளைப்பாறுவதற்காகவும் தூங்குவதற்காகவும் ஆங்காங்கே பிரிந்து சென்றுவிட்டனர். நபி (ஸல்) அவர்களும் ஒரு மரத்தடியில் வந்து அதன் நிழலில் படுத்துக்கொண்டார்கள். தமது வாளை அந்த மரத்தின் கிளை ஒன்றில் தொங்கவிட்டிருந்தார்கள். நபி(ஸல்)அவர்கள் தூங்கிக் கொண்டிருக்கும்போது இணைவைப்பவர்களில் ஒருவன் பதுங்கிப் பதுங்கி அங்கு வந்தான். அவன் முஸ்லிம்களைப் பின்தொடர்ந்து வந்துகொண்டிருந்தவன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அருகே சென்று அவர்களது தலைமாட்டில் நின்று கொண்டான். பிறகு நபி(ஸல்) அவர்களுடைய வாளை எடுத்து அதை அதன் உறையிலிருந்து உருவினான். பிறகு அவர்களின் தலைக்கு நேராக அதனை உயர்த்தி, “முஹம்மதே! என்னிடமிருந்து உம்மைக் காப்பாற்றப்போவது யார்?” என்று கேட்டான். உடனே நபி(ஸல்) அவர்கள் கண்விழித்துப் பார்த்தபோது ஒரு மனிதன் உருவிய வாளுடன் நிற்பதைக் கண்டார்கள். அவனது கேள்விக்கு அமைதியாக “அல்லாஹ்” என்று பதிலுரைத்தார்கள். அந்த மனிதன் நடுநடுங்கிப் போனான். அவனது கையிலிருந்து வாள் கீழே விழுந்தது. நபி(ஸல்) அவர்கள் எழுந்து அந்த வாளை எடுத்து அதனை உயர்த்தி, “என்னிடமிருந்து உம்மைக் காப்பாற்றுவது யார்?” என்று அந்த மனிதனிடம் திருப்பிக் கேட்டார்கள். என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் அந்த மனிதன் திகைத்தான். பிறகு “யாருமில்லை” என்று பதிலளித்தான். நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் அந்த மனிதனை மன்னித் தார்கள். அவர் இஸ்லாத்தை ஏற்றார். பிறகு தம் சமூகத்தார்களிடம் சென்று அவர்களை இஸ்லாத்தின் பக்கம் அழைக்கலானார்.

**உஹது போர்**

பத்ரு போர் நடந்து ஓராண்டிற்குப் பிறகு முஸ்லிம்களுக்கும் மக்காவின் இறைநிராகரிப்பாளர்களுக்கும் இடையே இந்தப் போர் நடந்தது. எவ்வாறெனில் இணைவைப்பாளர்கள் பத்ரு போரில் தோற்ற பிறகு முஸ்லிம்களைப் பழிவாங்க வேண்டும் என உறுதி கொண்டு மூவாயிரம் போர் வீரர்களுடன் புறப்பட்டனர். முஸ்லிம்கள் சுமார் 700 பேருடன் சென்று அவர்களை எதிர்கொண்டனர். நிராகரிப்பாளர்களை முஸ்லிம்கள் ஆரம்பத்தில் வென்றார்கள். அவர்கள் மக்காவை

நோக்கி விரண்டோடினார்கள் தான். ஆயினும் இணைவைப்பாளர்கள் விரண்டோடியதைக் கண்ட அம்பு எய்தும் வீரர்கள் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் வகுத்துக் கொடுத்த திட்டத்தை அம்பு எய்தும் வீரர்கள் குலைத்து போரில் கிடைக்கும் பொருட்களைச் சேகரிப்பதற்காக அவர்கள் மலையை விட்டு கீழே இறங்கி வந்ததால் அந்த மலை வழியாக எதிரிகள் மீண்டும் திரும்பி வந்து முஸ்லிம்களை வீழ்த்தினார்கள். இதனால் இந்தப் போரில் இணைவைப் பாளர்களின் கை ஓங்கியது.

இந்தப் போரில் முஸ்லிம்களில் எழுபது பேர் கொல்லப்பட்டனர். அவர்களில் நபி(ஸல்) அவர்களின் சிறிய தந்தையான ஹம்ஸா(ரலி) அவர்களும் ஒருவர். இணைவைப்பவர்களில் 22 பேர் கொல்லப்பட்டனர்.

**அகழ் போர்**

உஹது போருக்குப் பிறகு யூதர்களில் சிலர் மக்காவாசிகளிடம் சென்று மதீனாவிலுள்ள முஸ்லிம்கள் மீது போர் தொடுக்குமாறு அவர்களைத் தூண்டினர். அவர்களுக்கு உதவி செய்வதாகவும் வாக்களித்தனர். அதை மக்காவாசிகளும் ஏற்றுக்கொண்டனர். பிறகு யூதர்கள் வேறு பல குலங்களையும் முஸ்லிம்களுக் கெதிராகப் போர் செய்யுமாறு தூண்டினர். அவர்களும் சம்மதம் தெரிவித்தனர். இவ்வாறாக எல்லா இடங்களிலிருந்தும் இணைவைப்பவர்கள் மதீனாவை முன்னோக்கி வந்தனர். இறுதியாக மதீனாவைச் சுற்றி சுமார் பத்தாயிரம் போர் வீரர்கள் ஒன்று திரண்டனர்.

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் எதிரிகளின் நடவடிக்கைகளை அறிந்துதம் தோழர்களிடம் கலந்தாலோசித்தார்கள். அப்போது ஸல்மான் ஃபாரிஸி(ரலி) அவர்கள் மதீனாவைச் சுற்றி மலைகளில்லாத பகுதிகளில் அகழ் தோண்டுமாறு ஆலோசனை கூறினார்கள். அகழ் தோண்டுவதில் எல்லா முஸ்லிம்களும் பங்கு கொண்டு விரைவாகத் தோண்டி முடித்தார்கள்.

இணைவைப்பவர்கள் அகழைக் கடக்க முடியாமல் சுமார் ஒரு மாத காலமாக மதினாவுக்கு வெளியே முகாமிட்டனர். பின்னர் இணைவைப்பவர்களின் மீது ஒரு பயங்கரமான காற்றை அல்லாஹ் அனுப்பி வைத்தான். அது அவர்களின் கூடாரங்களைப் பெயர்த்தெறிந்தது. அவர்களுக்குப் பீதி ஏற்பட்டு விரைவாக ஊருக்குத் திரும்பிவிட்டனர். இவ்வாறாக அல்லாஹ் மட்டும் தன்னந் தனியாக அந்த கூட்டுப்படையினரைத் தோற்கடித்து முஸ்லிம்களுக்குப் பேருதவி புரிந்தான்.

இணைவைப்பவர்களின் படை திரும்பிச் சென்றுவிட்ட பிறகு அது பற்றி நபிகள் நாயகம் தம் தோழர்களுக்குத் தெரிவித்தார்கள். மேலும் “குறைஷிகள் இந்த ஆண்டுக்குப் பிறகு இனி உங்களுடன் போர் செய்ய மாட்டார்கள்.

ஆயினும் நீங்கள்தான் அவர்களுடன் போர் செய்வீர்கள்" என்றும் குறிப்பிட் டார்கள். ஆம்! அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் உண்மையே உரைத் தார்கள். இந்தப் போர்தான் முஸ்லிம்களைத் தாக்குவதற்காக குறைஷிகள் மேற்கொண்ட கடைசி முயற்சியாக இருந்தது.

முஸ்லிம்கள் அகழ் தோண்டிக் கொண்டிருந்த நேரத்தில் அனைவரும் கடுமையான பசிக்கு உள்ளாயினர். எந்த அளவுக்கு எனில் அந்தக் கடும் பசியைச் சமாளிக்க தங்கள் வயிற்றில் கல்லைக் கட்டிக் கொண்டு சமாளிக்க வேண்டியதாயிருந்தது. இந்நிலையில் ஜாபிர் பின் அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு சிறிது உணவு வழங்க விரும்பினார்கள்- அதன் மூலம் நபியவர்கள் தம் பசியைத் தணித்துக் கொள்வதற்காக. தம்மிடமிருந்த ஒரு வயது வெள்ளாட்டுக் குட்டியை அறுத்து, அதன் இறைச்சியைச் சமைக்கும் படியும், அத்துடன் சிறிதளவு கோதுமைமாவைக் குழைத்து ரொட்டி சுடும்படியும் தம்முடைய மனைவியிடம் வேண்டினார். இதைத் தவிர வேறு எந்த உணவுப் பொருட்களும் அப்போது அவரிடம் இருந்ததில்லை. இறைச்சி நன்றாக வெந்ததும் ஜாபிர்(ரலி)அவர்கள், நபி(ஸல்) அவர்களிடம் சென்று, நபியவர்களுக்கும் அவர்களுடன் மேலும் ஒன்றிரண்டு பேருக்கு மட்டும் போதுமான உணவைத் தாம் தாயர் செய்திருப்பதாகக் கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "இது நிறைவான சிறந்த உணவாகும்" என்று கூறிவிட்டு, அகழ்த் தோண்டுவதில் ஈடுபட்டிருந்த அனைவரையும் விருந்துக்கு அழைத்து வந்தார்கள். நபியவர்கள் தம்தோழர்களுக்கு இறைச்சியை எடுத்துவைக்கலானார்கள். ரொட்டியைத் துண்டுகளாக்கி அவர்களுக்குக் கொடுக்கலானார்கள். அனைத்துத் தோழர்களும் வயிறார உண்டனர். ஆனால் உணவு மட்டும் யாரும் கைவைக்காதது போல் அப்படியே மீதமானது. உணவருந்தியவர்கள் ஏறக்குறைய ஆயிரம் பேர் இருந்தனர். இது நபி(ஸல்) அவர்களின் அற்புதங்களில் ஒன்றாகும்.

## ஹ□தைபிய்யா உடன்படிக்கை

நபிகள் நாயகம்(ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் மக்காவைத் துறந்து மதீனாவில் குடியேறிய பிறகிலிருந்து மக்கத்து நிராகரிப்பாளர்கள் ஒரு உறுதி யான முடிவுடன் இருந்தார்கள். அதாவது நபியவர்களையும் முஸ்லிம்களையும் மீண்டும் மக்காவில் நுழைய விடாமல் தடுக்க வேண்டும். அங்குள்ள புனிதப் பள்ளிவாசலைத் தரிசிக்க அனுமதிக்கக்கூடாது. ஆனால் ஹிஜ்ரத் நடைபெற்று சரியாக ஆறாவது ஆண்டில் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தம் தோழர் களுடன் மக்காவுக்குப் புறப்பட்டுவர முடிவு செய்தார்கள். துல்கஅதா மாதத்தில் புறப்படுவதைத் தேர்வு செய்தார்கள். ஏனெனில் இந்த மாதம் அரபுகள்

எல்லோரும் மகத்துவப்படுத்துகின்ற புனிதமிக்க மாதங்களில் ஒன்றாக இருந்தது. பிறகு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் போர் செய்யும் நோக்கமின்றி உம்ரா செய்யும் எண்ணத்தில் தம் தோழர்களுடன் மதினாவிலிருந்து மக்கா நோக்கிப் புறப்பட்டார்கள். அவர்கள் மொத்தம் 1400 பேர். அனைவரும் இஹ்ராம் உடையை அணிந்திருந்தனர். தம்முடன் பலிப்பிராணிகளையும் அழைத்து வந்தனர். ஏனெனில் அவர்கள் கஅபத்துல்லாஹ்வை தரிசிப்பதற்காகவும் அதனை மகத்து வப்படுத்துவதற்காகவுமே வந்துள்ளார்கள் என்பதை மக்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக! இன்னும் சொல்வதென்றால் அவர்களை மக்காவினுள் நுழைய விடாமல் தடுப்பது பற்றி குறைஷிகள் சிந்திக்கவே கூடாது என்பதும் ஒரு நோக்கமாக இருந்தது. மேலும் பயணிகள் வழக்கமாக எடுத்துவரக்கூடிய ஒரு வாளைத் தவிர வேறு எந்த ஆயுதத்தையும் அவர்கள் தம்முடன் எடுத்து வரவில்லை. அந்த வாளும்கூட உறையிலிடப்பட்டிருந்தது.

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தமது கஸ்வா ஒட்டகத்தில் பயணமா னார்கள். அவர்களுக்குப் பின்னால் அவர்களின் தோழர்கள் வந்தனர். மதீனா வாசிகளின் இஹ்ராம் எல்லையான துல்ஹு லை.:.பா என்ற இடம் வந்ததும் அனைவரும் இஹ்ராம் செய்தனர். தங்கள் உம்ராவைப் பிரகடனம் செய்வதற்காக தல்பியாவை உரத்த குரலில் முழங்கினர். உம்ரா செய்வது அவர்களது உரிமை யாகவும் இருந்தது. ஏனெனில் அல்லாஹ்வின் ஆலயத்தை தரிசிப்பது அரேபி யர்கள் அனைவரின் உரிமையாகும். எனவே பொதுவான வழக்கின்படி அல்லாஹ்வின் ஆலயத்தைத் தரிசிப்பதை விட்டும், அதனை தவா.:.ப் (வலம்) சுற்றுவதை விட்டும் யாரையும் தடுப்பதற்கு குறைஷிகளுக்கு எந்த உரிமையும் கிடையாது. அவன் எதிரியாக இருந்தாலும் சரியே. இறை ஆலயத்தின் கண்ணி யத்தை அவன் பேணுகின்றபோது அவனைத் தடுக்க யாருக்கும் உரிமை யில்லை.

ஆனாலும், முஸ்லிம்கள் மக்காவுக்கு வருகின்றனர் என்பதை மட்டும் அறிந்து கொண்டு குறைஷிகள் போர் தொடுப்பதற்கு ஆயத்தம் செய்ய ஆரம்பித்தனர். நபிகள் நாயகம்(ஸல்) அவர்களை மக்காவில் நுழையவிடாமல் தடுக்க வேண்டும் என்பதில் அவர்கள் உறுதியாக இருந்தனர். அதற்காக அவர்கள் என்ன விலை கொடுக்கவும் தயாராக இருந்தனர். இவ்வாறாக குறைஷிகளின் இந்த நிலைப்பாடு முஸ்லிம்களின் மீது வரம்பு மீறுவதிலும் அவர்களின் உரிமைகளை தடுப்பதிலும் அவர்கள் பிடிவாதமாக இருந்தார்கள் என்பதற்கு ஆதாரமாக ஆனது.

நபியவர்களின் தலைமையிலான அந்தப் பயணக்கூட்டம் தொடந்து பயணமாகி மக்காவுக்கு அருகே வந்தது. ஆயினும் குறைஷிகள் நபிகள் நாயகத்தையும் அவர்களின் தோழர்களையும் மக்காவில் நுழையவிடாமலும், இறையால யத்தைத் தவா.ஃப் செய்யவிடாமலும் தடுப்பதில் தான் குறியாக இருந்தனர்.

இறுதியில் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்து வதற்காக நடுவர்களை அனுப்பி வைத்தார்கள் குறைஷிகள். அதனால் நபியுடன் சேர்ந்து அவர்கள் ஒரு நல்ல முடிவுக்கு வரலாம் அல்லவா. இரு பிரிவினர்களிடையே பல சுற்றுப் பேச்சுவார்த்தை நடந்தது. அந்த நேரத்தில் குறைஷி இளைஞர்களில் நாற்பது பேர் திடுமென முஸ்லிம்களின் படையில் புகுந்து நபித்தோழர்களில் ஒருவரைக் கொலை செய்ய முயன்றனர். ஆனால் முஸ்லிம்கள் அந்த இளைஞர்கள் அனைவரையும் பிடித்து நபிகள் நாயகத் திடம் கொண்டு வந்தார்கள். நபியவர்களோ அவர்களை மன்னித்து விட்டுவிட் டார்கள்.

அதன் பிறகு உஸ்மான் பின் அ.ஃ.ப்.ஃ.பான்(ரலி) அவர்களை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் குறைஷித் தலைவர்களிடம் தூது அனுப்பினார்கள். தாம் மக்கா வந்துள்ளதன் நோக்கம் அல்லாஹ்வின் ஆலயத்தின் புனிதத்தை மதித்து அதனை தரிசிப்பதற்காகத்தான்; போர் புரிவதற்காக அல்ல என்பதை அவர்க ளுக்குத் தெரிவிப்பதற்காக. ஆனால் உஸ்மான்(ரலி) அங்கு சென்றதும் அவருக்கும் குறைஷிகளுக்கும் இடையிலான பேச்சுவார்த்தையில் தடங்கல் ஏற்பட்டது. குறைஷிகள் உஸ்மானைப் பிடித்து வைத்துக் கொண்டார்கள். இதனால் அவர் கொல்லப்பட்டுவிட்டார் என்றொரு வதந்தி பரவியது. இது நபிகள் நாயகம்(ஸல்) அவர்களுக்கு எட்டியதும் “இந்த குறைஷிகளுடன் போர் புரியாமல் நாம் இங்கிருந்து நகரக்கூடாது” என்று கூறினார்கள். மேலும் இந்தப் போரை எதிர்கொள்ள அனைவரும் உறுதிமொழி எடுத்துக் கொள்ளும்படி மக்களை அழைத்தார்கள். நபியவர்கள் தமக்குத் தாமே உறுதிமொழி எடுக்கும் விதமாக தமது கைகளில் ஒன்றை மற்றொன்றின் மீது அடித்தார்கள். இந்த உறுதிமொழி பைஅத்துர் ரிழ்வான் -இறைதிருப்திக்காக மேற்கொள்ளப்பட்ட பைஅத் என்று அழைக்கப்படுகிறது. ஒரு மரத்தடியில் நடந்த இந்த உடன்படிக் கையில் நபிகள் நாயகத்திடம் அவர்களுடைய தோழர்கள் எடுத்துக் கொண்ட உறுதிமொழி இதுதான்: “உஸ்மானுக்கு ஏதேனும் துன்பம் நிகழ்ந்தால் இணை வைப்போருடன் போர் புரியாமல் நாங்கள் இடத்தை விட்டு நகரமாட்டோம். களத்திலிருந்து நாங்கள் யாரும் பின்வாங்கி ஓட மாட்டோம்” இதன் பிறகு

“உஸ்மான்(ரலி) கொல்லப்பட வில்லை; அவர் நலமாக உள்ளார்” என்ற செய்தி நபி(ஸல்)அவர்களுக்குக் கிடைத்தது.

போர் செய்வதற்காக நபி(ஸல்)அவர்களிடம் முஸ்லிம்கள் உறுதிமொழி செய்து கொடுத்ததை குறைஷிகள் அறிந்தவுடன் நபிகள் நாயகத்திடம் சமாதான உடன்படிக்கையை மேற்கொள்வதற்காக ஸுஹைல் பின் அம்ர் என்பவரை அனுப்பி வைத்தனர். அதாவது முஸ்லிம்கள் இந்த வருடம் மக்கா வுக்குள் நுழையாமல் திரும்பிச் சென்றுவிட வேண்டும். அடுத்த வருடம் அவர்கள் விரும்பும் போது மக்காவுக்கு வரலாம் என்பதே அந்த ஒப்பந்தம். ஒப்பந்தம் முடிந்தது. ஒப்பந்தத்தின் நிபந்தனைகள் அனைத்தையும் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். அவை வெளிப்படையில் குறைஷிகளுக்கு சாதகமாக இருந்தன. இந்த ஒப்பந்தம் குறித்து முஸ்லிம்கள் ஆத்திர மடைந்தனர். ஒப்பந்தத்தின் நிபந்தனைகள் யாவும் அவர்களின் பார்வையில் அநியாயமாகவும், இணைவைப்பாளர்களுக்கு சாதகமாகவும் இருந்தன. ஆயினும் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஒப்பந்தம் செய்து கொள்வதையே விரும்பினார்கள். ஏனெனில் இஸ்லாம் அமைதியான சூழ்நிலையில் பரவி வளர்ந்தால் ஏராளமான மக்கள் இஸ்லாத்தில் இணைவார்கள் என்பதை நபியவர்கள் அறிந்தி ருந்தார்கள்.

அப்படித்தான் நடந்தது. அமைதி உடன்படிக்கை ஏற்பட்டிருந்த இந்தக் காலகட்டத்தில்தான் இஸ்லாம் மக்களிடையே பெரிய அளவில் பரவியது. இன்னும் சொல்வதானால் முஸ்லிம்களுக்கும் குறைஷிகளுக்கும் இடையே ஏற்பட்ட இந்த அமைதி உடன்படிக்கை இஸ்லாத்திற்கும் முஸ்லிம் களுக்கும் மிகப் பெரும் வெற்றியாக இருந்தது. அதுமட்டுமல்ல நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் ஒளியைக் கொண்டு பார்ப்பவர்களாக இருந்தார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாகவும் இருந்தது. ஆம்! ஒப்பந்தத்தின் நிபந்தனைகள் அனைத்தையும் நபியவர்கள் ஏற்றுக் கொண்டார்களே! வெளித் தோற்றத்தில் அந்த நிபந்தனைகள் சில நபித்தோழர்களின் பார்வையில் குறைஷிகளுக்கு சாதகமாக இருந்தன.

**மக்காவை வெற்றி கொள்ளுதல்**

ஹிஜ்ரி எட்டாம் ஆண்டு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் மக்காவின் மீது படையெடுக்கவும் அதை வெற்றிகொள்ளவும் திட்டமிட்டார்கள். ரமலான் 10 ஆம் நாள் பத்தாயிரம் படைவீரர்களுடன் புறப்பட்டுச் சென்றார்கள். சொல்லிக் கொள்ளும்படியான மோதல்கள் எதுவுமின்றி மக்காவினுள் நுழைந்தார்கள். குறைஷிகள் சரணடைந்தார்கள். அல்லாஹ் முஸ்லிம்களுக்கு உதவி செய்தான்.

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஹரம் ஷரீ.ஃப் எனும் புனிதப் பள்ளிவாசலுக்குச் சென்று கஅபா ஆலயத்தை வலம் வந்து அதனுள் இரண்டு ரக்அத் தொழுதார்கள். அதன் பின்னர் கஅபா ஆலயத்தின் உள்ளும் அதன் மேல் பகுதியிலும் இருந்த சிலைகள் அனைத்தையும் உடைத்தெறிந்தார்கள்.

பிறகு நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் கஅபாவின் வாசலின் மீது நின்றார்கள். குறைஷிகள் கீழே அணிவகுத்திருந்தார்கள். தங்களை நபிகள் நாயகம் என்ன செய்யப் போகிறார்களோ என எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்போது நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள், “குறைஷிகளே! நான் உங்களை என்ன செய்ய வேண்டும் என நீங்கள் நினைக்கிறீர்கள்?” எனக் கேட்டார்கள். அதற்கு அவர்கள், “நீங்கள் சிறந்த சகோதரர்! சிறந்த சகோதரனின் மகன்! நல்லதையே செய்வீர்கள்!” எனக் கூறினார்கள். உடனே நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள், “செல்லுங்கள்! நீங்கள் அனைவரும் விடுதலை பெற்றவர்கள்” எனக் கூறினார்கள். தமது தோழர்களைக் கொடுமைப்படுத்தி, கொலையும் செய்து, தமக்கும் தொல்லைகள் கொடுத்து, நாட்டை விட்டே தம்மை வெளியேற்றிய தம் விரோதிகளை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மன்னித்ததில் மிகப் பெரிய முன்மாதிரியாகத் திகழ்கிறார்கள்.

மக்கா வெற்றிக்குப் பின்னர் மக்கள் கூட்டம் கூட்டமாக இஸ்லாத்தில் இணைந்தனர். ஹிஜ்ரி 10 ஆம் ஆண்டு நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் ஹஜ் செய்தார்கள். அதுதான் அவர்கள் செய்த ஒரே ஹஜ். அவர்களுடன் லட்சத்திற்கும் அதிகமானோர் ஹஜ் செய்தனர். ஹஜ்ஜை நிறைவு செய்த பின் நபிகள் நாயகம் மதீனாவுக்குத் திரும்பினார்கள்.

**பிரதிநிதிகளின் வருகையும் மன்னர்களுக்குக் கடிதம் எழுதுதலும்**

நபிகள் நாயகத்தைப் பற்றிய செய்தி பரவலானது. உலகெங்கும் அவர்களின் பிரச்சாரம் பரவத் தொடங்கியது. பல்வேறு நாடுகளிலிருந்தும் பிரதிநிதிகளின் குழுக்கள் இஸ்லாமிய மார்க்கத்தில் இணைவதை வெளிப்படுத்தும் விதமாக மதினாவுக்கு வருகை தர ஆரம்பித்தனர். இதுபோல நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் பல்வேறு நாட்டு மன்னர்களுக்கும் அதிகாரிகளுக்கும் இஸ்லாத்தின் பக்கம் அழைப்பு விடுத்து கடிதம் எழுதத் தொடங்கினார்கள். அந்த அழைப்பை ஏற்று சிலர் நம்பிக்கை கொண்டனர். வேறு சிலர் ஏற்க மறுத்தாலும் நல்ல முறையில் நடந்துகொண்டனர். நபியவர்களுக்கு அன்பளிப்புகளை அனுப்பினர். ஆனால் நபிகள் நாயகம் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. இன்னும் சிலர் ஆத்திரமடைந்து நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் அனுப்பிய கடிதத்தைக் கிழித்துள்ளார்கள். பாரசீக மன்னர் கிஸ்ரா கிழித்ததைப் போல! “இறைவா!

அவருடைய அதிகாரத்தைக் கிழித்துவிடு” என்று நபிகள் நாயகம் அவருக்கு எதிராகப் பிரார்த்தித்தார்கள். அதன் பிறகு சிறிது காலத்திலேயே பாரசீக மன்னருக்கு எதிராக அவருடைய மகனே கிளர்ச்சி செய்து அவரைக் கொன்று விட்டு அவரிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றினான்.

எகிப்து மன்னர் மகோகிஸ் இஸ்லாத்தை ஏற்கவில்லை என்றாலும் கடிதம் கொண்டு வந்த நபிகள் நாயகத்தின் தூதரை கண்ணியப்படுத்தி, அவருடன் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களுக்கு அன்பளிப்புகளைக் கொடுத்தனுப்பினார். இவ்வாறே ரோமாபுரி மன்னர் கைஸரும் இஸ்லாத்தை ஏற்க மறுத்தாலும் நல்ல முறையில் நடந்து கொண்டார். கடிதம் கொண்டு வந்த நபிகள் நாயகத்தின் தூதரை கண்ணியப்படுத்தினார். பஹ்ரைன் நாட்டு அரசன் முன்திர் பின் ஸாவா என்பவர் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் கடிதம் வந்ததும் பஹ்ரைன் நாட்டு மக்களுக்கு அதைப் படித்துக் காட்டினார். அவர்களில் சிலர் நம்பிக்கை கொண்டனர்; வேறு சிலர் மறுத்தனர்.

**நபிகள் நாயகத்தின் மரணம்**

நபியவர்கள் ஹஜ்ஜிலிருந்து திரும்பி சுமார் இரண்டரை மாதத்திற்குப் பிறகு அவர்களுக்கு நோய் ஏற்படத் தொடங்கியது. அது நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டிருந்தது. மக்களுக்கு இமாமாக நின்று தொழுகை நடத்த இயலாமலான போது அபூபக்ரை மக்களுக்குத் தொழுகை நடத்தும்படி நபியவர்கள் கேட்டுக் கொண்டார்கள். ஹிஜ்ரி 11 ஆம் ஆண்டு ரபீவுல் அவ்வல் 12 ஆம் நாள், திங்கட் கிழமை நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் மரணமடைந்தார்கள். உயர்வு மிக்க நண்பனான அல்லாஹ்விடம் சேர்ந்தார்கள். அப்போது அவர்களுக்கு 63 வயது நிறைவடைந்திருந்தது.

நபியவர்களின் மரணச் செய்தி நபித்தோழர்களிடம் பாவியதும் அவர்கள் உணர்விழந்து போகும் அளவு துக்கம் அடைந்தனர். இச்செய்தியை அவர்கள் நம்பவில்லை. பிறகு அவர்களுக்கு மத்தியில் அபூபக்கர்(ரலி) அவர்கள் உரை நிகழ்த்தி அவர்களை அமைதிப்படுத்தினார்கள். மேலும் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களும் மனிதர்தான்; ஏனைய மனிதர்கள் இறந்துவிடுவது போலவே அவர்களுக்கும் இறப்பு உண்டு என்பதை விளக்கிக் கூறினார்கள். பிறகு மக்கள் அமைதியடைந்தனர். அதன் பிறகு நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் குளிப்பாட் டப்பட்டு, க.்.பன் துணி பொதியப்பட்டு அவர்களின் மனைவி ஆயிஷாவின் அறையில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நபியாக அனுப்பப் படுவதற்கு முன் 40 ஆண்டுகளும் நபியாக ஆன பின் 13 ஆண்டுகளும் மக்காவில் வாழ்நதார்கள்.

பிறகு மதீனாவில் பத்து ஆண்டுகள் வாழ்ந்துள்ளார்கள். அதன் பின்னர் முஸ்லிம்கள் அபூபக்ர் சித்தீக்(ரலி) அவர்களைக் கலீ∴பாவாகத் தேர்ந்தெடுத்தனர். அவர்கள் தான் நேர்வழி பெற்ற கலீ∴பாக்களில் முதல் கலீ∴பா.

**நபிகள் நாயகத்தை நபித்தோழர்கள் நேசித்தல்**

நபிகள் நாயகத்தின் மீது நபித்தோழர்கள் கொண்ட நேசம் மகத்தானது. அவர்கள் தங்களையும், தங்களுடைய பிள்ளைகளையும், தங்கள் உடைமைகளையும் நேசிப்பதை விட அதிகமாக நபிகள் நாயகம்(ஸல்) அவர்களை நேசித்து வந்தர்கள். நபி(ஸல்) அவர்களின் மூலமாகத்தான் அவர்களை கு∴ப்ரு-இறைநிராகரிப்பு எனும் இருளிலிருந்து இஸ்லாம் எனும் வெளிச்சத்திற்கு அல்லாஹ் கொண்டு வந்தான். நபியவர்களின் மீது நபித்தோழர்கள் கொண்ட நேசத்தைப் பற்றி நமக்கு எடுத்துரைக்கக்கூடிய நிகழ்ச்சிகள் ஏராளம் உள்ளன. அவற்றில் சில வருமாறு:

குபைப் பின் அதீ என்ற சிறப்புக்குரிய நபித்தோழரை தூக்கிலிட குறைஷிகள் முடிவு செய்தபோது, அவரிடம் குறைஷிகளின் தலைவர் அபூசு∴ப்யான் என்பவர் பின்வருமாறு கேட்டார். அதாவது “நாங்கள் முஹம்மதைப் பிடித்து உமக்குப் பதிலாக அவரது தலையை நாங்கள் துண்டிப்பதும், நீர் உம் குடும்பத்தாரிடம் நிம்மதியாக இருப்பதும் உமக்கு விருப்பமா?” என்று! அதற்கு குபைப் கூறியதாவது: “இல்லை! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அது ஒருபோதும் நடக்காது. நான் என் குடும்பத்தாரிடம் இருக்க, முஹம்மத் நபி அவர்கள் இப்போது இருக்கும் இடத்தில் ஒரு முள் தைத்து துன்பத்திற் குள்ளாவதுகூட எனக்கு மகிழ்ச்சி அளிப்பதாக ஆகாது.”

உஹதுப் போரின்போது நபி(ஸல்) அவர்கள் கொல்லப்பட்டுவிட்டதாக ஒரு வதந்தி பரவியது. இதைக் கேள்விப்பட்ட அன்ஸார் குலத்தைச் சேர்ந்த ஒரு பெண்மணி ஓடோடி வந்தாள். அப்போது அங்கிருந்தவர்கள் அவளிடம் அவளுடைய தந்தை, அவளுடைய மகன், அவளுடைய கணவர், அவளுடைய சகோதரன் ஆகிய அனைவரும் கொல்லப்பட்ட செய்தியைத் தெரிவித்தனர். ஆனால் அவளோ, “அல்லாஹ்வின் தூதர்(ஸல்)அவர்கள் என்ன ஆனார்கள்?” என்றே கேட்டாள். “அவர்கள் நலமாக உள்ளார்கள்” என்று அம்மக்கள் கூறிய பிறகும், “அவர்களை எனக்குக் காண்பியுங்கள் நான் அவர்களைப் பார்க்க வேண்டும்” என்றாள். அந்த அன்சாரிப் பெண்மணி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்த பிறகு அவர்களது மேலாடையின் ஒரு ஓரத்தைப் பிடித்துக் கொண்டு பின்வருமாறு கூறினாள். “அல்லாஹ்வின் தூதரே! என் தாயும்

தந்தையும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! நீங்கள் நலமுடன் இருக்கும்போது எந்தத் துன்பத்தையும் நான் பொருட்படுத்தப் போவதில்லை!."

ஒரு மனிதர் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களிடம் வந்து கூறினார்: "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் என் உயிரை விட எனக்கு விருப்பமானவர்கள்! என் மனைவி மக்களை விட எனக்கு விருப்பமானவர்கள்! நான் வீட்டில் இருக்கும்போது உங்களைப் பற்றிய நினைவு எனக்கு வந்துவிட்டால் உங்க ளிடம் வந்து உங்களைப் பார்க்காத வரை என்னால் பொறுமையாக இருக்க முடியாது. எனது மரணத்தையும் உங்கள் மரணத்தையும் நான் நினைத்துப் பார்க்கும்போது (மரணத்திற்குப் பிறகு) நீங்கள் சொர்க்கத்துக்குச் சென்றால் நபிமார்களின் உயர்ந்த அந்தஸ்துக்கு உயர்தப்படுவீர்கள் என்பதை அறிகிறேன். அப்படியானால் நான் சொர்க்கத்துக்குச் சென்றால் உங்களைப் பார்க்க முடியாமல் போய்விடுமோ என்று நான் பயப்படுகிறேன்" அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "நீர் யாரை நேசிக்கிறீரோ அவர்களுடன்தான் (சொர்க்கத்தில்) இருப்பாய்!" என்று கூறினார்கள்.

ஒரு முறை அலீ இப்னு அபீதாலிப்(ரலி) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதர் மீது நீங்கள் வைத்திருந்த நேசம் எப்படிப்பட்டது?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் எங்களுக்கு எங்கள் செல்வங்களை விட, எங்கள் பிள்ளைகளை விட, எங்கள் தாய்- தந்தையரை விட, ஏன் தாகத்தின்போது அருந்தும் குளிர்ந்த நீரை விடவும் அதிகப் பிரியமானவர்களாக இருந்தார்கள்!" என்று கூறினார்கள்.

**முஸ்லிம் அல்லாதவர்களுடன் நபிகள் நாயகம்**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மாறுபட்ட கலாச்சாரங்கள், வேறுபட்ட கொள்கைகளைக் கொண்ட பல்வேறு இனத்தைச் சேர்ந்த மக்களுடன்- அவரவர் களின் கலாச்சாரங்களில் எந்தத் தலையிடுதலும் செய்யாமல் பெருந்தன்மை யோடு வாழ்ந்துள்ளார்கள். இதற்குரிய சில சான்றுகள் வருமாறு:

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்து வந்ததிலிருந்து மதீனாவில் யூதர்களுடன் முழு சமாதானத்துடனும் நல்லிணக்கத்துடனும் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுடன் நபியவர்கள் இஸ்லாமிய குணவொழுக்கங்களுடன் நடந்து கொள்வார்கள். அவர்களில் நோயுற்றவர்களை சந்தித்து நலம்விசாரிப்பார்கள். தமது யூத அண்டை வீட்டாரின் அநேக தொல்லைகளை சகித்துக் கொள்வார்கள். யூதனின் ஜனாஸா வுக்காக அவர்கள் எழுந்து நிற்பார்கள்.

ஆம்! ஒரு முறை ஒரு யுதரின் ஜனாஸா (பிரேதம்) நபியவர்களின் அருகே கொண்டு செல்லப்பட்டது. அதற்காக நபியவர்கள் எழுந்து நின்றார்கள். “அது யூதனின் ஜனாஸாதானே” என்று அவர்களிடம் சொல்லப்பட்டது அதற்கு அவர்கள் “அதுவும் ஓர் உயிர் இல்லையா?!” என்று பதிலளித்தார்கள்.

அவர்கள் மதீனாவுக்கு வந்ததிலிருந்து யூதர்களுடன் பகைமையின்றி வாழ் வதற்கு மிகுந்த ஆர்வம் கொண்டவர்களாக இருந்தார்கள். இன்னும் சொல்வ தானால் அவர்கள் யூதர்களுடன் சமாதான உடன்படிக்கையை மேற்கொண் டார்கள். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் பிறமக்களுடன் அமைதியாக வாழ்வதற்கே ஆர்வம் காட்டியுள்ளார்கள் என்பதற்கு இந்த உடன்படிக்கை சான்றாகத் திகழ்ந்தது.

இஸ்லாமிய சாம்ராஜியத்தின் நிலப்பரப்பு பரந்து விரிந்தபோது அங்கே அரேபிய கிறிஸ்தவ கோத்திரங்கள் அதிக அளவில் இருந்தன. குறிப்பாக நஜ்ரானில் இருந்தன. அந்த மக்களுடனும் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் நல்ல முறையில் நடந்து கொண்டார்கள். மேலும் அவர்களுடன் பல உடன்படிக்கைகளையும் செய்து கொண்டார்கள். இதன் நோக்கம் இஸ்லாமிய ஆட்சியின் கீழ் அமைதியாக வாழ்வதற்கு உத்திரவாதத்தை அந்த கிறிஸ்தவர் களுக்கு அளிப்பது மட்டுமல்ல அவர்களுடைய மதஅனுஷ்டானங்களை நடைமுறைப்படுத்துவதற்கும் அவர்களுக்கு சுதந்திரம் அளிப்பதாகவும் இருந்தது. மேலும் இஸ்லாமிய ஆட்சியின் கீழ் அவர்கள் முழுச் சுதந்திரந்திரத்துடன் செயல்படுவதற்குப் பொறுப்பேற்பதாகவும் இருந்தது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நஜ்ரான்வாசிகளுடன் செய்து கொண்ட உடன்படிக்கையில் பின்வருமாறு கூறப்பட்டிருந்தது: “நஜ்ரான்வாசிகளுக்கும் அதன் எல்லையோரம் வாழும் மக்களுக்கும் அல்லாஹ்வின் பாதுகாப்பும், அல்லாஹ்வுடைய தூர் முஹம்மது நபியின் உத்திரவாதமும் உண்டு. இப்பாது காப்பு உத்திரவாதம் அவர்களுடைய உயிர்களுக்கும், உடமைகளுக்கும், அவர்களுடைய பூமிக்கும், சமைய வழிமுறைக்கும் உண்டு. ஊரில் இருப்பவர், வெளியூர் சென்றிருப்பவர் ஆகிய அனைவருக்கும் உண்டு....” மேலும் நஜ்ரான் தேசத்து கிறிஸ்தவர்களின் உரிமைகள் பாதுகாப்பும் அவர்களின் அமைதி வாழ்வும் போன்ற பல விஷயங்களும் இந்த உடன்படிக்கையில் கூறப்பட்டிருந்தன.

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் வெளியிட்ட மதீனத்து அரசு ஆவணக் குறிப்பில் கூறப்பட்டிருந்த இஸ்லாமிய ஆட்சியின் ஒழுங்குமுறை இஸ்லாமிய நாட்டில் வாழும் முஸ்லிமல்லாதவர்களை (முஸ்லிம்களைப் போல்) அந்நாட்டின் குடிமக்களாக வாழ்வதற்கு வழிவகை செய்கிறது. அந்த வகையில் முஸ்லிம்

களுக்கு இருப்பதைப் போன்ற உரிமைகளும் கடமைகளும் முஸ்லிமல்லா தோருக்கும் உண்டு என்றும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது.

நயவஞ்சகர்களுடன் நபி(ஸல்) அவர்கள் நடந்து கொண்ட விதம் என்ன வெனில், நயவஞ்சகர்களையும் அவர்களின் பெயர்களையும் நபியவர்கள் அறிந்திருந்தும், முஸ்லிம்களின் அணிகளிடையே தோல்வி மனப்பான்மையைப் பரப்புவதில்- முஸ்லிம்களிடையே பிளவை ஏற்படுத்துவதில் நயவஞ்சகர் களின் தீவிர முயற்சியையும் நபியவர்கள் நன்கு தெரிந்திருந்தும் அவர்களுடனான நல்ல தொடர்பைக் கைவிட்டதை நாம் பார்க்க முடியாது. மாறாக நபியவர்கள் அந்த நயவஞ்சகர்களுடன் இணைந்தே வாழ்ந்துள்ளார்கள். அவர்களுடன் அழகிய முறையிலேயே நடந்து கொண்டார்கள். அவர்கள் கூறும் கருத்துக் களைச் செவியேற்றுள்ளார்கள். அதுமட்டுமல்ல தமது அதிகாரத்தை அவர் களுக்கு எதிராகப் பயன்படுத்தும் ஆற்றல் இருந்தும் நபியவர்கள் அதற்கு முனையவில்லை. குடிமை உரிமைகளில் எதையும் அவர்களுக்குத் தடை செய்யவுமில்லை. முஸ்லிம்களைப் போன்றே அந்நயவஞ்சகர்களும் குடியுரி மைகளை முழுமையாக அனுபவித்து வந்தனர். சமுதாயப் பிரச்சனைகளில் தங்கள் கருத்தைத் தெரிவிப்பதற்கும் அவர்களுக்கு நபி(ஸல்)அவர்கள் அனுமதி வழங்கி வந்தார்கள். பைத்துல்மால் எனும் அரசு கருவூலத்திலிருந்து அவர்க ளுக்குரிய பங்கையும் அவர்களுக்குக் கொடுத்து வந்தார்கள்.

இவ்வாறாக நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் பிற மனிதர்களுடன் பாசத்து டனும் பெருந்தன்மை யுடனும் நடந்து கொண்டார்கள். வெறுப்போ குரோதமோ கொள்ளவில்லை. இன்னும் சொல்வ தென்றால் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தம்மைப் பின்பற்றக்கூடியவர்களையும் பிற மக்களுடன் மகிழ்வுடனும் நல்லி ணக்கத்துடனும் வாழும்படியே தமது சொல்லாலும் நடத்தையாலும் ஊக்கமளிப் பவர்களாய் இருந்தார்கள்.

### முஸ்லிம்கள் அனைவரும் சகோதரர்களே!

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் பல சந்தர்ப்பங்களில் முஸ்லிம்களுக்கி டையே சகேதாரத்துவம் நிலைத்திருப்பதன் முக்கியத்துவத்தையும் அவர்களுக் கிடையே நல்லுறவும் பிணைப்பும் இருப்பதன் அவசியத்தையும் வலியுறுத்திக் கூறியுள்ளார்கள். பகைமை, குரோதம், பிணக்கு, கருத்து வேறுபாடு, பிரிவு ஆகியவற்றை விட்டும் அவர்களைத் தடுத்துள்ளார்கள். மேலும் முஸ்லிம் களுக்கு மத்தியில் பிரிவினையையும், குரோதத்தையும் வேற்றுமையையும் ஏற்படுத்தக்கூடிய எல்லாவிதமான தீய குணங்களைக் குறித்தும் எச்சரித்துள் ளார்கள். அதுபோலவே முஸ்லிம்களின் தேவையை நிறைவேற்றுதல், அவர்

களுக்கு உதவி செய்தல், அவர்களுக்கு நலம் நாடுதல், எல்லா நிலையிலும் அவர்களுக்கு உதவுதல் குறித்தும் ஆர்வமூட்டியுள்ளார்கள்.

நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் சொல், செயல் மற்றும் போதனைகளை நாம் சிந்திந்துப் பார்க்கும்போது முஸ்லிம்களுக்கு மத்தியில் அன்பையும் பாசத்தையும் பரப்பும்படி விடுக்கப்பட்டுள்ள ஒரு பொதுவான அழைப்பை அவற்றில் காணமுடிகின்றது. இதோ! இறைநம்பிக்கையின் அடிப்படை யிலான நேசம் சொர்க்கம் செல்வதற்குரிய வழியாகும் என்று நபியவர்கள் எப்படி விலியுறுத்துகிறார்கள் என்று பாருங்கள்! "நீங்கள் இறைநம்பிக்கை கொள்ளாத வரை சொர்க்கம் சொல்ல மாட்டீர்கள். நீங்கள் ஒருவரையொருவர் நேசிக்காத வரை இறைநம்பிக்கை கொண்டவர்களாக ஆகமாட்டீர்கள். ஒன்றை நான் உங்களுக்கு சொல்லித் தரட்டுமா; அதனை நீங்கள் செய்தால் ஒருவர் மீது ஓருவர் நேசம் கொள்வீர்கள்? ஆம்! உங்களுக்கிடையே ஸலாம் கூறுவதைப் பரப்புங்கள்" என்று நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (பார்க்க: முஸ்லிம் 54)

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் முஸ்லிம்களிடையே அன்பை விதைப் பதற்கும், பாசத்தையும் கருணையையையும் பரப்புவதற்கும் எப்போதும் ஆர்வ முடையவர்களாகவே இருந்தார்கள். மேலும் மனிதர்களின் உள்ளங்களில் நேசபாசத்தின் அடிப்படைகளைப் பதியச் செய்வதற்கும் மிகுந்த ஆவல் உள்ள வர்களாகத் திகழ்ந்துள்ளார்கள். இதோ நபியவர்கள் நமக்கு அறிவித்திருப் பதைப் பாருங்கள்! அல்லாஹ்வுக்காகவும் அவனது தீனுக்காகவும் முஸ்லிம் களின் மீது நமது நேசம் அதிகரிக்க அதிகரிக்க அல்லாஹ்வின் நேசத்தை நாம் வென்றெடுக்கலாம். அவ்வாறு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கூறிய பொன்மொழி இதுதான்: "இரண்டு மனிதர்கள் ஒருவரையொருவர் அல்லாஹ் வுக்காக நேசிக்கும்போது அவர்களில் யார் மற்றவரை அதிகம் நேசிக்கின்றாரோ அவரே அல்லாஹ்விடத்தில் அதிகப் பிரியமானவர்."

அதுமட்டுமல்ல! இன்னும் சொல்லப்போனால் இறைநம்பிக்கை என்பது-நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தெளிவுபடுத்துவதுபோல- பிறரை நேசிப்பதையும் பிறருக்கு நல்லதை விரும்புவதையும் உள்ளடக்கியதாகும். "தனக்கு விரும்பு வதையே தன் சகோதரனுக்கும் விரும்பதாவரை உங்களில் யாரும் இறை நம்பிக்கை கொண்டவராக முடியாது" என்று அவர்கள் கூறியுள்ளார்கள். மேலும் "ஒருவருக்கொருவர் அன்பளிச் செய்யுங்கள்.(அதனால்) நீங்கள் ஒருவரை யொருவர் நேசிப்பீர்கள்." என்றும் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள். உண்மையில் நபிகள் நாயகம்

(ஸல்) அவர்கள் எத்தகைய வழிமுறைகளை நமக்குக் கற்றுத் தருகிறார்கள் என்றால் அந்த வழிமுறைகள் நம் இதயங்களை இளகச் செய்து அவற்றை மென்மை யானவையாகவும் பாச உணர்ச்சிகளை முழுமையாகப் பெறுவதற்கு ஏற்றவையாகவும் மாற்றுகின்றன.

**நபிகள் நாயகத்தின் உடலமைப்பு**

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் அதிக உயரமாகவோ அதிகக் குள்ளமாகவோ இன்றி நடுத்தர வளர்த்தி உடையவர்களாக இருந்தார்கள். அகன்ற தோள் புஜங்களும், விரிந்த மார்பும், பொருத்தமான உறுப்புக்களும் உடையவர்கள். மனிதர்களிலேயே அழகிய முகமுடைய அவர்கள் செந்நிரம் கலந்த வெள்ளை நிறத்தில் இருப்பார்கள். மேலும் வட்ட முகமும், சுர்மா இடப்பட்டது போன்ற கண்களும், மெல்லிய மூக்கும், அழகான வாயும், அடர்ந்த தாடியும் கொண் டவர்கள். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் நறுமணம் கமழும் மென்மையான மேனியை உடையவர்களாவர்.

நபிகள் நாயகம்(ஸல்) அவர்களைப் பற்றி அனஸ்(ரலி) கூறும்போது, "நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் வாடையை விட நறுமணமுள்ள கஸ்தூரியையோ அல்லது வேறு எந்த வாசனைப் பொருளையோ நான் நுகர்ந்தது கிடையாது. மேலும் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களை விட மென்மையான பட்டாடை யையோ வேறு எதையுமோ நான் ஸ்பரிசித்தது கிடையாது" எனக் கூறினார்கள். (முஸ்லிம்-2330)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மலர்ந்த முகத்துடனும் எப்பொழுதும் புன்னகையாகவுமே இருப்பார்கள். அழகிய குரலுடைய அவர்கள் குறைவாகப் பேசுபவர்களாக இருந்தார்கள். அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது: "நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் மனிதர்களிலேயே மிக அழகானவர்களாகவும், வாரி வழங்குபவர்களாகவும், வீரமிக்கவர்களாகவும் இருந்தார்கள்." (முஸ்லிம்-2307)

**நபிகளாரின் நற்குணங்கள்**

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் மக்கள் அனைவரினும் வீரமிக்கவர்களாகத் திகழ்ந்தார்கள். அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்: "(போர்க்களத்தில்) எதிரிப் படையினரும் நாங்களும் நேருக்கு நேர் மோதி, போர் உக்கிரமமாக நடை பெறும்போது நாங்கள் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களுக்கு அருகில் நின்று போரிடுவதன் மூலம் எங்களை தற்காத்துக் கொள்வோம்." (அஹ்மத்-1276)

நபியவர்கள் மக்கள் அனைவரினும் பெரும் கொடைவள்ளலாகத் திகழ்ந் தார்கள். அவர்களிடம் யாரும் எதையும் கேட்டு அவர்கள் இல்லையெனக் கூறிய

தில்லை. அவர்கள் மக்களில் பெரும் சகிப்புத் தன்மை உடையவர்களாக இருந்தார்கள். அவர்கள் தமக்காக யாரையும் கோபப்பட்டதும் கிடையாது. தமக்காக யாரையும் பழிவாங்கியதும் கிடையாது. ஆனால் அல்லாஹ்வினால் புனிதமாக்கப்பட்டவற்றிற்கு பங்கம் விளைவிக்கப்படும்போது மட்டும் அல்லாஹ் வுக்காக என பழிவாங்குபவர்களாக இருந்துள்ளார்கள்.

உரிமைகள் விஷயத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் தங்களைச் சேர்ந்தவர், அந்நியர் பலமிக்கவர், பலவீனர் அனைவரும் சமமே. மேலும் "இறையச்சத்தைக் கொண்டே தவிர ஒருவர் இன்னொரு வரை விடச் சிறந்து விளங்க முடியாது. மக்கள் அனைவரும் சமமே! முன் சென்ற சமுதாயம் அழிந்து போனதற்குக் காரணம் அவர்களில் செல்வாக்குமிக்கவன் திருடினால் அவனை விட்டுவிடுவார்கள். பலவீனன் திருடினால் அவனுக்குத் தண்டனை நிறைவேற்றுவார்கள்" என்பதைத் திட்டவட்டமாகக் கூறினார்கள். மேலும் "அல்லாஹ்வின் மீது ஆணையாக முஹம்மதின் மகள் ஃபாத்திமா திருடினாலும் அவரது கையையும் வெட்டியே தீருவேன்" என்றும் கூறினார்கள்.

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் எந்த உணவையும் குறை கூறியதில்லை. விரும்பினால் உண்பார்கள். விரும்பமில்லையெனில் விட்டுவிடுவார்கள். நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் குடும்பத்தினர் அவர்களின் வீட்டில் அடுப்பு எரிக்காம லேயே ஓரிரு மாதங்களைக் கழித்திருக்கின்றனர். பேரீத்தம் பழமும் தண்ணீரும் தான். அவர்களின் உணவாக இருந்திருக்கிறது. நபிகள் நாயகம் அவர்கள் பசியின் காரணமாக தமது வயிற்றில் ஒன்றிரண்டு கல்லைக் கட்டிக் கொள்வார்கள். அறுந்த செருப்பையும் கிழிந்த ஆடையையும் தாமே தைத்துக் கொள்வார்கள். வீட்டு வேலையில் தம் மனைவியருக்கு உதவுவார்கள். நோயாளிகளை நோய்விசாரிக்கச் செல்வார்கள்.

நபிகள் நாயகம்(ஸல்) மக்களில் மிக்க பணிவானவர்களாக இருந்தார்கள். யார் விருந்திற்கு அழைத்தாலும் செல்வந்தர், ஏழை, செல்வாக்குள்ளவர், செல்வாக்கில்லாதவர் என்கிற பாகுபாடின்றி அதனை ஏற்றுக் கொள்வார்கள். ஏழைகளை நேசிப்பார்கள். அவர்களின் ஜனாஸாவில் கலந்து கொள்வார்கள். ஏழை நோயாளிகளையும் நோய் விசாரிக்கச் செல்வார்கள். ஏழை என்பதற்காக யாரையும் இழிவாகக் கருதமாட்டார்கள். எந்த அரசனுக்கும் அவனது அதிகாரத் திற்காகப் பயப்பட மாட்டார்கள். குதிரை, ஒட்டகம், கழுதை, கோவேறு கழுதை என எதிலும் பயணம் செய்வார்கள்.

நபிகள் நாயகம்(ஸல்)அவர்களை எத்தனை எத்தனை துன்பங்கள், துயரங்கள் வாட்டினாலும் மக்களிலேயே அதிகம் புன்னகையும் மலர்ந்த முகமும் உடைய

வர்களாக இருப்பார்கள். அவர்கள் நறுமணத்தை விரும்புவார்கள். அருவறுக் கத்தக்க வாடையை வெறுப்பார்கள். அல்லாஹ் அவர்களுக்கு நற்குணங் களையும் நற்செயல்களையும் ஒருசேரக் கொடுத்திருந்தான். முன்னோர் பின்னோர் யாருக்குமே வழங்கப்படாத கல்வி ஞானத்தை அவர்களுக்கு வழங்கி யிருந்தான். இத்தனைக்கும் அவர்கள் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள்! மனிதர் களில் யாரும் அவர்களுக்கு ஆசிரியராக இருந்தது கிடையாது. இந்தக் குர்ஆனை அல்லாஹ்விடமிருந்தே கொண்டு வந்தார்கள். இது பற்றி அல்லாஹ் கூறும்போது, "மனிதர்கள் மற்றும் ஜின்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து இந்தக் குர்ஆனைப் போன்ற ஒன்றைக் கொண்டுவர முயன்றாலும் இதைப் போன்று அவர்களால் கொண்டு வர முடியாது. அவர்கள் ஒருவர் மற்றவருக்கு உதவி யாளராக இருந்தாலும் சரியே!"(17:88) என்று கூறுகிறான்.

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் சிறு வயது முதல் எழுதப் படிக்கத் தெரியாத வர்களாகவே வளர்ந்து வந்ததால் பொய்யுரைப்பவர்கள் "இவர் வேதத்தை பிறரிட மிருந்து எழுதிக் கொண்டார் அல்லது கற்றுக் கொண்டார் அல்லது முன்னோர் களின் புத்தகங்களிலிருந்து படித்துத் தெரிந்து கொண்டார்" என்று அவர்களைப் பற்றி, பொய்யுரைக்க வழியில்லாமல் போய்விட்டது!

**நபிகள் நாயகத்தின் அற்புதங்கள்**

நபிகள் நாயகம்(ஸல்) அவர்களுக்கு வழங்கப்பட்ட மிகப் பெரும் அற்புதம் திருக்குர்ஆனாகும். இது மறுமை நாள் வரை நிலைத்து நிற்கும் அற்புதமாகும். இது இலக்கியவாதிகளை வென்றது. பண்டிதர்களை திகைக்க வைத்தது. இதுபோன்ற பத்து அத்தியாயங்களை அல்லது ஒரு அத்தியாயத்தை ஏன் ஒரு வசனத்தையேனும் கொண்டு வாருங்களென்று அல்லாஹ் திருக்குர்ஆன் மூலம் எல்லோருக்கும் சவால் விட்டான். திண்ணமாக திருக்குர்ஆன் ஓர் அற்புதம் தான் என்பதற்கு இணைவைப்பவர்களே சான்று பகர்ந்தார்கள்.

ஒரு நாள் இணைவைப்பவர்கள் தங்களுக்கோர் அற்புதம் காட்டும்படி நபிகள் நாயகம்(ஸல்)அவர்களிடம் கேட்டனர். அதற்கவர்கள் சந்திரன் பிளப்பதைக் காண்பித் தார்கள். சந்திரன் இரு கூறாகப் பிளந்தது. பல முறை அவர்களின் விரல்களிலிருந்து நீர் பீறிட்டிருக்கிறது. அவர்களின் உள்ளங்கையிலிருந்த கல் இறைவனைத் துதி (தஸ்பீஹ்) செய்தது. பின்பு அதை அபூபக்கர், உமர், உஸ்மான்(ரலி) ஆகியோரின் கையில் வைத்தார்கள். அப்போதும் அது தஸ்பீஹ் செய்தது. நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது உணவு தஸ்பீஹ் செய்ததை மக்கள் கேட்டனர். கற்களும் மரங்களும் அவர் களுக்கு ஸலாம் கூறியிருக்கின்றன.

நபிகள் நாயகத்தை விஷம் கொடுத்துக் கொன்றுவிட வேண்டுமென்பதற்காக ஒரு யூதப் பெண் விஷம் கலந்த ஆட்டிறைச்சியை அன்பளிப்பாக வழங்கியபோது அது அவர்களிடம் பேசியது. ஒரு கிராமவாசி தனக்கோர் அற்புதம் காட்டும்படி அவர்களிடம் வேண்டியபோது நபியவர்கள் ஒரு மரத்தைத் தம்மிடம் வரும்படி ஏவினார்கள். அது வந்தது. பிறகு அதைத் திரும்பிச் செல்லுமாறு பணித்ததும் அதன் இடத்திற்கே அது திரும்பிச் சென்றது. பாலில்லாத ஒரு ஆட்டின் மடியை அவர்கள் தடவியதும் அதில் பால் சுரந்தது. அதைக் கறந்து தாமும் அருந்தி அபூபக்கருக்கும் அருந்தக் கொடுத்தார்கள்.

அலீ(ரலி) அவர்களுக்கு கண்வலி ஏற்பட்டபோது நபியவர்கள் அவர்களின் கண்களில் உமிழ்ந்ததும் அவர்கள் குணமடைந்தார்கள். ஒரு நபித்தோழரின் கால் முறிந்தபோது அதை நபியவர்கள் தமது கையால் தடவியதும் அது குண மடைந்தது. அனஸ் (ரலி) அவர் களுக்காக நீண்ட ஆயுளுக்கும் அதிகமான செல்வத்துக்கும் குழந்தைப்பேற்றுக்கும் துஆ செய்தார்கள். அவற்றில் அல்லாஹ் அவர்களுக்கு பரகத் செய்யும் படியும் வேண்டினார்கள். அதன்படி அவர்களுக்கு 120 குழந்தைகள் பிறந்தன. அவர்களின் பேரீத்த மரம் வருடத்தில் இரு முறை காய்த்தன. சாதரணமாக ஒரு மரம் ஆண்டுக்கு ஒரு முறைதான் காய்க்கும். அவர்கள் 120 ஆண்டுகள் வாழ்ந்தனர்.

நபிகள் நாயகம் (ஸல்) மிம்பரில் உரையாற்றிக் கொண்டிருக்கும்போது அவர்களிடம் பஞ்சம் குறித்து முறையிடப்பட்டது. அவர்கள் அல்லாஹ்விடம் துஆ செய்தார்கள். வானில் மேகமே இல்லாதிருந்தும் உடனே மலைகள் போன்று மேகங்கள் உருவாகி மறு ஜும்ஆ வரை கடும் மழை பெய்தது. மீண்டும் அவர் களிடம் கடும் மழை பற்றி முறையிடப்பட்டது. உடனே அல்லாஹ்விடம் துஆச் செய்தார்கள். மழை நின்று மக்கள் வெயிலில் நடந்து சென்றனர். நபியவர்கள் அகழ் தோண்டும் பணியில் கலந்து கொண்ட 1000 பேருக்கு சுமார் இரண்டரை கிலோ கோதுமையையும் ஒரு ஆட்டையும் கொண்டு உணவளித்தார்கள். அவர்கள் அனைவரும் வயிறு நிரம்பி திரும்பிச் சென்றனர். உணவு குறையாமல் அப்படியே இருந்தது.

இதுபோன்றே பஷீர் பின் ஸஅத் (ரலி) யின் மகள் தனது தந்தைக்கும் மாமா வுக்கும் கொண்டு வந்த சிறிது பேரீத்தம் பழத்தை நபிகள் நாயகம்(ஸல்) அகழ்ப் போரில் கலந்து கொண்ட அனைவருக்கும் உண்ணக் கொடுத்தார்கள். மேலும் அபூஹுரைரா(ரலி) அவர்களின் பையிலிருந்த சிறிது உணவை படையினர் அனை வருக்கும் வயிறார உண்ணக் கொடுத்தார்கள். நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள், தங்களைக் கொல்வதற்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்த நூறு குறைஷிகளின்

கண்களில் மண்ணைத் தூவிவிட்டு சென்றார்கள். அவர்களால் நபியைப் பார்க்க முடியவில்லை. சுராக்கா பின் மாலிக் நபிகள் நாயகத்தைக் கொல்வதற்காக அவர்களைப் பின் தொடர்ந்தார். அவர் நெருங்கி வந்தபோது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவருக் கெதிராகப் பிரார்த்தனை செய்தார்கள். அவருடைய குதிரையின் கால்கள் மண்ணில் புகுந்தன.

**நபிகள் நாயகத்தின் வரலாற்றிலிருந்து சில முக்கிய நிகழ்வுகளும் படிப்பினைகளும்**

**நபிகள் நாயகத்தின் நகைச்சுவை**

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தமது தோழர்களிடம் நகைச்சுவையாகப் பேசுவார்கள்; தமது மனைவியரிடம் விளையாடுவார்கள். தமது நேரத்தில் சிறுவர்களுக்கென ஒரு பகுதியை ஒதுக்கி அவர்கள் விஷயத்தில் அக்கரை செலுத்துவார்கள். அவர்களால் தாங்க இயலுமான காரியங்களையே அவர்கள் மீது சுமத்துவார்கள். அவர்கள் புரிந்துகொள்ளக்கூடிய வகையில் அவர்களிடம் உரையாடுவார்கள். தமது பணியாள் அனஸ் பின் மாலிக்(ரலி) யிடமும் வேடிக் கையாகப் பேசுவார்கள். சில நேரங்களில் “இரு காதுகள் உடையவரே!” என்று அவரை அழைப்பார்கள். (பார்க்க: திர்மிதி-1992).

ஒரு மனிதர் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களிடம் வந்து, “எனக்கு ஒரு வாகனம் தாருங்கள்” என்று கேட்டார். அதற்கவர்கள், “உமக்கு ஒட்டகக் குட்டி ஒன்று தருவோம்” என்று (வேடிக்கையாகக்) கூறினார்கள். அம்மனிதர் “ஒட்டகத்தின் குட்டியை வைத்து நான் என்ன செய்ய முடியும்?” என்று கேட்டார். அப்போது நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள், “ஒவ்வொரு ஒட்டகமும் இன்னொரு ஒட்டகத்தின் குட்டிதானே!” என்றார்கள். (அபூதாவூத்-4998)

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தம் தோழர்களின் முகங்களைப் பார்த்து எப்போதும் மகிழ்ச்சியுடன் புன்னகை பூப்பார்கள். நபிகள் நாயகத்திடமிருந்து அவர்கள் நல்ல வார்த்தையைத்தான் செவியேற்பார்கள். ஜரீர்(ரலி) அறிவிக் கிறார்கள்: “நான் இஸ்லாத்தை ஏற்ற நாளிலிருந்து நபிகள் நாயகத்தை நான் பார்ப்பதை விட்டும் எந்த நேரத்திலும் அவர்கள் என்னைத் தடுத்ததில்லை. புன்னகை யின்றி அவர்கள் என்னைப் பார்த்ததில்லை. “என்னால் குதிரையில் நிலையாக இருக்க முடிவில்லையே” என நான் அவர்களிடம் முறையிட்டபோது, “இறைவா! இவரை உறுதிப்படுத்து; இவரை நேர்வழி பெற்றவராகவும் நேர்வழி காட்டுபவராகவும் ஆக்கு” என்று பிரார்த்தித்தவாறு என் நெஞ்சில் கையால் தட்டிக் கொடுத்தார்கள். அதன் பிறகு நான் குதிரையிலிருந்து விழுந்தது கிடையாது.” (பார்க்க்: புகாரி (3036) முஸ்லிம் (2475)

அதுபோல நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தமது உறவினர்களுடனும் வேடிக்கையாகப் பேசுவார்கள். ஒரு முறை தமது மகள் ∴பாத்திமாவுடைய வீட்டுக்கு வந்தபோது அங்கு அவரது கணவர் அலீ(ரலி)வீட்டில் இல்லாததைக் கண்டு "எங்கே அவர்?" என்று கேட்டார்கள். அதற்கு ∴பாத்திமா(ரலி), "எங்கள் இருவருக்குமிடையில் தகராறு ஏற்பட்டதனால் அவர் என்னிடம் கோபித்துக் கொண்டு சென்று விட்டார்" என்று கூறினார். பிறகு அவரைத் தேடி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், பள்ளி வாசலுக்கு வந்தபோது அங்கு அவர் படுத்திருந்தார். அவரது மேலாடை தரையில் விழுந்து கிடந்தது. அவரது உடலில் மண் படிந்திருந்தது. நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் அந்த மண்ணணைத் துடைத் தவாறு "அபுத் துறாப்- மண்ணின் தந்தையே எழுந்திரும்! மண்ணின் தந்தையே எழுந்திரும்!" என்று கூறினார்கள். (பார்க்க: புகாரி-3703)

**சிறுவர்களுடன் நடந்து கொண்ட விதம்**

நபிகள் நாயகம்(ஸல்) சிறுவர்களுடனும் அதிக அளவு நற்குணத்துடன் நடந்து கொண்டார்கள். தமது மனைவி ஆயிஷா(ரலி) உடன் ஓட்டப்பந்தயத்தில் ஈடுபட்டி ருக்கிறார்கள். அவர் தமது தோழிகளுடன் விளையாடுவதையும் அனுமதித் துள்ளார்கள். ஆயிஷா(ரலி) அறிவிப்பதாவது: "நான் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களுடன் இருக்கும்போது பொம்மைகளை வைத்து விளையாடிக் கொண் டிருப்பேன். என்னுடன் விளையாடுவதற்கு சில தோழிகளும் இருந்தனர். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் (வீட்டுக்குள்) நுழையும்போது அவர்கள் ஓடி ஒளிந்து கொள்வர். நபியவர்கள் அவர்களை (என்னுடன் விளையாட) திருப்பி அனுப்பு வார்கள். அதன் பின் அவர்கள் என்னோடு விளையாடுவார்கள்." (புகாரி-6130)

அதுபோல நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் சிறுவர்கள் விஷயத்தில் அக்கரை செலுத்துவார்கள். அவர்களுடன் விளையாடுவார்கள். மேலும் அவர்களுடன் அன்போடு நடந்து கொள்வார்கள். ஷத்தாத் பின் ஹாத்(ரலி) அறிவிப்பதாவது: "நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ம∴க்ரிப் அல்லது இஷா தொழுகையின்போது (தமது பேரக்குழந்தைகளில்) ஹஸன் அல்லது ஹுஸைனைத் தூக்கிக்கொண்டு எங்களிடம் வந்தார்கள். தொழுகைக்காக முன்னால் சென்று அக்குழந்தையை வைத்துவிட்டு அல்லாஹு அக்பர் என்று தக்பீர் சொல்லி தொழுகை நடத்தி னார்கள். நீண்ட நேரம் ஸஜ்தா செய்தார்கள். நான் என் தலையை உயர்த்திப் பார்த்தபோது நபியவர்களின் முதுகில் அக்குழந்தை இருந்தது. அவர்கள் ஸஜ்தாவில் இருந்தார்கள். பிறகு நான் ஸஜ்தாவுக்குத் திரும்பி விட்டேன். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும், "அல்லாஹ்வின் தூதரே! தாங்களுக்கு ஏதும் நிகழ்ந்துவிட்டதோ அல்லது வஹி ஏதும் தாங்களுக்கு

அருளப்படுகின்றதோ என்று நாங்கள் எண்ணும் அளவுக்கு தாங்கள் நீண்ட நேரம் ஸஜ்தா செய்தீர்களே" என்று மக்கள் கேட்டனர். அதற்கவர்கள் "அதெல்லாம் ஒன்றும் நிகழவில்லை. ஆயினும் என் பேரன் என் முதுகில் அமர்ந்திருந்தான்; அவன் தனது தேவையை நிறைவு செய்யும் வரை நான் அவசரப்பட விரும்ப வில்லை" என்றார்கள். (பார்க்க: நஸயீ-1129)

அனஸ்(ரலி) அறிவிக்கிறார்கள்: "நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் மனிதர் களிலேயே அழகிய குணம் உடையவர்களாகத் திகழ்ந்தார்கள். 'அபு உமைரே! அந்தச் சின்னப் பறவை என்ன ஆனது?' என என் சின்னஞ் சிறிய சகோதரனிடம் கேட்பார்கள்."(பார்க்க: புகாரி-6203) அச்சிறுவன் அந்தப் பறவையுடன் விளையாடிக் கொண்டிருப்பான். அது இறந்து விட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில் நபியவர்கள் அவ்வாறு கேட்டது அச்சிறுவனுக்கு ஆறுதலாக இருந்தது.

**மனைவியிடம் நடந்து கொண்ட விதம்**

நபியவர்கள் தமது மனைவியிடம் நடந்து கொண்ட விதத்தைப் பொறுத்தவரை அதில் அனைத்து நற்குணங்களும் அமைந்திருந்தன. நபியவர்கள் பணிவு மிக்க வர்களாக இருந்தார்கள். தமது மனைவியின் தேவையை நிறைவேற்றுவதற்கு எப்போதும் தயாராக இருப்பார்கள். மனிதாப முறையில் ஒரு பெண்ணுக்கு உள்ள கௌரவத்தையும் தாய், மனைவி, மகள் எனும் முறையில் உள்ள அந்தஸ்தையும் மதிப்பார்கள்.

ஒரு மனிதர் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களிடம், 'நான் நல்ல முறையில் நடந்து கொள்வதற்கு மனிதர்களில் மிகத் தகுதியானவர் யார்?' என்று கேட்ட போது "உனது தாய், பிறகும் உனது தாய், பிறகும் உனது தாய், அதன் பிறகு தான் உனது தந்தை" என்று கூறினார்கள். (பார்க்க: புகாரி-5971, முஸ்லிம்-2548)

"ஒருவருக்கு பெற்றோரில் ஒருவரோ இருவருமோ இருந்து அவர்களிடம் அவர் நல்ல முறையில் நடக்காமல் மரணித்து விட்டால் அவர் நரகம் செல்வார்; அல்லாஹ் அவரை தனது அருளை விட்டும் தூரமாக்கிவிடுவான்" என்றும் கூறியுள்ளார்கள். (பார்க்க: அஹ்மத்-18254)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது மனைவி அருந்திய பாத்திரத்தை வாங்கி அவர்கள் வாய் வைத்த இடத்தில் வாய் வைத்து அருந்துவார்கள். "தன் மனைவியிடத்தில் சிறந்தவரே உங்களில் சிறந்தவர். நான் என் மனைவியிடத்தில் சிறந்தவனாவேன்!" என பெருமையுடன் கூறுவார்கள். (பார்க்க: திர்மிதி-3895, இப்னுமாஜா-1977)

**நபிகளாரின் அன்பும் கருணையும்**

கருணை பற்றி நபிகள் நாயகம் (ஸல்) இவ்வாறு கூறினார்கள். “கருணை காட்டுபவர்களுக்கு அல்லாஹ் கருணை காட்டுகிறான். பூமியிலுள்ளவர்களுக்கு கருணை காட்டுங்கள்; வானிலுள்ளவன் உங்களுக்கு கருணை காட்டுவான்.” (பார்க்க: அபூதாவூத்-4941, திர்மிதி-1924) நபிகள் நாயகத்திடம் இம்மகத்தான பண்பு மிக அதிக அளவில் இருந்தது. சிறுவர், பெரியவர், உறவினர், அந்நியர் என அனைவருடனும் அவர்கள் நடந்து கொண்ட முறைகளில் இது மிகத் தெளிவாகவே வெளிப்பட்டிருக்கிறது. அவர்களின் அன்பு மற்றும் கருணையின் வெளிப்பாட்டுக்கு இதோ ஒரு சான்று!

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் குழந்தை அழும் சப்தத்தைக் கேட்டால் தம்முடைய தொழுகையை நீட்டிக் கொண்டிருக்காமல் சுருக்கி விடுவார்கள். “நான் தொழுகையை நீட்டித் தொழ வைக்க வேண்டும் என்று நினைத்து தொழுகையில் நிற்கும்போது குழந்தை அழும் சப்தத்தைக் கேட்பேன். உடனே அதன் தாயாருக்கு நான் சிரமம் கொடுப்பதை விரும்பாமல் எனது தொழுகையை சுருக்கிவிடுவேன்” என்று நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கூறியதாக அபூகதாதா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (பார்க்க: புகாரி-707, முஸ்லிம்-470)

தம் சமுதாயத்தின் மீது அவர்கள் கொண்ட அன்புக்கும் அவர்கள் இறைமார்க் கத்தில் இணைய வேண்டும் என்ற அவர்களின் பேராவலுக்கும் மற்றுமொரு சான்று: நபிகளாருக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்த ஒரு யூதச் சிறுவன் நோய்வாய்ப்பட்டான். நபிகள் நாயகம்(ஸல்) நலம் விசாரிப்பதற்காக அவனிடம் வந்தார்கள். அவனது தலைப் பக்கம் அமர்ந்து “நீ இஸ்லாத்தை ஏற்றுக்கொள்” எனக் கூறினார்கள். அச்சிறுவனோ தனது தலைமாட்டில் நின்ற தன் தந்தையை ஏறிட்டுப் பார்த்தான். ‘அபுல்காஸிமுக்கு (நபிகளாரின் புனைப் பெயர் இது.) நீ கட்டுப்படு’ என்று அவனது தந்தை கூறினார். உடனே அச்சிறுவன் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டான். பிறகு சிறிது நேரத்தில் அவன் இறந்து விட்டான். “இவனை நரகத்திலிருந்து காப்பாற்றிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்” என்று கூறிய வாறு நபிகள் நாயகம் அங்கிருந்து வெளியேறினார்கள். (பார்க்க: புகாரி-1356)

**நபிகளாரின் பொறுமை**

நபிகள் நாயகத்தின் பொறுமையைப் பற்றி கூறுவது என்றால் அவர்களின் முழு வாழ்வும் பொறுமையும் மற்றவர்களையும் மிஞ்சும் அளவிலான நிலை குலையாமையும் அறவழிப் போராட்டமும் தான் நிறைந்துள்ளது. திருக்குர் ஆனின் முதல் வசனம் அவர்களுக்கு அருளப்பட்டதிலிருந்து அவர்களது வாழ்வின் கடைசி நிமிடம் வரை நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் நிலைகுலை யாமல் பொறுமையுடன் தொடர்ந்து பணியாற்றிக் கொண்டிருந்தர்கள்.

தாங்கள் மேற்கொண்ட இந்தப் பாதையில் சந்திக்க நேரும் இயல்பான சூழ்நிலைகளை, துன்பந்துயரங்களை முதன் முதலாக தாம் இறைத்தூதராக அனுப்பப்பட்ட அந்த நிமிடத்திலிருந்தே அறிந்து கொண்டார்கள். இன்னும் சொல்வதானால் முதன் முறையாக அவர்கள் வானவரை சந்தித்த பிறகு அவர்களை அவர்களின் அன்பு மனைவி கதீஜா(ரலி) வரகா பின் நவ்ஃபல் என்பாரிடம் அழைத்துச் சென்றபோதே ரிந்துகொண்டார்கள். அப்போது வரகா நபிகள் நாயகம்(ஸல்) அவர்களிடம் "உம்முடைய மக்கள் உம்மை இவ்வூரை விட்டும் வெளி யேற்றும்போது நான் உயிருடன் இருக்க வேண்டுமே!" என்று கூறினார். அதற்கு நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் "இவ்வூரை விட்டும் என்னை வெளியேற்றுவார்களா?" என்று வியப்புடன் கேட்டார்கள். அதற்கு அவர், "ஆம்! ஏனெனில் (உமக்கு முன்) நீர் கொண்டு வந்த செய்தியைப் போன்றதைக் கொண்டு வந்தவரும் எதிர்க்கப்படாமல் இல்லை" என்றார். ஆக நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஆரம்பத்திலிருந்தே துன்பங்களையும், சிரமங்களையும், எதிர்ப்புகளையும் சூழ்ச்சிகளையும் தாங்கிக்கொள்வதற்கு தம்மை தயார்படுத்திக் கொண்டார்கள்.

இதோ! நபிகள் நாயகத்தின் பொறுமை பளிச்சிட்ட வரலாற்று நிகழ்ச்சிகளில் சில: நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் மக்காவில் இஸ்லாத்தின் பக்கம் மக்களை அழைத்துக் கொண்டிருந்தபோது தொடர்ந்து கேலிக்கும் கிண்டலுக்கும் ஆளானார்கள். மேலும் மக்களிடமிருந்து ஏன், அவர்களது குடும்பத்தைச் சேர்ந்தவர்களிடமிருந்தும் அவர்களது உறவினர்களிடமிருந்தும் உடல் ரீதியிலான துன்பங்களும் அவர்களுக்கு ஏற்பட்டன. இதன் மூலம் தம்முடைய இறைவனின் தூதுச் செய்தியை மக்களுக்கு எடுத்துச் சொல்வதை விட்டும் நபியவர்களைத் தடுப்பதற்கு அவர்கள் முயற்சி செய்தார்கள். அவற்றில் ஒன்று ஸஹீஹுல் புகாரியில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

அதாவது 'நபிகள் நாயகம்(ஸல்) அவர்களிடம் இணைவைப்போர் நடந்து கெண்ட மிக மோசமான நடவடிக்கை எது?' என்று அப்துல்லாஹ் இப்னு அம்ரிப்னுல் ஆஸ் (ரலி) அவர்களிடம் உர்வா இப்னு சுபைர் என்பார் கேட்டார். அதற்கு அவர்கள் கூறியதாவது: ஒரு முறை கஅபாவின் அறையில் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருந்தபோது அவர்களின் கழுத்தில் உக்பா இப்னு அபீமுயீத் என்பவன் ஒரு துண்டுத் துணியைப் போட்டு கடுமையாக இறுக்கினான். உடனே அபுபக்கர்(ரலி)அவர்கள் அங்கு வந்து அவனது தோளைப் பிடித்து தள்ளி நபியவர்களை அவனிடமிருந்து காப்பாற்றினார்கள். மேலும் "என்னுடைய இறைவன் அல்லாஹ் தான் என்று கூறியதற்காக ஒரு மனிதரை கொல்லப் போகிறீர்களா?" என்று கேட்டார்கள். (பார்க்க: புகாரி 3678)

மற்றொரு நாள் நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் கஅபா ஆலயத்தில் தொழுது கொண்டிருந்தபோது அபூஜஹ்லும் அவனுடைய ஆட்களும் அங்கு அமர்ந்து இருந்தனர். அவர்களில் ஒருவன் மற்றவனிடம் "இன்ன குடும்பத்தாரின் ஒட்டகக் குடலைக் கொண்டு வந்து முஹம்மது ஸுஜூது செய்யும்போது அவரது முதுகில் போடுவதற்கு உங்களில் யார் தயார்?" என்று கேட்டான். அப்போது அக்கூட் டத்தில் இழிவுக்குரிய ஒருவன் ஓட்டக் குடலைக் கொண்டு வந்து நபியவர்கள் ஸுஜூது செய்வதை எதிர்பார்த்திருந்து, அவர்கள் ஸுஜூது செய்தபோது அவர் களின் முதுகில் இரு தோள் புஜங்களுக் கிடையில் போட்டான். இதைப் பார்த்து ஒருவர் மீது ஒருவர் விழுந்து சிரிக்கலானார்கள். நபிகள் நாயகம்(ஸல்) தமது தலையை உயர்த்த முடியாமல் ஸஜ்தாவிலேயே இருந்தார்கள். இறுதியில் அவர்களின் மகள் ஃபாத்திமா(ரலி) வந்து அவர்களின் முதுகில் போடப்பட்டிருந்த அந்த அசுத்தத்தை எடுத்து விசி எறிந்தார்கள். (பார்க்க: புகாரி-240)

இதை விடக் கொடுமையானது என்னவெனில் மக்கள் அவர்களது பிரச்சாரத்தை நிராகரித்து, பொய்ப்படுத்தி, இவர் குறிகாரர், கவிஞர், பைத்தியக் காரன், சூனியக்காரன், இவர் கொண்டு வந்த வசனங்கள் முன்னோர்களின் கட்டுக்கதைகளே தவிர வேறில்லை என்றெல்லம் அவர்களைப் பற்றி இட்டுக்கட்டி கூறும்போது ஏற்பட்ட மன ரீதியான துன்பம்தான். "இறைவா! இ(வர் கூறுவ)து உன்னிடமிருந்து வந்த உண்மையாக இருந்தால் எங்கள் மீது வானிலிருந்து கல்மழையைப் பொழியச் செய்வாயாக! அல்லது துன்புறுத்தும் வேதனையைத் தருவாயாக!" என்று அபூஜஹில் பரிகாசமாகக் கூறியது இந்த வகையைச் சார்ந்ததாகும்.

இஸ்லாத்தின் பக்கம் அழைப்பதற்காக மக்கள் ஒன்று கூடும் இடங்களுக்கும் அவர்களின் வியாபாரத்தலங்களுக்கும் நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் செல்லும் போது அவர்களின் பெரிய தந்தை அபூலஹப் பின்தொடர்ந்து சென்று 'இவர் பொய்யர்; இவரை யாரும் நம்ப வேண்டாம்' என்று கூறி மக்களைத் தடுப்பான். அவனது மனைவி உம்மு ஜமீல் என்பவளும் விரகுக்கட்டை களையும் முட்களையும் சேகரித்து நபிகள் நாயகம் செல்லும் பாதையில் போட்டு துன்பம் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் தமது தோழர்களுடன் அபூதாலிப் பள்ளத் தாக்கில் மூன்று வருடங்களாக சமூகப் புறக்கணிப்பு செய்யப்பட்டிருந்தபோது துன்பம் உச்சகட்டத்தை அடைந்தது. எந்த அளவுக்கு எனில் கடுமையான பசியின் காரணமாக அவர்கள் இலை தழைகளைச் சாப்பிட்டு வந்தனர். நபியவர்களுக்கு ஆறுதலாகவும் உறுதுணையாகவும் இருந்து வந்த அவர்களது மனைவி

கதீஜாவை அவர்கள் இழந்தபோது அவர்களுக்கு கவலைகள் அதிகமாயின. அதன் பிறகு அவர்களைப் பராமரித்தும் எதிரிகளின் தொல்லைகளிலிருந்து பாதுகாத்தும் வந்த அவர்களது பெரிய தந்தையும் திடீரென மரணித்தார். இறைநிராகரிப்பிலேயே அவர் மரணித்தது அவர்களின் கவலையை இருமடங் காக்கியது. அதன் பிறகு அவர்களைக் கொல்வதற்கான பல்வேறு முயற்சி களுக்குப் பிறகு தமது ஊரை விட்டு மதினாவுக்கு ஹிஜ்ரத் செய்தார்கள்.

மதினாவில் நபிகள் நாயகத்தினுடைய பொறுமை மற்றும் தியாகத்தின் புதிய அத்தியாயம் தொடங்கியது. கடும் உழைப்பும் சிரமமும் கொண்ட வாழ்க்கை அங்கு ஆரம்பமானது. எந்த அளவுக்கு எனில் பசியும் வறுமையும் அவர்களை வாட்டின. தமது வயிற்றில் கல்லைக் கட்டிக்கொண்டு வாழ்ந்தார்கள். இதை நபிகள் நாயகம்(ஸல்) அவர்களே இவ்வாறு குறிப்பிடுகிறார்கள்: “அல்லாஹ்வின் பாதையில் நான் அச்சுறுத்தப்பட்டேன்; என்னைப் போல் யாரும் அச்சுறுத்தப்பட வில்லை. அல்லாஹ்வின் வழியில் நான் துன்புறுத்தப்பட்டேன்; என்னைப் போல் யாரும் துன்புறுத்தப்படவில்லை. பிலாலுடைய கக்கத்தில் வைத்துக்கொள்ளும் (சிறிது) அளவு ஆகாரத்தைத் தவிர எனக்கும் அவருக்கும் ஒரு ஜீவன் தின்னத் தக்க ஆகாரம்கூட இல்லாமல் முப்பது இரவுகளும் பகல்களும் கடந்திருக் கின்றன.” (பார்க்க: திர்மிதி-2476, இப்னுமாஜா-151)

நபியவர்களின் கண்ணியத்திற்கும் களங்கம் ஏற்படுத்தப்பட்டது. நயவஞ் சகர்கள் மற்றும் கிராமவாசிகளில் சில அறிவீனர்களால் அவர்களுக்கு துன்பம் ஏற்பட்டது. இப்னு மஸ்வூத்(ரலி) அறிவிக்கிறார்கள்: ஒரு முறை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் போரில் கிடைத்த பொருட்களைப் பங்கிட்டார்கள். அப்போது அன்ஸாரிகளில் ஒருவர், “அல்லாஹ்வின் மீது ஆணையாக! இதில் முஹம் மதுக்கு அல்லாஹ்வுக்காக என தூய எண்ணம் இல்லை” என்று கூறினார். இதைக் கேட்ட இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் நபிகள் நாயகத்திடம் வந்து இதைத் தெரிவித்தார்கள். உடனே (கோபத்தால்) நபிகள் நாயகத்தின் முகம் மாறியது. மூஸாவுக்கு அல்லாஹ் அருள்புரிவானாக! அவர்கள் இதை விட அதிகமாக துன்புறுத்தப்பட்டும் பொறுமையாக இருந்தார்கள்” என்று கூறினார்கள். (பார்க்க: புகாரி-4336, முஸ்லிம்-1062, அஹ்மத்-3426)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பொறுமையை மேற்கொண்ட கால கட்டங்களில் அவர்களுடைய பிள்ளைகளில் ஆண் மக்களும் பெண்மக்களும் மரணமடைந்த நாட்களும் அடங்கும். நபிகள் நாயகத்துக்கு ஏழு பிள்ளைகள் இருந்தனர். ஒருவர் பின் ஒருவராக தொடர்ந்து அவர்கள் மரணமடைந்தனர். இறுதியாக அவர்களில் ஃபாத்திமாவைத் தவிர வேறு யாரும் எஞ்சியிருக்க

வில்லை. அதற்காக நபியவர்கள் ஒடிந்து போகவில்லை; மாறாக அழகிய முறையில் பொறுமையை மேற்கொண்டார்கள். அவர்களது மகன் இப்ராஹீம் மரணமடைந்தபோது, “கண்கள் கண்ணிரைச் சிந்துகின்றன; உள்ளமோ துக்கப் படுகிறது; நம் இறைவனைத் திருப்திபடுத்துகின்ற சொல்லைத் தவிர வேறு எதனையும் நாம் கூற மாட்டோம். இப்ராஹீமே! உன் பிரிவால் திண்ணமாக நாங்கள் கவலையடைந்து உள்ளோம்.” என்று அவர்கள் கூறியதை நபிமொழி களிலே காண்கிறோம். (பார்க்க: புகாரி-1303)

**நபிகள் நாயகத்தின் வழிபாடு**

நபி(ஸல்)அவர்கள் தம் இறைவனை வணங்குவதில் ஆழ்ந்த முயற்சியுடன் ஈடுபடுபவர்களாய் இருந்தார்கள். எந்த நேரமும் அல்லாஹ்வை திக்ரு செய்து கொண்டும், அவனைப் பற்றி சிந்தித்துக் கொண்டும் இருப்பார்கள். இன்னும் சொல்வதென்றால் அவர்களுக்கு துயரமோ கவலையோ ஏற்பட்டால் அல்லது ஏதேனும் துன்பம் நேர்ந்தால் உடனே தொழுகையில் ஈடுபடுவார்கள். தொழுகை அவர்களுக்கு நிம்மதியைத் தரக்கூடியதாக இருந்தது. நபியவர்கள் பிலாலை அழைத்து, “பிலாலே! தொழுகைக்கு அழைப்பு விடுப்பதன் மூலம் எமக்கு நிம்மதி தாரும்” என்று கூறுவார்கள்.

நபி(ஸல்)அவர்கள் இரவில் தொழுவார்கள். அப்போது தொழுகையை நீட்டித் தொழுவார்கள். நிலையில் அதிக நேரம் நின்று கொண்டிருப்பார்கள். எந்த அளவுக்கெனில் அதிக நேரம் நிற்பதால் அவர்களின் பாதங்கள் வீங்கிவிடும். திருக்குர்ஆனை அதிகம் ஓதுவார்கள், சில வசனங்களைத் திரும்பத் திரும்ப ஓதுவார்கள். திருக்குர்ஆனை ஓதும்போது அழுவார்கள். எந்த அளவுக்கு எனில் அதிகம் அழுவதால் அவர்களுடைய தாடி நனைந்துவிடும். அவர்களின் மனைவி ஆயிஷா(ரலி), அவர்களிடம் இப்படிக் கேட்பார்கள்: “அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் உங்களை ஏன் இந்த அளவு வருத்திக் கொள்கிறீர்கள்? அல்லாஹ் உங்களுடைய முன் பின் பாவங்களை மன்னித்து விட்டான் அல்லவா!” அதற்கு நபியவர்கள் “நான் நன்றியுள்ள அடியானாக இருக்க வேண்டாமா?” என்று பதில் கூறுவார்கள்.

இரவில் பெரும்பகுதி நேரம் (தொழுகையின் மூலம்) அல்லாஹ்விடம் உரை யாடிக் கொண்டும், அவனுடைய வேதத்தை ஓதிக்கொண்டும் இருப்பார்கள். மேலும் அனைத்து ஈடுபாடுகளையும் விட்டு விட்டு அவன் பக்கம் ஒதுங்கி விடுவார்கள். இவ்வாறே அவர்கள் அதிகம் நோன்பு நோற்பார்கள். பயணத்திலும் ஊரில் இருக்கும்போதும் கோடையிலும் குளிரிலும் அவர்கள் நோன்பு நோற் பார்கள். அபுத்தர்தா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: “(ஒரு முறை) நாங்கள் கடும்

வெயில் நாட்களில் இருந்தோம். வணக்கத்திற்கு இறைவன் அவனைத் தவிர வேறு யாருமில்லையே அப்படிப்பட்ட அல்லாஹ்வின் மீது ஆணையாக! எங்களில் ஒருவர் சூரியனின் கடும் வெப்பத்திலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள தமது தலையில் கையை வைத்துக் கொள்வார். அப்போது எங்களிடையே அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்களையும் இப்னு ரவாஹா என்பவரையும் தவிர வேறு யாரும் நோன்பாளியாக இருக்க மாட்டார். (பார்க்க: புகாரி1945)

தர்மத்தைப் பொறுத்தவரையில் நபி(ஸல்)அவர்கள் கொடைவள்ளலாகவும் எல்லை இல்லா தயாள குணமுடையவராகவும் திகழ்ந்தார்கள். தம்மிடம் உள்ள அனைத்து செல்வங்களையும் தர்மம் செய்வர்களாக இருந்தார்கள். வறுமைக்கு அஞ்சாத மனிதர் வழங்குவதுபோல வழங்குவார்கள். அவர்களிடம் இருக்கும் ஒரு பொருளை யாரேனும் கேட்டுவிட்டால் கேட்டவருக்கு அவர்கள் ஒருபோதும் இல்லை என்று சொன்னதில்லை. அவரை வெறுங்கையுடன் திருப்பி அனுப்பியதுமில்லை. மாறாக அவர்கள் அவருக்கு ஏதேனும் கொடுத்து உதவத் தான் செய்வார்கள். நபி(ஸல்)அவர்களைப் பற்றி நபித்தோழர்கள் கூறும்போது “அல்லாஹ்வின் தூதரிடம் யாரும் ஏதையேனும் கேட்டு அதற்கு அவர்கள் இல்லை என்று சொன்னதே இல்லை” என்று கூறுவார்கள்.

**நபியவர்களின் பற்றற்ற நிலை**

நடைமுறையில் பற்றின்மை எனும் பண்பு யாருக்குச் சொல்லப்படும் எனில் எவருக்கு ஒரு காரியம் இலகுவாகக் கைகூடும் என்றிருக்க அவர் அதில் ஆசை கொள்ளாமல் அதைப் புறக்கணித்தாரோ அவருக்குத் தான் சொல்லப்படும். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் மக்கள் அனைவரையும் விட உலகப் பற்றற்றவர்களாய் இருந்தார்கள். உலக இன்பத்தில் ஆர்வம் குறைந்தவர்களாக இருந்தார்கள். உயிர் வாழப் போதுமான வாழ்வாதாரத்தைக் கொண்டு போதுமாக்கிக் கொள்பவர்களாகவும், வரட்சியான வாழ்க்கையை பொருந்திக்கொள்பவர்களாகவும் இருந்தார்கள். இத்தனைக்கும் உலகம் அவர்களின் முன்னே கொட்டிக் கிடந்தது. அவர்களே அல்லாஹ்விடத்தில் கண்ணியமானவர்களாய் இருந்தார்கள். அவர்கள் விரும்பினால் வேண்டிய செல்வங்களையும் இன்பங்களையும் அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியிருப்பான்.

கைஸமா(ரலி) அவர்கள் அறிவிக்கின்ற ஒரு செய்தியை இமாம் இப்னு கஸீர் அவர்கள் தமது தப்ஸீரில் பதிவு செய்துள்ளார்கள். அதாவது, “நீங்கள் விரும்பினால் உங்களுக்கு முன் எந்த நபிக்கும் வழங்கப்படாத உங்களுக்குப் பிறகு வேறு யாருக்கும் கொடுக்கப்படாத இப்புவியின் கருவூலங்களையும் அதன்

திறவுகோல்களையும் உங்களுக்கு நாம் வழங்குவோம். அது அல்லாஹ்விடம் உங்களுக்காக இருப்பவற்றில் எதையும் குறைத்துவிடாது" என்று நபிகள் நாயகம்(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு "அவற்றை எனக்கு மறுமைக்காக சேர்த்து வையுங்கள்" என்று நபியவர்கள் கூறினார்கள்.

நபிகள் நாயகத்தின் வாழ்க்கை முறையோ ஆச்சரியத்துக்கு மேல் ஆச்சரியமாக இருந்தது! அபூதர்(ரலி)அவர்கள் கூறுகிறார்கள்: நான் மதினாவின் கற்பாங்கான இடத்தில் நபிகள் நாயகம்(ஸல்)அவர்களுடன் நடந்து கொண்டிருந்த போது உஹது மலை அவர்களை எதிர்கொண்டது. அப்போது, "இந்த உஹது மலையளவு தங்கம் என்னிடம் இருந்து அதில் எனது கடனை அடைப்பதற்குரிய சிறிதளவு தங்கத்தைத் தவிர ஒரே ஒரு தீனார் மிச்சமாக இருக்கும் நிலையில் மூன்று நாட்கள் கடந்துவிடுவதை நான் விரும்பவில்லை. அல்லாஹ்வின் அடியார்களுக்கு பல வகைகளிலும் அதனை தர்மம் செய்துவிடுங்கள் என்றே கூறுவேன்" என்று கூறினார்கள். (பார்க்க: புகாரி-6444), முஸ்லிம்-991)

"எனக்கும் இந்த உலகத்துக்கும் என்ன தொடர்பு இருக்கிறது? மரத்தின் நிழலில் சற்று நேரம் இளைப்பாறி விட்டுச் செல்லக்கூடிய ஒரு பயணியைப் போன்றே இவ்வுலகில் எனது நிலை இருக்கிறது!" என்று கூறுவார்கள். (பார்க்க: திர்மதி-2377, இப்னுமாஜா-4109)

**நபியவர்களின் உணவும் உடையும்**

அவர்களின் உணவைப் பொறுத்தவரை ஒரு மாதம், இரண்டு மாதங்கள் அல்ல மூன்று மாதங்கள் வரை அவர்களின் வீட்டில் அடுப்பு பற்றவைக்கப்படாமலேயே கழிந்திருக்கிறது. பேரீத்தம் பழமும் தண்ணீரும் தான் அவர்களின் உணவாக இருந்தது. சில வேளை தமது வயிற்றை நிரப்பும் அளவுக்கு எதுவும் கிடைக்காமல் பசியின் கடுமையால் அவர்கள் சுருண்டுவிடுவார்கள். பெரும்பாலும் அவர்கள் சாப்பிட்ட ரொட்டி சலிக்கப்படாத கோதுமை மாவிலிருந்து தயாரிக்கப்பட்டதாக இருந்தது. எப்போதேனும் மிருதுவான ரொட்டியை அவர்கள் உண்டதாக எந்தக் குறிப்பும் நமக்கு கிடைக்கவில்லை. மாறாக "விருந்தாளிகள் வரும்போது மட்டும் அவர்களின் காலை உணவிலும் மாலை உணவிலும் ரொட்டியும் இறைச்சியும் சேர்ந்திருக்கும்" என்று அவர்களின் பணியாளர் அனஸ்(ரலி) குறிப்பிட்டுள்ளார்கள்.

உடை விஷயத்தில் அவர்களின் நிலை இதை விடவும் மோசமாகத் தான் இருந்திருக்கிறது. உடை விஷயத்தில் அவர்கள் எளிய நிலையையே மேற் கொண்டுள்ளார்கள்; அதற்காக எவ்விதச் சிரத்தையும் எடுத்துக் கொண்டதில்லை என்பதற்கு அவர்களின் தோழர்களே சான்று பகர்கிறார்கள். இத்தனைக்கும் உயர்தர ஆடைகளைப் பெற அவர்களுக்கு சக்தி இருந்தது. அவர்களின்

ஆடையைப் பற்றி ஒரு நபித்தோழர் கூறும்போது, "நான் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களிடம் ஒரு விஷயம் குறித்துப் பேசுவதற்காக வந்தேன். அப்போது அவர்கள் கனமான பருத்தி வேட்டி (மட்டும்) அணிந்து அமர்ந்திருந்தார்கள்" என்று கூறுகிறார். (பார்க்க: அஹ்மத்- 22129)

அபூபுர்தா என்ற நபித்தோழர் நபிகள் நாயகத்தின் மனைவி ஆயிஷா (ரலி) யிடம் வந்தபோது, மேலே போர்த்திக் கொள்ளும் ஒரு போர்வை கீழே அணிந்து கொள்ளும் ஒரு முரட்டு வேட்டி ஆகிய இரண்டையும் அவர்கள் எடுத்துக்காட்டி "இவ்விரு ஆடைகளை அணிந்த நிலையில்தான் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் மரணித்தார்கள்" என்று குறிப்பிட்டார்கள். "நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர் களுடன் நடந்து சென்று கொண்டிருந்தேன். அப்போது அவர்கள் தடித்த விளிம்பு களைக் கொண்ட நஜ்ரான் நாட்டு சால்வை ஒன்றைப் போர்த்தியிருந்தார்கள்" என்று அனஸ்(ரலி) அறிவிக்கிறார்கள். (பார்க்க: புகாரி-5818, 5809, முஸ்லிம்-1057)

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் மரணிக்கும்போது தமது வெள்ளை நிறக் கோவேறு கழுதை, ஆயுதம், தர்மமாக விட்டுச் சென்ற நிலம் ஆகியவற்றைத் தவிர தங்கக்காசையோ வெள்ளிக்காசையோ அடிமைகளையோ வேறு எதனையும் விட்டுச் செல்லவில்லை. "எனது வீட்டில் சிறிதளவு வாற்கோதுமையை தவிர ஒரு ஜீவன் உண்ணத்தக்க ஆகாரம்கூட இல்லாமல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மரணித்தார்கள்" என அவர்களின் மனைவி ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள். அவர்கள் மரணிக்கும்போது சிறிதளவு கோதுமைக்காக அவர்களது கவசம் ஒரு யூதனிடம் அடமானம் வைக்கப்பட்டிருந்தது. (பார்க்க: புகாரி-3097, 2916)

**நபியவர்களின் நீதி**

நீதி என்பது நபியவர்கள் தம் விஷயத்திலும், தமது இறைவன், தம் மனைவியர், தமது உறவினர் இன்னும் அந்நியர், நண்பர், கூட்டாளி, ஒத்த கருத்தை உடையவர்கள், மாற்றுக் கருத்துக் கொண்டவர்கள் என அனைவ ருடனும் அவர்கள் நடந்து கொண்ட விதத்தில் இருக்கிறது. இவர்கள் அனைவ ருடனும் நபியவர்கள் நீதமாக நடந்து கொண்டார்கள். இன்னும் சொல்வதானால் அவர்களைப் பிடிவாதமாக எதிர்த்துக் கொண்டிருந்த அவர்களது எதிரிகளு டனும்கூட நபிகள் நாயகம் நீதமாக நடந்து கொண்டார்கள்.

சில பேர் நபிகள் நாயகத்தை விமர்சனம் செய்கிறார்கள். வேறு சிலர் அவர்கள் மீது தவறான குற்றச்சாட்டுகள் சுமத்தவும் செய்கிறார்கள். ஆனாலும் (அத்தகை யவர்களுடன் பதில் நடவடிக்கையின்போது) நபிகள் நாயகம் நீதி தவறவில்லை! நீதி என்பது நபியவர்களிடம் நீங்காப் பண்பாக அமைந்திருந்தது. ஊரில்

இருந்தபோதும் பயணத்தின் போதும் எல்லா நிலைகளிலும் நீதி அவர்களிடம் நிலைத்திருந்தது. தமது தோழர்கள் மத்தியில் பாகுபாடு காட்டுவதை அவர்கள் வெறுப்பார்கள். மாறாக அவர்களிடையே நேர்மையுடனும் சமத்துவத்துடனும் நடந்து கொள்வதையே விரும்புவார்கள். அவர்களைப் போல தாமும் கஷ்டங் களையும் சிரமங்களையும் தாங்கிக் கொள்வார்கள்.

இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: பத்ரு போர் நடந்த நாளில் நாங்கள் ஒரு ஒட்டகத்திற்கு மூவர் என்ற அடிப்படையில் பயணம் செய்தொம். நபிகள் நாயகத்துடன் அபுலுபாபா, அலீ பின் அபீதாலிப் ஆகிய இருவரும் ஒட்டகத் தோழராக இருந்தனர். நபிகள் நாயகத்தின் முறை வந்தபோது "நீங்கள் ஒட்டகத்தில் அமர்ந்து வாருங்கள்; உங்களுக்காக நாங்கள் நடக்கிறோம்" என இருவரும் கூறினர் "நீங்கள் என்னை விட வலிமையானவர்களும் அல்லர்; நான் உங்களை விட (இறைவனின்) கூலியில் தேவையற்றவனும் அல்லன்" என நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.

ஒரு முறை உஸைத் இப்னு ஹுளைர் என்ற தோழர் மக்களுடன் தமாஷாகப் பேசி, அவர்களை சிரிக்க வைத்துக் கொண்டிருந்தபோது நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் அவரது இடுப்பில் ஒரு குச்சியால் குத்தி விட்டார்கள். உடனே உஸைத், "என்னை வேதனைப் படுத்திவிட்டீர்கள்; அதனால் உங்களை நான் பழிவாங்க வேண்டும்" எனக் கூறினார். அதற்கு நபிகள் நாயகம், "நீ பழிதீர்த்துக் கொள்" என்று அவரிடம் கூறினார்கள். அப்போது அவர், நீங்கள் என்னை குத்தும் போது நான் சட்டை அணிந்திருக்கவில்லை, ஆனால் (தற்போது) நீங்கள் சட்டை அணிந்துள்ளீர்களே!" என்றார். உடனே நபியவர்கள் தமது சட்டையைக் கழற்றி னார்கள். உடனே உஸைத் நபிகள் நாயகத்தைக் கட்டியணைத்து முதுகில் முத்தமிட்டுவிட்டு "அல்லாஹ்வின் தூதரே! நான் இதைத் தான் விரும்பினேன்" என்று கூறினார். (பார்க்க: அபூதாவூத்- 5224)

ஷரீஅத்தில் அல்லாஹ் ஏற்படுத்திய குற்றவியல் சட்டங்கள் முடக்கப்படுவதை நபியவர்கள் விரும்பாதவர்களாய் இருந்தார்கள். காரணம் மக்களிடையே நீதியை நிலைநாட்ட வேண்டும் என்பது தான். குற்றமிழைத்தவர் தன் உறவின ராகவோ தனக்குப் பிரியமானவராகவோ இருந்தாலும் சரி. மக்ஸூம் கோத் திரத்தைச் சார்ந்த ஒரு பெண் திருடிய சம்பவத்தின்போது தமது பாசத்திற்குரி யவரான உஸாமாவுடைய பரிந்துரையை நபியவர்கள் ஏற்கவில்லை. மாறாக "மக்களே! உங்களுக்கு முன் சென்றவர்கள் அழிந்துபோனதற்குக் காரணம் அவர்களில் செல்வாக்குமிக்கவன் திருடினால் அவனை விட்டுவிடுவார்கள். பலவீனன் திருடினால் அவனுக்குத் தண்டனை நிறைவேற்றுவார்கள் என்பது

தான். அல்லாஹ்வின் மீது ஆணையாக! முஹம்மதின் மகள் பாத்திமா திருடினாலும் அவரது கையையும் வெட்டியே தீருவேன்” என்று கூறினார்கள்.

## முஹம்மது நபி(ஸல்)குறித்து உலக அறிஞர்களின் கருத்துக்கள்

சில தத்துவஞானிகள், மேலை நாடுகள் மற்றும் கீழை நாடுகளில் உள்ள சில அறிஞர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பற்றி கூறிய சில கருத்துக்கள் கீழே தரப்பட்டுள்ளன. இவை இந்த நபியின் மகத்துவத்தையும், அவர்களின் அழகிய குணங்களையும், அவர்கள் ஓர் இறைத்தூதர்தான் என்பதையும், அவர்கள் கொண்டுவந்த மார்க்கத்தின் எதார்த்த நிலையையும் அவர்கள் ஒப்புக்கொண்டதைத் தெளிவுபடுத்துகிறது. இந்தக் கருத்துக்கள் மனமாச்சரியத்திற்கும் இஸ்லாத்தின் எதிரிகள் பரப்பி வைத்திருக்கும் பொய்ச் செய்திகளுக்கும் அப்பாற்பட்டுக் கூறியவையாகும்.

**அறிஞர் பெர்னாட்ஷா (முஹம்மத் எனும் தனது நூலில்) கூறுகிறார்:**

(இந்நூலை ஆங்கிலேய அரசு எரித்துவிட்டது.) “இந்த உலகம் முஹம்மதைப் போன்ற ஒரு சிந்தனையாளரின் பக்கம் மிகவும் தேவையுயடையதாக உள்ளது. இந்த நபி, தாம் போதித்த இறைமார்க்கத்தை எப்பொழுதும் கண்ணியத்திற்குரிய இடத்திலேயே வைத்துள்ளார். இவரது மார்க்கம் உலகிலுள்ள அனைத்து நாகரிகங்களையும் வென்று ஏனைய எல்லா மதங்களை விடவும் சிறப்புக்கும் கண்ணியத்திற்கும் உரியதாகவே காலாகாலத்துக்கும் திகழும். என் சமுதாய மக்களில் பெரும்பாலோர் தெளிவான ஆதாரத்துடன் இம்மார்க்கத்தில் இணைந்து விட்டனர். ஐரோப்பா கண்டத்தில் இம்மார்க்கம் இன்னும் அதிகமாகப் பரவும்.”

மேலும் அவர் கூறியதாவது: “மதவெறி அல்லது அறியாமையின் காரணமாக மத்திய நூற்றாண்டில் மதவாதிகள் முஹம்மது நபியின் மார்க்கத்திற்கு இருள் படர்ந்த- தெளிவற்ற வடிவத்தைக் கொடுத்தனர். முஹம்மது நபியைக் கிறிஸ் தவத்திற்கு எதிரானவராகக் கருதினார்கள். ஆனால் அவர் கூறும் கருத்துக்களை நான் ஆராய்ந்தபோது அவர் திகைப்பிற்கும் ஆச்சரியத் திற்கும் உரியவராக இருப்பதைக் காண முடிந்தது. அதுமட்டுமல்ல அவர் கிறிஸ்தவத்திற்கு எதிரானவர் அல்லர் என்ற முடிவுக்குத்தான் என்னால் வரமுடிந்தது. உண்மையைச் சொல்வதானால் அவர் மனித சமுதாயத்தை மீட்கக்கூடியவர் என்றுதான் சொல்ல வேண்டும். “இவ்வுலகத்தின் ஆட்சிப் பொறுப்பை அவர் ஏற்றுக் கொண்டால் நம்மைச் சூழ்ந்துள்ள இன்றைய பிரச்சனைகளுக்கு அவரால் நிச்சயம் தீர்வு காண முடியும். மேலும் இன்று மனித சமுதாயம் ஏங்கிக் கொண் டிருக்கும் அமைதியையும் நற்பாக்கியத்தையும் அவரால் வழங்கிட முடியும்.

**நோபல் பரிசு பெற்ற ஆங்கிலேயத் தத்துவஞானி தாமஸ் கார்லைல் (Thomas Carlyle 1795-1881) பெருந் தலைவர்கள் (HEROES) எனும் தமது நூலில் கூறுகிறார்:**

“இஸ்லாம் போலியானது என்றும் முஹம்மத் போலியானவர், ஏமாற்றுக்காரர் என்றும் கூறப்படுவதை இன்றைய காலத்தில் ஒருவர் செவியேற்பது மிகப் பெரிய இழிவாகும். இதுபோன்ற அபத்தமான- வெட்கக்கேடான கருத்துக்கள் பரப்பப் படுவதற்கு எதிராக நாம் போராட வேண்டும். அந்த இறைத்தூதர் கொண்டு வந்த தூதுச் செய்தி பன்னிரண்டு நூற்றாண்டுகளாக ஏறத்தாள இருபது கோடி மக்களுக்கு ஒளி வீசும் விளக்காகவே திகழ்ந்து வருகிறது. எண்ணிலடங்காத இத்தனை கோடி மக்கள் எந்தத் தூதுச் செய்தியை ஏற்று வாழ்ந்து மடிந்தார்களோ அந்தத் தூதுச் செய்தி பொய்யானது, மோசடியானது என்று உங்களில் யாரும் நினைத்துப் பார்க்க முடியுமா?

**இந்தியத் தத்துவஞானி ராமகிருஷ்ணராவ் கூறுவ தாவது:**

“முஹம்மது தோன்றியபோது அரேபியத் தீபகற்பம் என்பது வெளியில் சொல்லும் அளவுக்குச் சிறந்து விளங்கவில்லை. இத்தகைய பாலைவனத்தில் இருந்து கொண்டுதான் முஹம்மது தமது மகத்தான ஆற்றலால் புதிய உலகையும், புதிய வாழ்வையும், புதிய கலாச் சாரத்தையும் நாகரிகத்தையும் உருவாக்க முடிந்தது. மேலும் (மொரோக்கோ நாட்டின்) மராக்கிஷ் நகரில் இருந்து இந்திய துணைக் கண்டம் வரையில் பரந்து விரிந்திருக்கும் அளவுக்கு புதிய இராஜ்ஜியத்தையும் உருவாக்க முடிந்தது. இன்னும் ஆசியா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா ஆகிய மூன்று கண்டங்களிலும் புதிய சிந்தனையையும் புதிய வாழ்க்கை முறையையும் அவரால் ஏற்படுத்த முடிந்தது.

**கனடாவைச் சேர்ந்த ஸ"வைமர் என்ற அறிஞர் கூறுகிறார்:**

முஹம்மத் மாபெரும் ஆன்மீகத் தலைவர் என்பதில் சந்தேகமில்லை. மேலும் அவர் ஓர் ஆற்றல் மிக்க சீர்திருத்தவாதியாகவும் தூயமொழியில் பேசக்கூடிய சிறந்த பேச்சாளராகவும் துணிச்சல்மிக்க இராணுவ வீரராகவும் மாபெரும் சிந்தனையாளராகவும் திகழ்ந்தார். இத்தகைய தன்மைகளுக்கு முரணான வேறு தன்மைகளை நாம் அவருக்குக் கற்பிப்பது கூடாது. இப்படிச் சொல்வது தான் சரி என்று அவரது வரலாறும் அவர் கொண்டு வந்த குர்ஆனும் சான்று பகர்கின்றது.”

**சர் வில்லியம் மூர் (Sir William Muir) கூறுவதாவது:**

முஸ்லிம்களின் நபி முஹம்மது அவர்கள், சிறு வயது முதல் அவரது ஊர் மக்களால் ஏகோபித்த முறையில் ‘நம்பிக்கைக்குரியவர்’ எனும் சிறப்புப் பெயர்

சூட்டப்பட்டார். இத்தகைய சிறப்பிற்கு அவரது அழகிய குணமும் நன்னடத்தையும் தான் காரணம். எது எப்படியானாலும் புகழ்ந்துரைப்பவர்களின் புகழைவிடவும் அவர் உயர்ந்தவர்தான். அவரைப் பற்றி அறியாதவர்களுக்கு அவரது சிறப்பு தெரியாதுதான். சிறப்புக்குரிய அவரது வரலாற்றை நன்கு ஆய்வு செய்தவர்கள் தான் அவரை நன்கு அறிவார்கள். இறைத்தூதர்களின் வரிசையிலும் உலகச் சிந்தனையாளார்களின் வரிசையிலும் அவருக்கு முதலிடத்தைக் கொடுத் திருப்பது அந்த வரலாறு தான்.

மேலும் அவர் கூறுவதாவது, "முஹம்மது தமது தெளிவான பேச்சாலும் எளிமையான மார்க்கத்தாலும் தனித்துவம் பெற்றுத் திகழ்கிறார். சிந்தையைத் திகைக்க வைக்கும் அளவுக்கு பெரும் பணிகளையெல்லாம் அவர் செய்து முடித்துள்ளார்.இஸ்லாமியர்களின் நபி முஹம்மது செய்ததைப்போல உறங்கிக் கொண்டிருந்த மனிதர்களைத் தட்டி எழுப்பி, நற்குணங்களை உயிர்ப்பித்து குறுகிய காலத்தில் நற்குணத்தின் சிறப்பு-அந்தஸ்தை உயர்த்திக் காட்டிய சீர்திருத்தவாதியை உலக வரலாறு கண்டதில்லை.

**நோபல் பரிசு பெற்ற ரஷ்ய தத்துவஞானி லியோ டோல்ஸ்டாய் (Leo Tolstoy) கூறுகிறார்:**

முஹம்மது நபியின் பெருமைக்கு இதுவே போதுமானதாகும். அதாவது கேடு கெட்ட, இழிந்த சமுதாயத்தை சாத்தான்களின் கரங்களிலிருந்தும் இழிவான பழக்கங் களிலிருந்தும் விடுவித்து வளர்ச்சிக்கும் முன்னேற்றத் திற்குமான பாதையை அவர்களுக்கு வகுத்துக் கொடுத்தார். முஹம்மது கொண்டு வந்த மார்க்கம் அறிவுக்கும் விவேகத்திற்கும் பொருத்தமாக இருப்பதால் உலகம் முழுவதும் அது பரவியே தீரும்.

**நம்ஸாவி ஷப்ரிக் (Austria) என்பவர் கூறுகிறார்:**

"மனித சமுதாயம் முஹம்மைதப் போன்ற ஒரு மனிதரை தன்னுடன் இணைத்துச் சொல்வதற்குப் பெருமைப் படுகிறது. காரணம் என்னவெனில் அவர் எழுதப் படிக்கத் தெரியாதவராக இருந்தும் பத்து நூற்றாண்டுகளுக்கு முன் எத்தகைய சட்டதிட்டங்களை வகுத்து அளிக்க அவரால் முடிந்துள்ளதெனில் ஐரோப்பியர் களாகிய நாம் இது போன்ற சட்ட நெறிகள் முழுவதையும் அடையும் பட்சத்தில் முன்னை விட அதிக பாக்கியத்திற்கு உரியவர்களாய் நிச்சயம் திகழ்ந்திருக்க முடியும்!

இறுதித்தூதர் முஹம்மது நபி(ஸல்) அவர்களின் வரலாற்றைப் பற்றி கூடுதல் விபரங்களை அறிந்து கொள்வதற்கு பின்வரும் நூல்களைப் பார்வையிடலாம்.

1. அஸ்ஸீரா அந்நபவிய்யா- இப்னு ஹிஷாம்
2. அர்ரஹீகுல் மக்தூம்- ஸ.ீ.பிய்யுர் ரஹ்மான் முபாரக்பூரி
3. ஹாதல் ஹபீப் முஹம்மத், யா முஹிப்- அபூபக்கர் அல்ஜஸாயிரி
4. அஸ்ஸீரா அந்நபவிய்யா- மவாகி.ீ.புன் வஇபர்- டாக்டர் அப்துல் அஸீஸ் அல்ஹுமைதி
5. அஸ்ஸீரா அந்நபவிய்யா- துரூஸுன் வஇபர்- டாக்டர் முஸ்த.ீ.பா அல்ஸுபாயி

# أحكام اليوم الآخر
# இறுதி நாளின் சட்டங்கள்

இறுதி நாளை நம்புவது ஈமானின் அடிப்படைகளிலும் அதன் ஆறு கடமைகளிலும் ஒன்றாகும். எனவே மறுமை தொடர்பாக இறைவேதத்திலும் ஆதாரப்பூர்வமான நபிமொழிகளிலும் வந்தவற்றை நம்பாதவரை ஒருவன் நம்பிக்கை கொண்டவனாக ஆக முடியாது. நிச்சயமாக மறுமை நாளைப் பற்றி அறிந்து கொள்வதும், அதை அதிகமாக நினைவுகூருவதும் மிக முக்கியமானதாகும். ஏனெனில் மனிதனின் உள்ளத்தைப் பக்குவப்படுத்துதல், இறையச்சத்தை ஏற்படுத்துதல், இறைமார்க்கத்தில் உறுதியாக இருத்தல் போன்ற பல நன்மைகளுக்கு இது பெரிதும் வழிகோலும். எனவே மறுமை நாளின் அமளிகள், துன்பங்கள் குறித்து பராமுகமாக இருப்பது தான் பெருமளவில் மனிதனின் உள்ளத்தைக் கல்லாக்கி அவனைப் பாவங்கள் புரிந்திட தூண்டக்கூடியதாக உள்ளது.

மறுமை நாள் குறித்து அல்லாஹ் கூறுகிறான்:

﴿ فَكَيْفَ تَتَّقُونَ إِنْ كَفَرْتُمْ يَوْمًا يَجْعَلُ الوِلْدَانَ شِيبًا ﴾ [المزمل:١٧]

“நீங்கள் (இறைவனை) நிராகரித்தால் குழந்தைகளை நரைத்தோராக மாற்றும் அந்நாளில் எவ்வாறு தப்பிப்பீர்கள்?” (73:17)

﴿يَا أَيُّهَا النَّاسُ اتَّقُوا رَبَّكُمْ إِنَّ زَلْزَلَةَ السَّاعَةِ شَيْءٌ عَظِيمٌ ، يَوْمَ تَرَوْنَهَا تَذْهَلُ كُلُّ مُرْضِعَةٍ عَمَّا أَرْضَعَتْ وَتَضَعُ كُلُّ ذَاتِ حَمْلٍ حَمْلَهَا وَتَرَى النَّاسَ سُكَارَى وَمَا هُمْ بِسُكَارَى وَلَكِنَّ عَذَابَ اللهِ شَدِيدٌ﴾ [الحج:١،٢]

“மனிதர்களே! உங்கள் இறைவனை அஞ்சுங்கள் அந்த நேரத்தின் திடுக்கம் கடுமையான விஷயமாகும். நீங்கள் அதைக் காணும் நாளில் பாலூட்டும் ஒவ்வொருத்தியும் தான் பாலூட்டியதை மறந்துவிடுவாள். ஒவ்வொரு கர்ப்பிணியும் தான் கருவில் சுமந்ததை ஈன்றுவிடுவாள். போதையவயப்பட்டோராக மனிதர்களைக் காண்பீர். அவர்கள் போதையவயப்பட்டோர் அல்லர். மாறாக அல்லாஹ்வின் வேதனை கடுமையானது.” (22:1,2)

**மரணம்**

மரணம் இவ்வுலகில் உயிர் வாழும் ஒவ்வொருவருக்கும் இறுதிக் கட்டமாகும். அல்லாஹ் கூறுகிறான்:

﴿كُلُّ نَفْسٍ ذَائِقَةُ الْمَوْتِ﴾ [آل عمران:١٨٥] ﴿كُلُّ مَنْ عَلَيْهَا فَانٍ﴾ [الرَّحمن:٢٦]

"ஒவ்வொருவரும் மரணத்தைச் சுவைப்பவரே!" (3:185)

"இதில் (பூமியில்) உள்ள அனைவரும் அழிபவர்களே." (55:26) நபி (ஸல்) அவர்களை நோக்கி அல்லாஹ் கூறுகிறான்: ﴿إِنَّكَ مَيِّتٌ وَإِنَّهُمْ مَيِّتُونَ﴾ [الزُّمر:٣٠]

"(நபியே!) நீர் இறப்பவரே! அவர்களும் இறப்போரே!" (39:30)

இவ்வுலகில் எந்த மனிதனுக்கும் நிரந்தரம் கிடையாது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَمَا جَعَلْنَا لِبَشَرٍ مِنْ قَبْلِكَ الخُلْدَ أَفَإِنْ مِتَّ فَهُمُ الخَالِدُونَ﴾ [الأنبياء:٣٤]

"(நபியே!) உமக்கு முன் எந்த மனிதருக்கும் நாம் நிரந்தரத்தை ஏற்படுத்த வில்லை." (21:34)

1. மரணம் என்பது சந்தேகத்திற்கிடமில்லாத உறுதியான விஷயமாக இருந்தும் பெரும்பாலோர் இது பற்றி அலட்சியமாகவே உள்ளனர். ஒரு முஸ்லிம் மரணத்தை அதிகமதிகம் நினைவுகூர்வதும் இவ்வுலகில் நேரம் தவறிவிடுவதற்கு முன் மறுமைக்காக நற்செயல்களைச் செய்து தயாராக இருப்பதும் அவசிய மாகும்.

عن ابن عباس قال : قال رسول الله ﷺ لرجل وهو يعظه : اغتنم خمسا قبل خمس: شبابك قبل هرمك ، وصحتك قبل سقمك ، وغناءك قبل فقرك ، وفراغك قبل شغلك ، وحياتك قبل موتك (ك:١٨/ ٢١٦، هق في شعب الإيمان:٢١/ ٢٠٥،٢٠٣، ابن أبي شيبة:٨/ ١٢٧)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஐந்து நிலைமைகள் ஏற்படுவதற்கு முன் ஐந்து நிலைமைகளைப் பேணிக்கொள். மரணத்திற்கு முன் வாழ்வையும், நோய் வரும் முன் ஆரோக்கியத்தையும், வேலை வரும் முன் ஓய்வையும், வயோதிகத்திற்கு முன் வாலிபத்தையும், ஏழ்மைக்கு முன் செல்வ நிலையையும் பேணிக்கொள்." (ஹாகிம்-18/216, பைஹகீ ஷுஅபுல் ஈமான்- 21/203,205, இப்னு அபீ ஷைபா- 8/127)

மரணிப்பவன் இவ்வுலகின் சொத்து சுகங்களிலிருந்து எதையும் தன்னுடன் மண்ணறைக்கு எடுத்துச் செல்லப் போவதில்லை. அவனுடன் தங்கியிருப்பது அவனது செயல்கள் மட்டுமே. எனவே நற்செயல்களைச் சித்தப் படுத்திக் கொள்வதற்கு அக்கறை காட்டுங்கள். அதன் மூலம் தான் நீடித்த நற்பாக்

கியத்தை நீங்கள் அடைய முடியும். அல்லாஹ்வின் உதவியால் வேதனை யிலிருந்து ஈடேற்றமும் பெற முடியும்.

2. மனிதனின் வாழ்நாள் பற்றிய விஷயம் மறைவானதாகும். அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அதனை அறிய முடியாது. எனவே யார் எப்போது எந்த இடத்தில் மரணமடைவார் என்பதை யாரும் அறிய முடியாது. திண்ணமாக இது அல்லாஹ்வுக்கு மட்டுமே தெரிந்த மறைவான ஞானங்களுள் ஒன்றாகும்.

3. மரணம் வந்துவிட்டால் அதைத் தடுக்கவோ பிற்படுத்தவோ அதை விட்டும் வெருண்டோடவோ முடியாது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَلِكُلِّ أُمَّةٍ أَجَلٌ فَإِذَا جَاءَ أَجَلُهُمْ لَا يَسْتَأْخِرُونَ سَاعَةً وَلَا يَسْتَقْدِمُونَ﴾ [الأعراف:٣٤]

“ஒவ்வொரு சமுதாயத்துக்கும் ஒரு தவணை உள்ளது. அவர்களின் தவணை வந்துவிட்டால் சிறிது நேரம் அவர்கள் பிந்தவும் மாட்டார்கள், முந்தவும் மாட்டார்கள்.” (7:34)

4. ஒரு மு.ஃ.மினுக்கு (ஏக இறைவனை நம்புபவனுக்கு) மரணம் வந்துவிட்டால் நறுமணம் வீசுகின்ற அழகிய தோற்றத்துடன் மலக்குல் மௌத்- எனும் உயிரைக் கைப்பற்றும் வானவர் அவனிடம் வருகிறார். அவருடன் சொர்க்கத்தைக் கொண்டு நற்செய்தி கூறும் அருளுக்குரிய வானவர்களும் வருகிறார்கள்.

﴿إِنَّ الَّذِينَ قَالُوا رَبُّنَا اللهُ ثُمَّ اسْتَقَامُوا تَتَنَزَّلُ عَلَيْهِمُ الْمَلَائِكَةُ أَلَّا تَخَافُوا وَلَا تَحْزَنُوا وَأَبْشِرُوا بِالْجَنَّةِ الَّتِي كُنْتُمْ تُوعَدُونَ﴾ [فصّلت:٣٠]

அல்லாஹ் கூறுகிறான்: “எங்கள் இறைவன் அல்லாஹ் தான் என்று கூறி பின்னர் உறுதியாகவும் இருந்தோரிடம் வானவர்கள் இறங்கி, “அஞ்சாதீர்கள், கவலைப்படாதீர்கள், உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட சொர்க்கம் குறித்து மகிழ்ச்சியடையுங்கள்.” எனக் கூறுவார்கள்.” (41:30)

ஆனால் கா.ஃ.பிருக்கு (ஏக இறைவனை மறுப்ப வனுக்கு) மரணம் வந்தால் நாற்றமுள்ள கருமுகமுடைய, பயமுறுத்தும் தோற்றமுள்ள வானவர் வருவார். வேதனை பற்றி எச்சரிக்கை செய்யக்கூடிய வானவர்களும் அவருடன் வருவார்கள். அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَلَوْ تَرَى إِذِ الظَّالِمُونَ فِي غَمَرَاتِ الْمَوْتِ وَالْمَلَائِكَةُ بَاسِطُو أَيْدِيهِمْ أَخْرِجُوا أَنْفُسَكُمُ الْيَوْمَ تُجْزَوْنَ عَذَابَ الْهُونِ بِمَا كُنْتُمْ تَقُولُونَ عَلَى اللهِ غَيْرَ الْحَقِّ وَكُنْتُمْ عَنْ آيَاتِهِ تَسْتَكْبِرُونَ﴾ [ الأنعام:٩٣]

“அநியாயக்காரர்கள் மரண வேதனைகளில் இருக்கும்போது நீங்கள் அவர் களைப் பார்த்தால், வானவர்கள் தம் கைகளை நீட்டி உங்கள் உயிர்களை

வெளியேற்றுங்கள். இன்று இழிவு தரும் வேதனைதான் உங்களுக்கு கூலியாக வழங்கப்படும். ஏனெனில் நீங்கள் அல்லாஹ்வின் மீது உண்மை அல்லாத வற்றைக் கூறிக்கொண்டிருந்தீர்கள். இன்னும் அவனது வசனங்களை (ஏற்பதை) விட்டும் பெருமை அடித்துக் கொண்டிருந்தீர்கள் (என்று கூறுவார்கள்)." (6:93)

எனவே மரணம் வந்து விட்டால் உண்மை நிலை வெளிப்பட்டுவிடும். எல்லா மனிதர்களுக்கும் அவர்களது விஷயம் தெளிவாகிவிடும்.

﴿ حَتَّى إِذَا جَاءَ أَحَدَهُمُ الْمَوْتُ قَالَ رَبِّ ارْجِعُونِ ، لَعَلِّي أَعْمَلُ صَالِحًا فِيمَا تَرَكْتُ كَلَّا إِنَّهَا كَلِمَةٌ هُوَ قَائِلُهَا وَمِنْ وَرَائِهِمْ بَرْزَخٌ إِلَى يَوْمِ يُبْعَثُونَ ﴾ [ المؤمنون:٩٩،١٠٠]

அல்லாஹ் கூறுகிறான்: "முடிவில் அவர்களில் யாருக்கேனும் மரணம் வரும் போது, "என் இறைவனே! நான் விட்டு வந்ததில் நல்லறம் செய்வதற்காக என்னைத் திருப்பி அனுப்புங்கள்!" என்று கூறுவான். அவ்வாறில்லை! இது அவன் கூறும் (வாய்) வார்த்தைதான். அவர்கள் எழுப்பப்படும் நாள் வரை அவர்களுக்குப் பின்னால் திரை உள்ளது." (23:99,100)

எனவே மரணம் வந்துவிட்டால் (ஏக இறைவனை) நிராகரித்தோரும் (ஏக இறைவனுக்கு) மாறுசெய்தோரும் நல்லறங்கள் செய்வதற்காக உலகத்திற்குத் திரும்ப வருவதை விரும்புவார்கள். எனினும் காலம் கடந்த பிறகு கைசேதப் படுவது எந்தப் பலனும் அளிக்காது.

﴿ وَمَنْ يُضْلِلِ اللهُ فَمَا لَهُ مِنْ وَلِيٍّ مِنْ بَعْدِهِ وَتَرَى الظَّالِمِينَ لَمَّا رَأَوُا الْعَذَابَ يَقُولُونَ هَلْ إِلَى مَرَدٍّ مِنْ سَبِيلٍ ﴾ [الشُّورى:٤٤]

"அநியாயக்காரர்கள் வேதனையைக் காணும்போது 'தப்பிக்க ஏதும் வழி உண்டா?' எனக் கூறுவதை நீர் காண்பீர்." (42:44) என அல்லாஹ் கூறுகிறான்.

5. மரணிப்பதற்கு முன் யாருடைய கடைசி வார்த்தை "லாஇலாஹ இல்லல்லாஹ்" என்றாகிவிடுகிறதோ அவர் சொர்க்கம் செல்வார் என்பது அல்லாஹ் தன் அடியார்களுக்குச் செய்த கிருபையாகும்.

عَنْ مُعَاذِ بْنِ جَبَلٍ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ كَانَ آخِرُ كَلَامِهِ لَا إِلَهَ إِلَّا اللهُ دَخَلَ الْجَنَّةَ (د/ ٣١١٦)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: "இவ்வுலகில் ஒருவனின் கடைசி வார்த்தை "லாஇலாஹ இல்லல் லாஹ்" என்றாகிவிடுமானால் அவன் சொர்க்கம் செல்வான்." (அபூதாவூது-3116)

ஏனெனில் அந்த கஷ்டமான நேரத்தில் இந்த வார்த் தையைச் சொல்வதற்கு எந்த மனிதனாலும் முடியாது –அந்த வார்த்தை விஷயத்தில் தூய்மையாக

நடந்து கொண்டவனைத் தவிர! அந்த விஷயத்தில் தூய்மையாக நடந்து கொள்ளாதவன் மரண வேதனையில் அவனுக்கு ஏற்பட்டுகின்ற சிரமத்தால் இவ்வார்த்தையைச் சொல் வதற்கு அவனுக்கு கவனம் வராது. எனவேதான் மரண வேளையை அடைந்தவனுக்கு அங்கு இருக்கக்கூடிய வர்கள் லாஇலாஹ இல்லல்லாஹ் என்பதைச் சொல்லிக் கொடுப்பது நபிவழியாகும்.

عن أَبِي سَعِيدٍ قال قَالَ رَسُولُ الله ﷺ لَقِّنُوا مَوْتَاكُمْ لَا إِلَهَ إِلَّا الله (م/ ٩١٦)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: “உங்களில் மரண வேளையை அடைந்த வருக்கு லாயிலாஹ இல்லல்லாஹ் என்று சொல்லிக் கொடுங்கள்”(முஸ்லிம்-916) ஆனாலும் அவரை வற்புறுத்தாமல் இருக்க வேண்டும். ஏனெனில் அவர் சங்கடப்பட்டு பொருத்தமில்லாத வார்த்தையைச் சொல்லிவிடக் கூடாது.

**மண்ணறை**

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ أَنَّ رَسُولَ الله ﷺ قَالَ إِنَّ الْعَبْدَ إِذَا وُضِعَ فِي قَبْرِهِ وَتَوَلَّى عَنْهُ أَصْحَابُهُ وَإِنَّهُ لَيَسْمَعُ قَرْعَ نِعَالِهِمْ أَتَاهُ مَلَكَانِ فَيُقْعِدَانِهِ فَيَقُولَانِ مَا كُنْتَ تَقُولُ فِي هَذَا الرَّجُلِ لِمُحَمَّدٍ ﷺ فَأَمَّا الْمُؤْمِنُ فَيَقُولُ أَشْهَدُ أَنَّهُ عَبْدُ الله وَرَسُولُهُ فَيُقَالُ لَهُ انْظُرْ إِلَى مَقْعَدِكَ مِنْ النَّارِ قَدْ أَبْدَلَكَ الله بِهِ مَقْعَدًا مِنْ الْجَنَّةِ فَيَرَاهُمَا جَمِيعًا قَالَ قَتَادَةُ وَذُكِرَ لَنَا أَنَّهُ يُفْسَحُ لَهُ فِي قَبْرِهِ وَأَمَّا الْمُنَافِقُ وَالْكَافِرُ فَيُقَالُ لَهُ مَا كُنْتَ تَقُولُ فِي هَذَا الرَّجُلِ فَيَقُولُ لَا أَدْرِي كُنْتُ أَقُولُ مَا يَقُولُ النَّاسُ فَيُقَالُ لَا دَرَيْتَ وَلَا تَلَيْتَ وَيُضْرَبُ بِمَطَارِقَ مِنْ حَدِيدٍ ضَرْبَةً فَيَصِيحُ صَيْحَةً يَسْمَعُهَا مَنْ يَلِيهِ غَيْرَ الثَّقَلَيْنِ

(خ/ ١٣٧٤، نس/ ٢٠٢٤)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: “மனிதன் மண்ண றையில் வைக்கப்பட்டு அவனுடைய நண்பர்கள் அவனை விட்டும் திரும்பிச் செல்லும்போது அவன் அவர்களின் செருப்பின் ஓசையைக் கேட்பான். இரு மலக்குகள் அவனை உட்கார வைத்து “இம் மனிதரைப் பற்றி நீ என்ன கூறிக்கொண்டிருந்தாய்?” என அவனிடம் கேட்பார்கள். ஒரு மு.ஃ.மின் (ஏக இறைவனை நம்பியவன்), “இவர் அல்லாஹ்வின் அடியாரும் அவனது தூதருமாவார் என நான் சாட்சி கூறினேன்” என்று கூறுவான். “நரகத்தில் உனது இருப்பிடத்தைப் பார். இதற்குப் பகரமாக சொர்க் கத்தில் ஒரு இருப்பிடத்தை அல்லாஹ் உனக்கு ஏற்படுத்தி விட்டான்” என அவனிடம் கூறப்படும். அவ்விரண்டையும் அவன் பார்ப்பான்.

ஒரு கா.ஃ.பிர் (ஏக இறைவனை மறுத்தவன்) அல்லது நயவஞ்சகனிடம் “இம்மனிதரைப்பற்றி நீ என்ன கூறிக் கொண்டிருந்தாய்?” எனக் கேட்கப்படும். அதற்கவன், “எனக்குத் தெரியாது, மக்கள் கூறியதைக் கூறிக்கொண்டிருந்தேன்” எனக் கூறுவான். அப்போது அவனிடம் நீ அவரை அறிந்துகொள்ளவுமில்லை,

பின்பற்றவுமில்லை” எனக் கூறப்படும். பிறகு அவன் மீது இரும்புச் சம்மட்டி யால் ஓங்கி அடிக்கப்படும். அப்போது அவன் அலறுவான். அதை மனிதர்களையும் ஜின்களையும் தவிர அனைவரும் கேட்பார்கள்.” (புகாரி-1374, நஸயீ-2051)

பிரிந்த உயிர் மண்ணறையில் மீண்டும் உடலுக்கு கொண்டு வரப்படும் என்பது இவ்வுலகில் மனித அறிவு விளங்கிக்கொள்ள முடியாத மறுமை சம்பந்தப்பட்ட விஷயமாகும். பின்வரும் விஷயத்தில் முஸ்லிம்கள் அனைவரும் ஏகோபித்த முடிவில் உள்ளனர். அதாவது மனிதன் (ஏக இறைவனை) நம்பிக்கை கொண்ட வனாகவும் மண்ணறையின் இன்பத்திற்குத் தகுதியுள்ளவனாகவும் இருந்தால் மண்ணறையில் இன்பம் அனுபவிப்பான். அல்லது அவன் வேதனைக்குத் தகுதி யுடையவனாக இருந்து அல்லாஹ் அவனை மன்னிக்கவில்லையெனில் வேதனை செய்யப்படுவான்.

﴿ النَّارُ يُعْرَضُونَ عَلَيْهَا غُدُوًّا وَعَشِيًّا وَيَوْمَ تَقُومُ السَّاعَةُ أَدْخِلُوا آلَ فِرْعَوْنَ أَشَدَّ الْعَذَابِ ﴾ [ غافر:٤٦ ]

அல்லாஹ் கூறுகிறான்: “காலையிலும் மாலையிலும் நரக நெருப்பு முன் அவர்கள் கொண்டு வரப்படுவார்கள். மேலும் மறுமை நாள் வரும்போது “ஃபிர்அவ்னின் கூட்டத்தாரை கடுமையான வேதனையில் புகுத்துங்கள்” எனக் கூறப்படும்.” (40:46)

((تَعَوَّذُوا بِاللهِ مِنْ عَذَابِ الْقَبْرِ)) (م/ ٢٨٦٧)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “மண்ணறையின் வேதனையை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுங்கள்.” (அபூதாவூத்-5518)

சீரான அறிவு மண்ணறை வேதனையை மறுக்காது. காரணம் இதுபோன்ற நிலையை மனிதன் தன் வாழ்வில் பார்க்கத்தான் செய்கிறான். உதாரணமாக தூங்கக்கூடிய ஒருவன் கனவில் கடினமாக வேதனை செய்யப்படுவதாக உணர்ந்து சப்தமிடுகிறான், உதவியும் தேடுகிறான். ஆனால் அவனுக்கு அருகில் இருப்பவன் இதை உணர்வதில்லை. ஆனாலும் மரணத்திற்குப் பின்பு நடைபெறும் நிகழ்வுகளுக்கும் உலகில் உயிரோடு இருக்கும்போது நிகழும் விஷயங் களுக்கும் இடையில் மிகப் பெரிய வேறுபாடு உள்ளது. மண்ணறை வேதனை உடலுக்கும் உயிருக்கும் சேர்த்து அளிக்கப்படுவதாகும்.

عن عُثْمَانَ قَالَ إِنَّ رَسُولَ الله ﷺ قَالَ إِنَّ الْقَبْرَ أَوَّلُ مَنْزِلٍ مِنْ مَنَازِلِ الْآخِرَةِ فَإِنْ نَجَا مِنْهُ فَمَا بَعْدَهُ أَيْسَرُ مِنْهُ وَإِنْ لَمْ يَنْجُ مِنْهُ فَمَا بَعْدَهُ أَشَدُّ مِنْهُ (ت/ ٢٣٠٨)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: “மண்ணறை என்பது மறுமையின் நிலை களில் முதல் நிலையாகும். இதில் இருந்து ஒருவன் ஈடேற்றம் பெற்றுவிட்டால் இதன் பிறகு உள்ளவை இதை விட எளிதானதாகும். இதிலிருந்து அவன்

ஈடேற்றம் பெறாவிட்டால் இதற்குப் பின்னுள்ளவை இதை விடக் கடினமான தாகும். (திர்மிதி-2308)

எனவே மண்ணறை வேதனையிலிருந்து முஸ்லிம்கள் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுவது அவசியமாகும். குறிப்பாக தொழுகையில் ஸலாம் கொடுப்பதற்கு முன் பாதுகாவல் தேட வேண்டும்.

இவ்வாறே மண்ணறையின் வேதனைக்கும் நரகத்தி னுடைய வேதனைக்கும் முதற் காரணமான பாவங்களிலிருந்து விலகுவதற்கு நல்லார்வம் காட்ட வேண்டும். மண்ணறை வேதனை என்று சொல்லப்படுவதற்குரிய காரணம் பெரும்பாலும் மக்கள் மண்ணறையில் தான் அடக்கம் செய்யப்படுகிறார்கள் என்பதனால் தான். ஆனால் நீரில் மூழ்கியவர், நெருப்பில் எரிந்துபோனவர், மிருகங்களால் தின்னப்பட்டவர் போன்றவர்கள் பர்ஸக்- எனும் திரை மறைவு உலகில் வேதனை செய்யப்படுவார்கள் அல்லது இன்பம் வழங்கப்படுவார்கள்.

மண்ணறை வேதனை என்பது இரும்பு போன்ற சம்மட்டியால் அடிக்கப்படுவது அல்லது அவனது விலா எலும்புகள் ஒன்றோடொன்று பின்னிப் பிணையுமளவுக்கு நெருக்கப்படுவது, மண்ணறையில் இருள் நிரப்பப்படுவது, நெருப்பினாலான விரிப்பு விரிக்கப்படுவது, நரகிலிந்து ஒரு வாசல் திறந்து வைக்கப்படுவது, அவனின் தீய செயல்கள் துர்நாற்றமுள்ள, அருவருப்பான முகமுடைய மனிதன் போன்று உருவெடுத்து அவனுடன் அமர்ந்திருப்பது... இப்படிப் பலவிதத்தில் ஏற்படும்.

அடக்கம் செய்யப்பட்ட மனிதன் இறைநிராகரிப்பாள னாகவோ, நயவஞ் சகனாகவோ இருந்தால் வேதனை நிரந்தரமாக இருக்கும். பாவம் செய்த இறை நம்பிக்கை யாளனாக இருந்தால் அவன் செய்த பாவம் அளவிற்கு பல்வேறு வேதனைகள் கொடுக்கப்படும். சிலசமயம் வேதனை நிறுத்தப்படும்.

ஆனால் நம்பிக்கையாளன், மண்ணறையில் அருள் பாலிக்கப்படுவான். அதாவது அவனது மண்ணறை விசாலமாக்கப்பட்டு ஒளி பாய்ச்சப்படும். சொர்க்கவாசல் திறக்கப்பட்டு அதன் வழியாக அதன் நறுமணம் வீசிக்கொண் டிருக்கும். சொர்க்கத்தின் விரிப்பு விரிக்கப்படும். அவனது நற்செயல் அழகிய மனித வடிவில் உருவெடுத்து மண்ண றையில் அவனை மகிழ்விக்கும்.

**இறுதி நாள் ஏற்படுதலும் அதன் அடையாளங்களும்**

1. அல்லாஹ் இவ்வுலகத்தை நிரந்தரமாக இருப்ப தற்காக படைக்கவில்லை. மாறாக அதற்கென முடிவு நாள் வரும். அந்நாளே மறுமை ஏற்படக்கூடிய நாளாகும். அது ஐயத்திற்கிடமில்லாத உண்மையும் ஆகும்.

﴿إِنَّ السَّاعَةَ لَآتِيَةٌ لَا رَيْبَ فِيهَا وَلَكِنَّ أَكْثَرَ النَّاسِ لَا يُؤْمِنُونَ﴾ [غافر:٥٩]

அல்லாஹ் கூறுகிறான்: “அந்த நாள் வரக்கூடியதே! அதில் எந்தச் சந்தேகம் இல்லை.” (40:59) ﴿وَقَالَ الَّذِينَ كَفَرُوا لَا تَأْتِينَا السَّاعَةُ قُلْ بَلَى وَرَبِّي لَتَأْتِيَنَّكُمْ﴾ [ سبأ:٣]

“அந்த நாள் எங்களிடம் வராது என்று இறைநிராகரிப்பாளர்கள் கூறுகின்றனர். அவ்வாறல்ல! என் இறைவன் மீது ஆணையாக! அது உங்களிடம் வரும் என்று கூறுவீரா!” (34:3)

இறுதி நாள் சமீபத்தில் இருக்கிறது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿اقْتَرَبَتِ السَّاعَةُ﴾ [القمر:١] ﴿اقْتَرَبَ لِلنَّاسِ حِسَابُهُمْ وَهُمْ فِي غَفْلَةٍ مُعْرِضُونَ﴾ [الأنبياء:١]

“அந்த நாள் நெருங்கிவிட்டது.” (54:1)

“மனிதர்களுக்கு அவர்களின் விசாரணை நெருங்கி விட்டது. அவர்களோ அதைப் புறக்கணித்து கவனமின்றி உள்ளனர்.” (21:1)

எனினும் அது சமீபத்தில் இருக்கிறதென்பது மனிதர்கள் விளங்கி வைத்திருக்கும் அளவைப் பொருத்ததல்ல. மாறாக அல்லாஹ்வின் ஞானத்தைப் பொருத்ததாகும். உலகில் கடந்துவிட்ட கால அளவைப் பொருத்ததாகும். மறுமை பற்றிய அறிவு அல்லாஹ் தனக்கே சொந்தமாக்கிக் கொண்ட மறைவான விஷயங்களிலுள்ளதாகும். அவன் இவ்விஷயத்தை தன் படைப்புகளில் எவருக்கும் அறிவித்துக் கொடுக்கவில்லை.

﴿يَسْأَلُكَ النَّاسُ عَنِ السَّاعَةِ قُلْ إِنَّمَا عِلْمُهَا عِنْدَ اللهِ وَمَا يُدْرِيكَ لَعَلَّ السَّاعَةَ تَكُونُ قَرِيبًا﴾ [الأحزاب:٦٣]

அல்லாஹ் கூறுகிறான்: “(நபியே!) மறுமை நாள் பற்றி மக்கள் உம்மிடம் கேட்கின்றனர். ‘அது பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது எனக் கூறுவீராக!’ அந்த நாள் சமீபத்தில் இருக்கக்கூடும் என்பது உமக்கு எப்படித் தெரியும்?”(33:63)

நபி(ஸல்) அவர்கள் இறுதி நாள் நெருங்கிவிட்டதை அறிவிக்கக்கூடிய அடையாளங்களைக் கூறியுள்ளனர். அவை: தஜ்ஜால் வருவது, அவனுடைய வருகை மக்களுக்கு மிகப் பெரும் குழப்பமாக அமையும். சில அற்புதங்களைச் செய்து காட்டுவதற்கு அல்லாஹ் அவனுக்கு சக்தி வழங்குவான். அதன் மூலம் பெரும்பாலான மக்கள் ஏமாந்து போய்விடுவார்கள். அதாவது தஜ்ஜால் வானத்திற்கு உத்தரவு போடுவான். அது மழையைப் பொழியும். புற்பூண்டுகளை முளைவிக்கும்படி பூமிக்குக் கட்டளையிடுவான். அது அவற்றை முளைவிக்கும். இறந்தவனை உயிர்ப்பிப்பான். இதுபோன்ற இன்னும் பல அற்புதங்களைச் செய்வான்.

அவனைப் பற்றி நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: அவன் ஒற்றைக் கண்ணன். சொர்க்கம், நரகம் போன்றதைக் கொண்டு வருவான். அவன் சொர்க்கம் என்று

கூறுவது நரகமாகும். அவன் நரகமென்று கூறுவது சொர்க்கமாகும். அவன் பூமியில் நாற்பது நாட்கள் இருப்பான். அதில் ஒரு நாள் ஒரு வருடம் போன்றும் ஒரு நாள் ஒரு மாதம் போன்றும் ஒரு நாள் ஒரு வாரம் போன்றும் ஏனைய நாட்கள் சாதாரண நாட்கள் போன்று மிருக்கும். பூமியில் மக்கா, மதீனா தவிர அவன் நுழையாத இடங்களே இருக்காது.

மேலும் மறுமையின் அடையாளங்களில் இதுவும் ஒன்றாகும். அதாவது சுபுஹுத் தொழுகை நேரத்தில் டமாஸ்கஸின் கிழக்குப் பகுதியிலுள்ள வெள்ளை மனாராவிலிருந்து ஈஸா(அலை)அவர்கள் இறங்கி வருவார்கள். அங்கு அவர்கள் சுபுஹுத் தொழுகையை மக்களுடன் தொழுவார்கள். அதன் பின்னர் தஜ்ஜாலை தேடிச் சென்று கொன்றுவிடுவார்கள். சூரியன் மேற்கில் உதிப்பதும் இறுதி நாளின் அடையாளமாகும். அதை மக்கள் காணும்போது பயந்து நடுங்கி நம்பிக்கை கொள்வார்கள். எனினும் அவர்களின் நம்பிக்கை அவர்களுக்குப் பலன ளிக்காது. இறுதி நாளுக்கு இன்னும் பல அடையாளங்கள் இருக்கின்றன.

இறுதி நாள் தீய மனிதர்கள் மீதே ஏற்படும். அதாவது இறுதி நாள் ஏற்படும் முன்(ஏகஇறைவனை) நம்பிக்கை கொண்டோரின் உயிர்களைக் கைப்பற்றக் கூடிய தூய்மையான காற்றை அல்லாஹ் அனுப்பி வைப்பான். அதன் பின்னர் அல்லாஹ் எல்லாப் படைப்பினங்களையும் மரணிக்கச் செய்து இவ்வுலகத்தை முடிவுக்குக் கொண்டு வர வேண்டுமென்று நாடினால் சூர் ஊதும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்ட வானவரிடம் அதில் ஊதும்படி ஏவுவான். (சூர் என்பது பெரிய தொரு எக்காளமாகும்.) மக்கள் அந்த சப்தத்தைக் கேட்டவுடன் மூர்ச்சையாகி விடுவார்கள்.

﴿ وَنُفِخَ فِي الصُّورِ فَصَعِقَ مَنْ فِي السَّمَاوَاتِ وَمَنْ فِي الأَرْضِ إِلَّا مَنْ شَاءَ اللهُ
ثُمَّ نُفِخَ فِيهِ أُخْرَى فَإِذَا هُمْ قِيَامٌ يَنْظُرُونَ ﴾ [الزُّمر:٦٨]

அல்லாஹ் கூறுகிறான்: சூர் ஊதப்படும். அப்போது அல்லாஹ் நாடியவர் களைத் தவிர வானம், பூமியிலுள்ள அனைவரும் மூர்ச்சையாவார்கள். (39:68)

இது வெள்ளிக்கிழமை ஏற்படும். அதன் பின்னர் வானவர்கள் அனைவரும் மரணித்து விடுவார்கள். அல்லாஹ்வைத் தவிர எவரும் இருக்க மாட்டார்கள்.

3. மனிதனின் உடலனைத்தும் அழிந்துவிடும். அவனது முதுகந்தண்டின் கடைசியிலுள்ள ஒரு சிறு எலும்பைத் தவிர மற்ற எல்லாவற்றையும் பூமி தின்று விடும். எனினும் நபிமார்களின் உடல்களைப் பூமி தின்னாது. அல்லாஹ் வானி லிருந்து ஒரு தண்ணீரை இறக்கி வைப்பான். (அழிக்கப்பட்ட) உடல்கள் வளர்ந்து

விடும். அல்லாஹ் மக்களை எழுப்ப நாடினால் சூர் ஊதும் பொறுப்பிற்குரிய வானவர் இஸ்ரா.ஃ.பீலை உயிர்ப் பிப்பான். அவர் இரண்டாம் முறை சூர் ஊதுவார். அல்லாஹ் எல்லாப் படைப்புகளையும் உயிர்ப்பிப்பான். மக்கள் தம் மண்ணறை களிலிருந்து ஆரம்பமாக அல்லாஹ் அவர்களைப் படைத்தது போன்று செருப்பு அணியாதவர்களாக, நிர்வாணிகளாக, விருத்தசேதனம் செய்யப்படாதவர்களாக வெளிவருவார்கள். ﴿ وَنُفِخَ فِي الصُّورِ فَإِذَا هُمْ مِنَ الأَجْدَاثِ إِلَى رَبِّهِمْ يَنْسِلُونَ ﴾ [يس:٥١]

அல்லாஹ் கூறுகிறான்: “சூர் ஊதப்படும். உடனே அவர்கள் மண்ணறை களிலிருந்து தமது இறைவனை நோக்கி விரைவார்கள்.” (36:51)

﴿ يَوْمَ يَخْرُجُونَ مِنَ الأَجْدَاثِ سِرَاعًا كَأَنَّهُمْ إِلَى نُصُبٍ يُوفِضُونَ ، خَاشِعَةً أَبْصَارُهُمْ تَرْهَقُهُمْ ذِلَّةٌ ذَلِكَ اليَوْمُ الَّذِي كَانُوا يُوعَدُونَ ﴾ [المعارج: ٤٣،٤٤]

பலி பீடங்களை நோக்கி விரைந்து செல்பவர்களைப்போல் அந்நாளில் மண்ணறைகளிலிருந்து வேகமாக வெளியேறுவார்கள். அவர்களின் பார்வை தாழ்ந் திருக்கும். இழிவு அவர்களைச் சூழ்ந்து கொள்ளும். அந்நாள்தான் அவர்கள் எச்சரிக்கப்பட்ட நாள்.”(70:43,44)

முதலாவதாக பூமி பிளந்து வெளிப்படுபவர், நபி மொழியில் வந்துள்ளதுபோல் நம்முடைய நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் தாம்.

இதன் பின் மக்கள் ஒன்றுதிரட்டப்படும் மைதானத்திற்கு கொண்டு வரப்படு வார்கள். அது பரந்த விசாலமான பூமியாகும். (ஏக இறைவனை) நிராகரித்த வர்கள் முகம் குப்புற கொண்டு வரப்படுவார்கள். ‘முகம் குப்புற எப்படி கொண்டு வரப்படுவர்கள்?’ என நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கவர்கள்,

(( أَلَيْسَ الَّذِي أَمْشَاهُ عَلَى الرِّجْلَيْنِ فِي الدُّنْيَا قَادِرًا عَلَى أَنْ يُمْشِيَهُ عَلَى وَجْهِهِ يَوْمَ الْقِيَامَةِ))

(خ/ ٤٧٦٠، م/ ٢٨٠٦)

“அவர்களைப் பாதங்களால் நடக்க வைத்தவன் அவர்களை முகம் குப்புற நடக்க வைக்கவும் சக்தி உள்ளவன்” என்று கூறினார்கள். (புகாரி-4760, முஸ்லிம்-2806)

அல்லாஹ்வின் நல்லுரையைப் புறக்கணித்தவன் மறுமையில் குருடனாக எழுப்பப்படுவான். சூரியன் மக்களை நெருங்கியிருக்கும் அந்நாளில் மனிதர்கள் அவரவர்களின் செயல்கள் அளவிற்கு வியர்வையில் இருப்பார்கள். சிலருக்கு கணுக்கால் வரை வியர்வை இருக்கும். சிலருக்கு இடுப்பளவு இருக்கும். இன்னும் சிலர் முழுவதும் வியர்வையில் மூழ்கிவிடுவார்கள்.

அல்லாஹ்வின் நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத அந்நாளில் அவனது நிழலின் கீழ் நிழல் கொடுக்கப்படுபவர்களும் அங்கு இருப்பார்கள்.

عَنْ أَبِي هُرَيْرَةَ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ سَبْعَةٌ يُظِلُّهُمْ اللهُ فِي ظِلِّهِ يَوْمَ لَا ظِلَّ إِلَّا ظِلُّهُ الْإِمَامُ الْعَادِلُ وَشَابٌّ نَشَأَ فِي عِبَادَةِ رَبِّهِ وَرَجُلٌ قَلْبُهُ مُعَلَّقٌ فِي الْمَسَاجِدِ وَرَجُلَانِ تَحَابَّا فِي اللهِ اجْتَمَعَا عَلَيْهِ وَتَفَرَّقَا عَلَيْهِ وَرَجُلٌ طَلَبَتْهُ امْرَأَةٌ ذَاتُ مَنْصِبٍ وَجَمَالٍ فَقَالَ إِنِّي أَخَافُ اللهَ وَرَجُلٌ تَصَدَّقَ أَخْفَى حَتَّى لَا تَعْلَمَ شِمَالُهُ مَا تُنْفِقُ يَمِينُهُ وَرَجُلٌ ذَكَرَ اللهَ خَالِيًا فَفَاضَتْ عَيْنَاهُ (خ/ ٦٦٠، م/ ١٠٣١)

நபி(ஸல்)கூறினார்கள்: “அல்லாஹ்வின் நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத நாளில் அல்லாஹ் ஏழு நபர்களுக்கு தனது நிழலின் கீழ் நிழல் கொடுப்பான். நீதி வழுவாத ஆட்சியாளன், இறைவழிபாட்டில் இளமையைக் கழித்த இளைஞன், தன் உள்ளத்தைப் பள்ளியுடன் தொடர்புபடுத்திக்கொண்ட மனிதன், அல்லாஹ்வுக்காக நேசம் கொண்ட இரு மனிதர்கள், அவர்கள் அல்லாஹ்வுக்காகவே ஒன்று கூடுவார்கள். அல்லாஹ்வுக்காகவே பிரிந்து செல்வார்கள். அழகும் செல்வாக்குமுள்ள ஒரு பெண் (தவறு செய்ய) அழைத்த போது ‘அல்லாஹ்வை அஞ்சுகிறேன்’ எனக் கூறி(விலகி)ய மனிதன், வலது கை கொடுப்பதை இடது கை அறியாவண்ணம் தர்மம் செய்த மனிதன், தனிமையில் அல்லாஹ்வை நினைவு கூர்ந்து, கண்ணீர் சிந்திய மனிதன்.” (புகாரி-660, முஸ்லிம்-1031)

இது ஆண்களுக்கு மட்டுமல்ல. பெண்களுக்கும் தான். அவர்களும் தம் செயல்கள் குறித்து விசாரிக்கப்படுவர். அவர்களின் செயல்கள் நல்லவையாக இருந்தால் நன்மையும் தீயவையாக இருந்தால் தீமையும் அவர்களுக்குக் கிடைக்கும் கேள்வி, கணக்கும் நற்கூலியும் தண்டனையும் ஆண்களுக்கு இருப்பது போலவே பெண்களுக்கும் உண்டு.

அந்நாளில் மக்கள் கடும் தாகத்தில் இருப்பார்கள். அன்றைய ஒரு நாள் (நம் கணக்குப்படி) ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்குச் சமம். எனினும் (ஏக) இறைவனை நம்பியவனுக்கு அந்நேரம் கடமையான ஒரு தொழுகையை நிறை வேற்றுவதுபோல் சீக்கிரம் கழிந்துவிடும். முஸ்லிம்கள் நபி(ஸல்)அவர்களின் தண்ணீர்த் தடாகத்திற்கு தண்ணீர் அருந்த வருவார்கள்.

தண்ணீர்த் தடாகமென்பது நபி(ஸல்)அவர்களுக்கு மட்டும் அல்லாஹ் வழங்கிய மகத்தான அந்தஸ்தாகும். ஆகும். மறுமை நாளில் நபி(ஸல்) அவர்களின் சமுதாயத்தினர் அதில் நீர் அருந்துவார்கள். அதன் தண்ணீர் பாலை விட மிக வெண்மையாகவும், தேனைவிட இனிப்பாகவும் கஸ்தூரி வாடையை விட நறுமணம் உள்ளதாகவுமிருக்கும். அதன் பாத்திரங்கள் வானின் நட்சத்தி

ரங்களின் எண்ணிக்கையளவு இருக்கும். அதில் ஒரு முறை நீர் அருந்தியவர் அதன் பின் ஒருபோதும் தாகிக்க மாட்டார்.

மஹ்ஷர் மைதானத்தில் மக்கள் தம்மிடையே தீர்ப்புச் செய்யப்படுவதையும் கேள்வி கணக்குக் கேட்கப்படு வதையும் எதிர்பார்த்து அங்கு நீண்ட நேரம் காத்திருப் பார்கள். அவர்கள் துன்பத்திலும் கடும் வெப்பத்திலும் இருக்கின்ற நிலையில் இவ்வாறு நிற்பதும் எதிர்பார்ப் பதும் நீண்டுவிடுகிறபோது மக்கள் தம்மிடையே தீர்ப்பு செய்யப்படுவதற்காக அல்லாஹ்விடம் தமக்காக பரிந்துரை செய்பவர்களைத் தேடுவார்கள். அப்போது ஆதம் (அலை) அவர்களிடம் வருவார்கள். அவர்கள் தமது இயலாமையைக் கூறிவிடுவார்கள்.பிறகு முறையே நூஹ்(அலை), இப்றாஹீம்(அலை), மூஸா(அலை), ஈஸா(அலை) என ஒவ்வொரு நபியிடமும் வருவார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தத்தமது இயலாமையைக் கூறிவிடுவார்கள். இறுதியாக முஹம்மது(ஸல்) அவர்களிடம் வருவார்கள். அப்போது அவர்கள் அதற்கு தாமே தகுதியானவர் எனக் கூறி, அர்ஷுக்குக் கீழ் சுஜூது செய்வார்கள். அல்லாஹ் அவர்களுக்கு உதிக்கச் செய்கின்ற எல்லாப் புகழ் வார்த்தைகளையும் கொண்டு அல்லாஹ்வைப் புகழ்வார்கள். அப்போது “முஹம்மதே! உமது தலையை உயர்த்தும், நீர் கேளும் கொடுக்கப்படுவீர். பரிந்துரை செய்யும், உமது பரிந்துரை ஏற்றுக் கொள்ளப்படும்” எனக் கூறப்படும். அப்போது தீர்ப்புச் செய்யப்படுவதற்கும் கணக்குக் கேட்கப்படுவதற்கும் அல்லாஹ் அனுமதி வழங்குவான். முஹம்மது(ஸல்)அவர்களின் சமுதாயத்தினர் தாம் முதன் முதலில் கேள்வி கணக்கு கேட்கப்படுவார்கள்.

ஒரு அடியான் செய்த செயல்களில் முதலாவதாக விசாரிக்கப்படுவது தொழுகை பற்றியாகும். அது சரியாக இருந்து ஏற்கப்பட்டுவிட்டால் ஏனைய செயல்கள் கவனிக்கப்படும். அது மறுக்கப்பட்டுவிட்டால் ஏனைய செயல்களும் மறுக்கப்படும்.

மேலும் ஒரு அடியான் ஐந்து காரியங்கள் பற்றி விசாரிக்கப்படுவான். அதாவது அவன் தனது வாழ்நாளை எவ்வாறு கழித்தான்? தன் வாலிபத்தை எதில் ஈடுபடுத்தினான்? தனது பொருளை எங்கிருந்து சம்பாதித்து எவ்வழியில் செலவழித்தான்? தான் கற்றதில் எந்த அளவுக்கு செயல்படுத்தினான்? என்றெல்லாம் விசாரிக்கப்படுவான்.

அடியார்களிடையே தீர்ப்பு வழங்கப்படும் காரியங்களில் முதல் காரியம் கொலைகள் பற்றியதாகும். அந்நாளில் பழிக்குப் பழிவாங்குவது நன்மை, தீமைகளைக் கொண்டே இருக்கும். ஒரு மனிதனின் நன்மை எடுக்கப்பட்டு

அவனால் பாதிக்கப்பட்டவனிடம் கொடுக்கப்படும். நன்மைகள் தீர்ந்துவிட்டால் பாதிக்கப்பட்டவனின் தீமையை எடுத்து இவன் மீது சுமத்தப்படும்.

அங்கு ஸிராத் என்னும் பாலம் அமைக்கப்படும். அது முடியை விட மெல்லி யதாகவும் வாளை விடக் கூர்மையாகவுமிருக்கும். அது நரகத்தின் மீது அமைக்கப்பட்டிருக்கும். மக்கள் அதில் அவரவர் செயல்களைப் பொறுத்து கடந்து செல்வார்கள். சிலர் கண்சிமிட்டும் நேரத்திற்குள் கடந்துவிடுவார்கள். சிலர் காற்றுவேகத்தில் செல்வார்கள். வேறு சிலர் மிக விரைவாகச் செல்லும் குதிரை போன்றும் செல்வார்கள். இன்னும் தவழ்ந்து, தவழ்ந்து செல்பவர்களும் இருப்பார்கள். அப்பாலத்தில் இரும்புக் கொக்கிகள் இருக்கும். அவை மனிதர் களைப் பிடித்து நரகில் தள்ளிவிடும்.

(ஏக இறைவனை) நிராகரித்தவர்கள் நரகில் வீழ்வார்கள். நம்பிக்கை கொண்ட வர்களில் அல்லாஹ் நாடிய சில பாவிகளும் நரகில் விழுவார்கள். (ஏக இறைவனை) நிராகரித்தவர்கள் நிரந்தரமாக நரகிலேயே இருப்பார்கள். நம்பிக் கையாளர்களில் பாவிகள் அல்லாஹ் நாடிய அளவுக்கு வேதனை செய்யப்பட்டு பின் சொர்க்கம் செல்வார்கள்.

நபிமார்கள் ரசூல்மார்கள் மற்றும் நல்லோர்களில் தான் நாடியவருக்கு அல்லாஹ் பரிந்துரை செய்ய அனுமதி வழங்குவான். அதன்படி அவர்கள் நரகில் நுழைந்துவிட்ட- அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்காத சிலருக்கு பரிந்துரை செய்வார்கள். அவர்களை அல்லாஹ் நரகிலிருந்து வெளியேற்றுவான்.

இப்பாலத்தை கடந்து செல்லும் சொர்க்கவாசிகள் சொர்க்கத்திற்கும், நரகத்திற்குமிடையே அமைக்கப்பட்டிருக்கும் ஒரு பாலத்தில் நிற்பார்கள். அங்கு அவர்களில் சிலருக்கு சிலரிடமிருந்து கணக்குத் தீர்க்கப்படும். யாரேனும் தன் சகோதரனுக்கு அநியாயம் செய்திருந்தால் அவரிடமிருந்து அந்தச் சகோத ரருக்காகப் பழிக்குப்பழி வாங்கப்பட்டு, அவர்கள் பரஸ்பரம் திருப்தி அடையாத வரை சொர்க்கம் செல்ல முடியாது.

சொர்க்கவாசிகள் சொர்க்கத்திலும் நரகவாசிகள் நரகத்திலும் நுழைந்து விட்டால் மரணம் ஒரு ஆட்டின் வடிவில் கொண்டுவரப்பட்டு சொர்க்கத்திற்கும் நரகத்திற்குமிடையே அறுக்கப்படும். சொர்க்கவாசிகளும் நரகவாசிகளும் அதைப் பார்ப்பார்கள். பிறகு “சொர்க்கவாசிகளே! உங்களுக்கு மரணமே கிடையாது இதில் நீங்கள் நிரந்தரமாக இருங்கள்” எனவும், “நரகவாசிகளே! உங்களுக்கும் மரணமே கிடையாது இதிலேயே நீங்கள் நிரந்தரமாக இருங்கள்” எனவும் கூறப்படும். மகிழ்ச்சியால் ஒருவருக்கு மரணம் ஏற்படும் என்றிருந்தால் சொர்க்க வாசிகள் தங்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியால் மரணித்து விடுவார்கள்.

துயரத்தால் ஒருவருக்கு மரணம் ஏற்படும் என்றிருந்தால் நரகவாசிகள் தங்களுக்கு ஏற்பட்ட துயரத்தைக் கண்டு மரணித்து விடுவார்கள்.

**நரகமும் அதன் வேதனையும்**

﴿ فَاتَّقُوا النَّارَ الَّتِي وَقُودُهَا النَّاسُ وَالحِجَارَةُ أُعِدَّتْ لِلْكَافِرِينَ ﴾ [البقرة:٢٤]

"(நரக)நெருப்புக்கு அஞ்சுங்கள்! (தீய) மனிதர்களும் கற்களுமே அதன் எரிபொருள். (ஏக) இறைநிராகரிப் போருக்காகவே அது தயாரிக்கப்பட்டுள்ளது" என அல்லாஹ் கூறுகிறான். (2:24)

عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ الله ﷺ قَالَ نَارُكُمْ جُزْءٌ مِنْ سَبْعِينَ جُزْءًا مِنْ نَارِ جَهَنَّمَ قِيلَ يَا رَسُولَ الله إِنْ كَانَتْ لَكَافِيَةً قَالَ فُضِّلَتْ عَلَيْهِنَّ بِتِسْعَةٍ وَسِتِّينَ جُزْءًا كُلُّهُنَّ مِثْلُ حَرِّهَا (خ/ ٣٢٦٥، م/ ٢٨٤٣)

நபி (ஸல்) அவர்கள் தமது தோழர்களிடம், "நீங்கள் எரிக்கும் இந்நெருப்பு நரகின் நெருப்பில் எழுபது மடங்கு மடங்குகளில் ஒன்றாகும்" என்று கூறினார்கள். உடனே 'அல்லாஹ்வின் தூதரே! (பாவிகளைத் தண்டிக்க) இதுவே போதுமே' எனத் தோழர்கள் கூறினார்கள். அதற்கு நபி (ஸல்)அவர்கள், "(அவ்வாறல்ல) இந்த உலக நெருப்பை விட நரக நெருப்பு அறுபத்தொன்பது மடங்குகள் அதிகப் படுத்தப்பட்டுள்ளது. அதில் ஒவ்வொரு மடங்கும் உலக நெருப்பின் வெப்பத் திற்குச் சமமானதாகும்" என்று கூறினார்கள். (புகாரி-3265, முஸ்லிம்-2843)

நரகம் ஏழு அடுக்குகளைக் கொண்டதாகும். அதில் ஒவ்வொரு அடுக்கும் மற்றதை விட மிகக் கடுமையான வேதனை உடையதாகும். அதன் ஒவ்வொரு அடுக்கிலும் அதற்குரியவர்கள் அவரவரின் செயல்களைப் பொறுத்து இருப்பார்கள்.

நயவஞ்சகர்கள் நரகத்தின் அடித்தட்டிலிருப்பார்கள். அதுதான் மிகக் கடுமையான வேதனைக்குரியதாகும். (ஏக இறைவனை)மறுத்தவர்களுக்கு நரகத்தில் வேதனை இடைவிடாமல் நிரந்தரமாக இருக்கும். அவர்கள் கரிந்து விடும்போதெல்லாம் வேதனையை அதிகப்படுத்து வதற்காக திரும்பவும் பழைய நிலைக்கு கொண்டு வரப்படுவார்கள்.

﴿ كُلَّمَا نَضِجَتْ جُلُودُهُمْ بَدَّلْنَاهُمْ جُلُودًا غَيْرَهَا لِيَذُوقُوا العَذَابَ إِنَّ اللهَ كَانَ عَزِيزًا حَكِيمًا ﴾ [النساء:٥٦]

அல்லாஹ் கூறுகிறான்: "அவர்களின் தோல்கள் கருகும்போதெல்லாம் அவர்கள் வேதனையை சுவைப்பதற்காக வேறு தோல்களை அவர்களுக்கு மாற்றுவோம்." (4:56)

﴿ وَالَّذِينَ كَفَرُوا لَهُمْ نَارُ جَهَنَّمَ لَا يُقْضَى عَلَيْهِمْ فَيَمُوتُوا وَلَا يُخَفَّفُ عَنْهُمْ مِنْ عَذَابِهَا كَذَلِكَ نَجْزِي كُلَّ كَفُورٍ ﴾ [فاطر:٣٦]

“(நம்மை) நிராகரித்தோருக்கு நரக நெருப்பு உள்ளது. அவர்கள் மரணிக்கும் வகையில் அவர்களின் கதை முடிக்கப்படவும் மாட்டாது. அதன் வேதனை அவர்களுக்கு குறைக்கப்படவும் மாட்டாது. (நம்மை) மறுக்கும் ஒவ்வொ ருவருக்கும் இவ்வாறே கூலி வழங்குவோம்.” (35:36)

அதில் அவர்கள் விலங்கிடப்படுவார்கள். அவர்களின் கழுத்துக்களிலும் விலங்கிடப்படும். அல்லாஹ் கூறுகிறான்:

﴿ وَتَرَى الْمُجْرِمِينَ يَوْمَئِذٍ مُقَرَّنِينَ فِي الأَصْفَادِ ، سَرَابِيلُهُمْ مِنْ قَطِرَانٍ وَتَغْشَى وُجُوهَهُمُ النَّارُ ﴾ [إبراهيم: ٤٩، ٥٠]

“அந்நாளில் குற்றவாளிகள் சங்கிலிகளால் பிணைத்துக் கட்டப்பட்டிருப்பதை நீர் காண்பீர். அவர்களின் சட்டைகள் தாரினால் தயாரிக்கப்பட்டது. அவர்களின் முகங்களை நெருப்பு மூடிக்கொள்ளும்.” (14:49,50)

நரகவாசிகளின் உணவு ஸக்கூம் எனும் மரமாகும்.

﴿ إِنَّ شَجَرَةَ الزَّقُّومِ ، طَعَامُ الأَثِيمِ ، كَالْمُهْلِ يَغْلِي فِي الْبُطُونِ ، كَغَلْيِ الْحَمِيمِ ﴾ [الدُخان:٤٣ –٤٦]

அல்லாஹ் கூறுகிறான்: “ஸக்கூம் எனும் மரம் பாவி களின் உணவாகும். அது உருக்கிய செம்பு போன்றிருக்கும். அது கொதிக்க வைக்கப்பட்ட நீர் கொதிப் பதைப் போன்று வயிற்றில் கொதிக்கும்.” (44:43-46)

நரகத்தினுடைய வேதனையின் கடுமையையும் சொர்க்கத்திலுள்ள இன்பத்தின் பெருமையையும் பின்வரும் நபிமொழி தெளிவுபடுத்துகிறது:

عَنْ أَنَسٍ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ يُؤْتَى بِأَنْعَمِ أَهْلِ الدُّنْيَا مِنْ أَهْلِ النَّارِ يَوْمَ الْقِيَامَةِ فَيُصْبَغُ فِي النَّارِ صَبْغَةً ثُمَّ يُقَالُ يَا ابْنَ آدَمَ هَلْ رَأَيْتَ خَيْرًا قَطُّ هَلْ مَرَّ بِكَ نَعِيمٌ قَطُّ فَيَقُولُ لَا وَ اللهِ يَا رَبِّ وَيُؤْتَى بِأَشَدِّ النَّاسِ بُؤْسًا فِي الدُّنْيَا مِنْ أَهْلِ الْجَنَّةِ فَيُصْبَغُ صَبْغَةً فِي الْجَنَّةِ فَيُقَالُ لَهُ يَا ابْنَ آدَمَ هَلْ رَأَيْتَ بُؤْسًا قَطُّ هَلْ مَرَّ بِكَ شِدَّةٌ قَطُّ فَيَقُولُ لَا وَاللهِ يَا رَبِّ مَا مَرَّ بِي بُؤْسٌ قَطُّ وَلَا رَأَيْتُ شِدَّةً قَطُّ (م/ ٢٨٠٧)

உலகில் சுகபோகமாக வாழ்ந்த- நரகவாசிகளில் ஒருவன் மறுமையில் கொண்டு வரப்பட்டு நரக நெருப்பில் ஒரு முறை முக்கப்படுவான். பின்பு அவனிடம் “ஆதமின் மகனே! (உலகில்) ஏதும் நன்மையைக் கண்டிருக் கிறாயா? உனக்கு இன்பம் ஏதும் கிடைத்ததா?” என வினவப்படும். அப்போது அவன் “என் இறைவனே! அல்லாஹ்வின் மீது ஆணையாக! எந்த இன்பமும் எனக்கு கிடைத்தில்லையே” எனக் கூறுவான்.

இவ்வாறே உலகில் மிகவும் வறுமையிலும் கஷ்டத்திலும் வாழ்ந்த சொர்க்க வாசிகளில் ஒருவர் கொண்டு வரப்பட்டு ஒரே ஒரு தடவை சொர்க்கத்தில் புகுத்தி, பின்னர் “ஆதமின் மகனே! (உலகில்) வறுமையை நீ கண்டதுண்டா?

உனக்கு துன்பம் ஏதும் ஏற்பட்டதுண்டா?" என்று கேட்கப்படும். அதற்கு அவர் "என் இறைவனே! அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனக்கு எந்த வறுமையும் ஏற்பட்டதில்லை. எந்த துன்பத்தையும் நான் கண்டதில்லை" னக் கூறுவார். (முஸ்லிம்-2807)

நரகத்தில் ஒரு தடவை முக்கியதால் உலகில், தான் அனுபவித்த இன்ப சுகங்கள் அனைத்தையும் இறைவனை நிராகரித்தவன் மறந்துவிடுகிறான். இவ்வாறே ஒரே ஒரு தடவை சொர்க்கத்தில் புகுத்தியதால் உலகில், தான் அனுபவித்த கஷ்டம், வறுமை, துர்ப்பாக்கியம் அனைத்தையும் (ஏக) இறைவனை நம்பியவன் மறந்துவிடுகிறான்.

**சொர்க்கம்**

சொர்க்கம் என்பது கண்ணியமான நிரந்தரமான உலகமாகும். தன் நல்ல டியார்களுக்காக அல்லாஹ் அதை தயார் செய்துள்ளான். அதில் எந்தக் கண்ணும் கண்டிராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதனின் உள்ளத்திலும் உதித்திராத பாக்கியங்கள் உள்ளன.

﴿ فَلَا تَعْلَمُ نَفْسٌ مَا أُخْفِيَ لَهُمْ مِنْ قُرَّةِ أَعْيُنٍ جَزَاءً بِمَا كَانُوا يَعْمَلُونَ ﴾[السجدة:١٧]

அல்லாஹ் கூறுகிறான்: "அவர்கள் செய்த(நற்) செயல்களுக்குக் கூலியாக கண்குளிரும் வகையில் அவர்களுக்காக மறைத்து வைக்கப்பட்டுள்ளதை எவரும் அறியமாட்டார்." (32:17)

சொர்க்கம் பல ஏற்றத்தாழ்வு உடைய பலதரப்பட்ட அந்தஸ்து, படித்தரங் களைக் கொண்டதாகும். அவற்றில் (ஏக இறைவனை) நம்பிக்கை கொண்டவர் களின் தங்குமிடங்கள் அவரவரின் செயல்களைப் பொறுத்து அமையும்.

﴿ يَرْفَعِ اللهُ الَّذِينَ آمَنُوا مِنْكُمْ وَالَّذِينَ أُوتُوا العِلْمَ دَرَجَاتٍ ﴾ [المجادلة:١١]

அல்லாஹ் கூறுகிறான்: "உங்களில் நம்பிக்கை கொண்டோருக்கும் கல்வி வழங்கப்பட்டோருக்கும் அல்லாஹ் பல தகுதிகளை உயர்த்துவான்." (58:11)

சொர்க்கத்தில் அவர்கள் விரும்பியவற்றை உண்ணவும் பருகவும் செய்வார்கள். அதில் மாற்றமடையாத நீராறுகளும், சுவை கெட்டுப்போகாத பாலாறுகளும், தூய்மையான தேனாறுகளும், அருந்துபவர்களுக்கு இன்பம் தரும் மது ஆறுகளும் இருக்கும். அவர்களின் மது உலகத்திலுள்ள மதுவைப் போன்று இருக்காது.

﴿ يُطَافُ عَلَيْهِمْ بِكَأْسٍ مِنْ مَعِينٍ ، بَيْضَاءَ لَذَّةٍ لِلشَّارِبِينَ،لَا فِيهَا غَوْلٌ وَلَا هُمْ عَنْهَا يُنْزَفُونَ ﴾ [الصَّفات: ٤٥ -٤٧]

அல்லாஹ் கூறுகிறான்: “ஊற்றிலிருந்து நிரப்பப்பட்ட குவளைகள் அவர்களைச் சுற்றி வரும். (அது) வெண்மையானதும் அருந்துவோருக்கு இன்பம் அளிப்பதும் ஆகும். அதில் எந்தக் கேடும் இல்லை. அதனால் அவர்கள் மதிமயக்கப்படவும் மாட்டார்கள்.” (37:45,46,47)

சொர்க்கவாசிகளுக்கு சொர்க்கத்தில் “ஹூருல் ஈன்” எனும் பெண்கள் மண முடித்து வைக்கப்படுவார்கள்.

عن أَنَسِ بْنَ مَالِكٍ عَنْ النَّبِيِّ ﷺ قال: وَلَوْ أَنَّ امْرَأَةً مِنْ أَهْلِ الْجَنَّةِ اطَّلَعَتْ إِلَى أَهْلِ الْأَرْضِ لَأَضَاءَتْ مَا بَيْنَهُمَا وَلَمَلَأَتْهُ رِيحًا (خ/ ٢٧٩٦)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: “சொர்க்கத்துப் பெண்களில் ஒருத்தி இப்பூமியில் உள்ளவர்களை எட்டிப் பார்த்தால் வானத்திற்கும், பூமிக்கும் இடைப்பட்ட பகுதிகளைப் பிரகாசிக்கச் செய்திடுவாள். அவற்றில் நறுமணம் வீசச் செய்வாள்”. (புகாரி-2796)

சொர்க்கவாசிகளின் மிகப் பெரும் பாக்கியம் அல்லாஹ்வைப் பார்ப்பதாகும். சொர்க்கவாசிகள் மல ஜலம் கழிக்கவோ, மூக்குச் சிந்தவோ, உமிழவோ மாட்டார்கள். அவர்களின் சீப்புகள் தங்கமாகவும் வியர்வை கஸ்தூரியாகவும் இருக்கும். அவர்களின் இவ்வருட்பாக்கியம் முடிவுறாத, குறைந்திடாத நிரந்தர பாக்கியமாகும்.

عَنْ أَبِي هُرَيْرَةَ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ مَنْ يَدْخُلُ الْجَنَّةَ يَنْعَمُ لَا يَبْأَسُ لَا تَبْلَى ثِيَابُهُ وَلَا يَفْنَى شَبَابُهُ (م/ ٢٨٣٦)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: “சொர்க்கம் செல்பவர் இன்பம் துய்த்திடுவார். சிரமப்பட மாட்டார், அவரது ஆடை இத்துப்போய்விடாது, அவரது வாலிபம் அழிந்துவிடாது. (முஸ்லிம்-2836)

சொர்க்கவாசிகளின் குறைந்த பாக்கியம் உலகிலுள்ள இன்பங்கள் அனைத்தும் பத்துமுறை வழங்கப்படுவதை விடவும் சிறந்ததாகும். இது நம்பிக்கை கொண்டோரில் நரகிலிருந்து இறுதியாக வெளிறேுபவருக்கு கிடைக்கும்.

# உள்ளே..